புறநானூற்றுச்
சொற்பொழிவுகள்



கழக வெளியீடு: ௩௬௦

# புறநானூற்றுச்



# சொற்பொழிவுகள்

(பேராசிரியர் பன்னிருவர்
சொற்பொழிவுகள்)

19, 20, 22-2-44-ல் சென்னையில் நடைபெற்ற
புறநானூற்று மாநாட்டில் நிகழ்த்திய
தலைமையுரையும், சொற்பொழிவுகளும்
அடங்கியுள்ளன.



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Feb., 1944.
Reprints: May, 1948; June, 1956.

THIRUNELVELI.

Appar Acnakam, 2/140, Broadway, Madras - 1—C. 1200.

## பதிப்புரை

மக்களுக்குப் புற அறிவும் வேண்டும்; அகவுணர்வும் வேண்டும்; இக் காலத்தில் மேல் நாட்டவர் புற அறிவில் மிகுந்து நிற்கின்றனர். சங்க காலத்தில் நம் தமிழ் முன்னோர், இருவகையிலும் விளக்கம் பெற்றிருந்தனர். அக் காலத்து இலக்கியங்கள் 'அகம், புறம்' என்னும் பிரிவுகளில் இயற்றப்பட்டிருக்கும் அமைப்பே, இவ்வுண்மையை எடுத்துக்காட்டும். அகம் புறம்

என்னும் இப் பாகுபாடு தமிழர்கட்கு இன்று நேற்றுத் தோன்றியதன்று; அது காலங் கண்டது. தமிழர்கட்கே சிறப்புடையது மாகும்.

தமிழ் மக்கள் எப்போதுமே ஆழ்ந்த உணர்வினர்; அக உணர்வினர். புற அறிவுகளிற் படருந்தோறும் அகனமர்ந்த ஆழ்ந்த அன்பும், மெய்யுணர்வாகிய பேரருளும் அவர்களுக்கு ஊற்றெடுத்துப் பொங்கிவிடும். அந்த அன்பு அருளூற்றுக்களிலேயே தேங்கி மிதந்த பேருணர்வினர் சங்கத் தமிழர். அதனால், சங்கத் தமிழில் அகப்பொருளிலக்கியங்கள் மிகுதியாக இருப்பது தோற்றும். ஆனால், அவ் வகப்பொரு ளிலக்கியங்களிலும் பெரும் பகுதி புறப்பொருள் விரிவுகளே என்பதை மறந்துவிட லாகாது- ஒரு வரி அகவுணர்வைப் புலப்படுத்துவதானால், அதற்குப் பல வரிகள் புற அறிவின் விரிவுகளா யிருக்கும். பத்துப் பாட்டைச் சேர்ந்த 'பட்டினப்பாலை' என்னும் நூல் ஓர் அகப்பொரு ளிலக்கியம் என்பர்; அது முந்நூற்றொரு வரிகளை உடையது. அத்தனை வரிகளில் நான்கு வரிகளே அகவுணர்வைப் புலப்படுத்துவன. மற்ற வரிகளிலெல்லாம் புற அறிவின் விரிவுகளே விளக்கமாக வருகின்றன.

புற அறிவு விரிதலில்லாமல் அகவுணர்வு செழிக்காது. புற அறிவின் பரந்த விரிவே அகவுணர்வின் அழகுச் செழிப்புக்குக் காரணம். பல காரணங்களால் தமிழ் நாடு இடைக்காலத்தில் புறத்தைப் புறக்கணித்திருந்தது. அதனால் அகச் செழிப்பும் இன்றி மங்கியது. இப்போது சில ஆண்டுகளாகத், தமிழர், புறத்தின் தேவையைத் தெரிந்துகொண்டனர். பொருள் வேண்டும் என்கின்றனர்; கலை வேண்டும், தொழில் வேண்டும் என்கின்றனர்; படை வேண்டும்; வீரம் வேண்டும் என்கின்றனர்; அரசியல் வேண்டும்; ஆட்சி வேண்டும் என்கின்றனர். தமிழர் ஒவ்வொருவர்க்கும் இப்போது நாட்டு வேட்கையும், நாட்டு வர

லாற்று வேட்கையும் வீறிட்டிருக்கின்றன. எங்கே புறப் பொருள் தமிழ் நூல்? எங்கே எம் முன்னோர் வரலாறுகள்? என்னும் புறத் துடிப்பு எங்கும் கேட்கப்படுகின்றது. இங்கே இப்போது 'புறநானூறு மாநாடும்' நடைபெறுகின்றது.

புறநானூறு கடைச் சங்க காலத்தில் திரட்டப்பட்ட ஒரு தொகை நூல். அதன்கண், முச்சங்க காலத்துப் பாடல்களும் உள்ளன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன், பல ஆயிரம் ஆண்டுகள் தமிழன்னை செழித்த நிலையில் திகழ்ந்தனள்; மொழிக்கும் நாகரிகத்துக்கும் அரசாய், உலகத்துக்கே எடுத்துக் காட்டாய் விளங்கினள். அக்காலத்துப் பெரும்புலவர் பலர் பாட்டுக்களே இந்நூலில் திரட்டப்பட்டுள்ளன. அக் காலத்துப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளின் தமிழர் வாழ்க்கைத்திறம், உள்ளது உள்ளவாறே, அப் பாடல்களில் ஓவியம்போல விளக்கப்பட்டுள்ளன. அப்படி நானூறு பாடல்கள் உள்ளன. கலை, நாகரிகம், வீரம், அரசியல் முதலிய பழந்தமிழர் புற அறிவுத் திறங்களின் களஞ்சியமே இப் புறநானூறு ஆகும்.

தமிழறிஞர் பதினொருவர் இப் புறப் பொருட் கூறுகளைத் தனித் தனியாக ஆராய்ந்து விரித்துரைக்கும் பதினொரு சொற்பொழிவுகளையும், மாநாட்டுத் தலைவரவர்களின் அரிய தலைமையுரையையுஞ் சேர்த்துப் 'புறநானூற்றுச் சொற்பொழிவுகள்' என்னுந் தலைப்பில் இப்போது இச் சிறு நூல் வெளியிடப்படுகின்றது. முன்னும் கலித்தொகை, குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை மாநாடுகள் நடைபெற்றபோது, சொற்பொழிவு நூல், மாநாட்டுக் காலங்களிலேயே வெளியிடப்பட்டுள்ளன. விரிவுரைகளை நேரிற் கேட்டவர்களுக்கும், கேளாத ஏனையோர்க்கும் இந் நூல்கள் ஆராய்ச்சிக்கும், பயிற்சிக்கும் ஆட்சிக்கும் பெரிதும் உதவும்.

தமிழர் நல்வாழ்வுக்கு இப் புறநானூற்றுச் சொற்பொழிவு நூல் ஒரு தனிச் சிறப்பாகப் பயன்படுமென்று தெரிவித்துக் கொள்கின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

க—உஅ

# சொற்பொழிவுகள்

க.

புறநானூறும் புலவரும்:
வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., பி.எல்.,

*தமிழ் விரிவுரையாளர்,*
*அண்ணாமலைப் பல்கலைக் கழகம்*

உகூ—ருo

உ. புறநானூறும் கலைகளும்:
டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார், எம். ஏ.,
*தமிழ் விரிவுரையாளர்,*
*அண்ணாமலைப் பல்கலைக் கழகம்*

ருக—சாஅ

ந. புறநானூறும் போர்களும்:

வித்துவான் அ. கிருட்டினமூர்த்தி,
ஐயம்பேட்டை

சாகூ—அஅ

ச. புறநானூறும் இலக்கியமும்:

பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
தாம்பரம் கிறித்தவக் கல்லூரி

அகூ—கக௨

ரு. புறநானூறும் கல்வெட்டுக்களும்:
T. V. சதாசிவ பண்டாரத்தார்,
கல்வெட்டாராய்ச்சியாளர்,
பெருந்தமிழாசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ககங—கஙகூ



சா. புறநானூறும் வரலாற்றுச் சிறப்பும்:
வித்துவான், மா. இராசமாணிக்கம் பிள்ளை,
பி.ஓ.எல்.,
தமிழாசிரியர்,
முத்தியாலுப்பேட்டை
உயர்நிலைப்பள்ளி,
சென்னை
ககஎ—கடுகூ

எ. புறநானூறும் மன்னர்களும்:
வித்துவான் மு. இராசக் கண்ணனர், பி.ஓ.எல்.,

நூல் ஆய்வாளர்,
நூற்பதிவு அலுவலகம்,
சென்னை

கடுஎ—ககூ உ

அ. புறநானூறு காட்டும் தமிழ்நாகரிகம்:
வித்துவான் ஔவை, சு. துரைசாமிப் பிள்ளை,
பெருந் தமிழாசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

ககூ௩—உ௩௪

கூ. புறநானூறும் வானநூலும்:
கணியர், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,
செயலாளர்,
சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்

உ௩டு—உ௪௪

க0. புறநானூறும்—சமயமும்:
கழகப்புலவர், இளவழகனார்,

உ௪டு—௩உஅ

கக. புறநானூறும் மொழியும்:
புலவர் ஞா. தேவநேயனார், பி. ஓ. எல்.,

தமிழாசிரியர்,
முத்தையாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி,
சென்னை ௩௨௧—௩௯௪

# தலைமையுரை* . . . .

[திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி.ஏ., பி.எல்.]

## க. தோற்றுவாய்

இந்நாள் தமிழ் நாட்டுக்கு ஒரு நன்னாள் ஆகும். தமிழ்த் தாயைப் போற்றும் அன்பரும் அறிஞரும் நூற்றுக்கணக்காக இங்கு நிறைந்திருக்கின்றார்கள். தமிழ் நாடெங்கும் தமிழ் முழக்கம் செழித்தோங்குகின்றது. இலக்கிய மாநாடுகள், இசை மாநாடுகள்—எங்கும் தமிழ் மணங் கமழ்கின்றது. சிந்தைக் கினிய, செவிக் கினிய செந்தமிழைத் தமிழ் நாட்டார் சீராட்டத் தொடங்கிவிட்டார்கள். பண்டைத் தமிழ்நூல்களைப் படிப்பதற்கும் பாதுகாப்பதற்கும் தொண்டர் பல்லாயிரவர் துடித்துக் கொண்டிருக்கின்றார்கள். 'இணையற்ற கவிஞரையும் அறிஞரையும் ஈன்ற நாடு எங்கள் நாடு' என்று தமிழ் மாணவர்கள் இறுமாந்து கூறுகின்றார்கள். தாய்மொழியைப் போற்றாதே ஆற்றநாள் போக்கினோமே என்று தமிழ் நாட்டு முதியோர் பலர் கழிவிரக்கங்கொண்டு தயங்குகின்றார்கள். இத்தகைய உணர்ச்சியின் வடிவமே இம் மாநாடு. தலைசிறந்த ஒரு தமிழ்நூலின் திறத்தினை விரித்துரைப்பதே இம் மாநாட்டின் கருத்து. புறநானூறு என்னும் பெருமைசான்ற நூலைப்பற்றிப் புலவர் பலர் பேச இசைந்துள்ளார்கள். அவர் தம் நல்லுரைக்கு முன்னுரையும் பின்னுரையும் நிகழ்த்தும் பேறு எனக்கு வாய்த்திருக்கின்றது. இம் மாநாடு சிறப்புற நடைபெறுவதற்கு உங்கள் அன்பையும், ஆதரவையும் வேண்டுகின்றேன்.

---

* 19—2—44-ல் புறநானூற்று மாநாட்டில் நிகழ்த்தியது.

பழந் தமிழ் நாட்டின் தன்மையை எடுத்துக் காட்டும் தொகை நூல்களில் தலைசிறந்தது புறநானூறு என்பர். அந்நூலில், படைத்திறம் வாய்ந்த பெருவேந்தரைக் காணலாம்; கொடைத்திறம் வாய்ந்த வள்ளல்களைக் காணலாம்; கற்றறிந்து அடங்கிய சான்றோரைக் காணலாம். பழந் தமிழ்க் குலங்களையும், குடிகளையும் காணலாம்; சுருங்கச்சொல்லின் கலைமகளும், திருமகளும் களி நடம் புரிந்த பழந் தமிழ் நாட்டைப் புறநானூற்றிலே காணலாம்.

## உ. கவிச்செல்வமும் புவிச்செல்வமும்

முற்காலத் தமிழ் மன்னர் பலர், பொன் மலர் மணம் பெற்றாற் போன்று புவிச் செல்வத்தோடு கவிச் செல்வமும் உடையராய் விளங்கினார்கள். முத்தமிழ் நாட்டை ஆண்ட சேர சோழ பாண்டியரிற் சிலர் பாடிய பாடல்கள் புறநானூற்றிலே காணப்படும். கற்பின் செல்வியாகிய கண்ணகியின் சீற்றத்தால் ஆவி துறந்து, அழியாப் புகழ் பெற்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன் கவிபாடும் திறம் பெற்ற காவலருள் ஒருவன். மக்களாய்ப் பிறந்தோர் எல்லோரும் கல்வி கற்று மேம்படவேண்டும் என்ற ஆசையை அம்மன்னன் ஒரு பாட்டால் அறிவிக்கின்றான்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
[1]பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே

........................................

ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னது அவருள்
அறிவுடை யோனறு அரசும் செல்லும்" (புறம் : கஅந)

என்ற பாட்டு, பகுத்தறிவைப் பயக்கும்
வரசன் கொண்டிருந்த ஆர்வத்தைக்

கல்வியில் அவ்
காட்டுகின்றது.

எவர்க்கும் பிறப்பினல் வரும் உயர்வினும் அறிவினல்
வரும் பெருமையே சிறந்தது என்றும், அறிவுடைய ஒரு

1. பிற்றைநிலை - வழிபாட்டு நிலை.

தலைமையுரை

ந.

வனை அரசனும் விரும்புவான் என்றும்
பாண்டியன் நெடுஞ்
புற எடுத்துக் கூறுகின்றான்.

இனி, சோழநாட்டு அரசனாகிய கோப்பெருஞ் சோழனைச் சிறிது பார்ப்போம். அவனும் கவிபாடும் திறம் பெற்றவன். தமிழறிந்த புலவர்களைத் தக்கவாறு போற்றியவன். அச் சோழன் சிறப்பிலும் செல்வத்திலும் தனக்கு நிகராய ஒருவனைத் தோழனாகக் கொண்டான் அல்லன்; பிசிராந்தை என்னும் தமிழ்ப் புலவரையே உயிர் நண்பராகக் கொண்டான். பெரும் சோழனும் பிசிராந்தையும் பல வகையில் வேறுபட்டவர்கள். சோழன் தலைநகராகிய உறையூரில் அரசு வீற்றிருந்தான்; பிசிராந்தை பாண்டி நாட்டிலுள்ள பிசிர் என்ற சிற்றூரில் குடியிருந்தார். சோழன் செல்வச் செழுமை வாய்ந்தவன்; பிசிராந்தை புலவர்க்குரிய வறுமை பூண்டவர். ஆயினும், சோழனுக்கு ஆந்தையாரே உயிர்த் தோழராயினர். அம் மன்னன் உலக வாழ்க்கையில் வெறுப்புற்று, நாடு துறந்து, உண்ணா நோன்பினை மேற்கொண்டபொழுது அவன் மனம் பிசிராந்தையை நாடிற்று; தோழன் வருவான் வருவான் என்று வழிமேல் விழி வைத்து ஆவி காத்திருந்தான்; 'எப்படியும் பிசிராந்தையார் வந்தே தீர்வார்' என்று அருகேயிருந்த அன்பரிடம் அகம் குழைந்து கூறினன்.

[1] "தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
பிசிரோன் என்பஎன் உயிர்ஓம் புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே"

(புறம் : உகூ)

என்பது அங்கிலேயில் அவன் பாடிய பாட்டு. இங்ஙனம் ஏங்கி நின்ற நல்லுயிர் நீங்கிப் போயிற்று. ஆந்தையார் வந்து சேர்ந்தார்; நிகழ்ந்ததை அறிந்தார்; தாமும் உண்ணு நோன்பு இருந்து, தன் உயிர்கொண்டு சோழன் நல்லுயிரைத் தேடச் செல்வார்போல ஆவி துறந்தார்.

---

1. தென்னம் பொருப்பன் - பொதியின் மலையையுடைய பாண்டியன்.

## ௬ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

கவிபாடும் சிறப்பு வாய்ந்திருந்த சேர மன்னருள் ஒருவன் சேரமான் கணைக்கால் இரும்பொறை. இம் மன்னன் சோழன் செங்கணானோடு பெரும்போர் செய்து தோற்றான். வெற்றிபெற்ற சோழன் சேரமானைப் பிடித்துச் சிறைக் கோட்டத்தில் அடைத்தான். சிறையிடைத் தேம்பிய சேரன் தாகமுற்று வருந்தினான்; தண்ணீர் தரும்படி சிறைக்காவலாளனை வேண்டினான். அவன் உடனே தண்ணீர் எடுத்துவராமல் காலம் தாழ்த்துக் கொண்டுவந்தான். அத் தண்ணீரைப் பருகி உயிர் வாழ்வதற்கு இம் மான வேந்தன் மனம் இசையவில்லை; "மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே" என்றெண்ணி உயிர் துறக்கத் துணிந்தான்; காவலாளன் கொடுத்த தண்ணீர்க் கலத்தைக் கையிலே வைத்துக்கொண்டு ஒரு கவி பாடினான்.

[1] "கேளல் கேளிர் வேளாண்[3] சிறுபதம்
[4] மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்

தாம்இரந்து உண்ணும் அளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே''

(புறம் : எச)

என்று பாடி ஆவி சோர்ந்தான்.

## ௩. முற்காலப் போர்முறை

பகைமையும் போரும் இவ்வுலகில் எக்காலத்தும் உண்டு. முற்காலப் போர் முறைகளில் சிலவற்றைப் புறநானூற்றிலே காணலாம். அக் காலத்தில் ஓர் அரசன் மாற்றரசனுக்குரிய நாட்டின்மீது படை எடுக்குங்கால் அந் நாட்டில் வாழும் உயிர்களை எல்லாம் நாசமாக்குவதில்லை; பசுக்களையும், பார்ப்பாரையும், பெண்களையும், பிணியாளரையும், இவர் போன்ற பிறரையும், போர் நிகழும் நிலத்தை விட்டுப் புறத்தே போய்விடும்படி எச்சரித்த பின்னரே படையெடுப்பான். இத்தகைய அறப்போர்

1. கேளல் கேளிர் - (ஈண்டுச்) சிறைக்கோட்டக்காவலர்.
2. வேளாண்மை - உதவி.
3. சிறுபதம் - தண்ணீர்.
4. மதுகை - மனவலி.
5. ஈன்மரோ - பெறுவாரோ.

முறை பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியிடம் அமைந் திருந்ததாக நெட்டிமையார் என்ற புலவர் பாராட்டு கின்றார் :

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் [1]பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி."

(புறம்: க)

என்று அறப்போர் புரிந்த பாண்டியனைப் வாழ்த்தினர். இன்னும் போர்க்களத்தில்

புலவர் புகழ்ந்து
வீரர் அல்லாதார்

மேலும்,
மேலும்,

புறங்காட்டி ஓடுவார் மேலும், புண்பட்டார் முதியார் இளையார் மேலும் படைக்கலம் செலுத்த லாகாது என்பது பழந்தமிழர் கொள்கை.
இத்தகையோர்
மீது படைக்கலம் செலுத்தும் போர்வீரரைப்
'படைமடம்

பட்டோர்' என்று அறிஞர் பழித்துரைப்பார்கள். வையாவிக்கோப் பெரும் பேகனைப் புகழ்துற்ற பரணர் என்னும் புலவர்,

"வரையா மரபின் மாரி போலக்
[2] கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடை[3]மடம் படுதல் அல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே."

(புறம்: கசஉ)

என்று பாராட்டினர். இல்லாதவர்க்கும் உள்ளவர்க்கும், கேளாதவர்க்கும் கேட்பவர்க்கும் வரையாது கொடுத்தலே கொடைமடம் எனப்படும்.* இத்தகைய கொடைமடம் பேகன்பால் அமைந்திருந்ததே அன்றிப் படைமடம் என்பது அவனிடம் இல்லை என்று பரணர் கூறுகின்றார்.

---

1. பூட்கை - மேற்கோள்.
2. கடாம் - மதம். 3. மடம்அறியாமை.

* கொடை மடத்தின் தன்மையை வில்லி பாரதம் கிருட்டினன் தூது, உஙடு-ம் செய்யுளிற் காண்க.

முற்காலத்தில் தமிழரசர்கள் கட்டிய கோட்டைகளும், கொத்தளங்களும் புறநானூற்றிலே குறிக்கப்பட்டுள்ளன. பாண்டிநாட்டில் கானப்பேர் என்ற ஊரில் ஒரு பெரிய கோட்டை இருந்தது. ஆழ்ந்த அகழியும், ஓங்கிய மதிலும், நிறைந்த ஞாயிலும் செறிந்த காடும் அக் கோட்டையின் உறுப்புக்கள்.

"நிலவரை யிறந்த குண்டுகண் அகழி
வான்தோய் வன்ன புரிசை, விசும்பின்
மீன்பூத் தன்ன உருவ [1]ஞாயில்
கதிர் நுழை கல்லா மரம்பயில் [2]கடிமிளை
அருங்[3]குறும் புடுத்த கானப் பேர்[4]எயில்."   (புறம்: உ௧)

என்று அக்கோட்டையின் பெருமையைப் பாடினார் மூலங்கிழார். கானப்பேர் எயில், வேங்கை மார்பன்

ஐயூர்
என்ற
வீரனுக்குரியதாய் இருந்தது. அக்கோட்டையைத் தாக்கி, வேங்கை மார்பனை வென்றான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி; அவ்வெற்றியின் காரணமாகக் 'கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' என்று பாராட்டப் பெற்றான். இந்நாளில் கானப்பேர் என்பது காளையார்கோவில் என வழங்குகின்றது.*

கானப்பேரெயிலுக்கு அருகே ஏழெயில் என்ற கோட்டையும் இருந்ததாகத் தெரிகின்றது. அக்கோட்டையைக் கைப்பற்றினன் நலங்கிள்ளி என்னும் சோழன்.

"தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
ஏழெயிற் கதவம் எறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வாய் உழுவை பொறிக்கும் ஆற்றலை." (புறம்: கக)

என்று கோவூர்கிழார் அவனைப் புகழ்ந்துள்ளார். இக்காலத்தில் ஏழு பொன் கோட்டை என வழங்கும் இடமே பழைய ஏழெயில் என்று கருதப்படுகின்றது.

---

1. ஞாயில்- மதிலின்மேலுள்ள அம்பெய்யும் அறைக்கு நடுவாய் எய்து மறையும் சூட்டு. 2. கடிமிளை - காவற்காடு. 3. குறும்பு - சிற்றரண். 4. எயில் - அரண்.

* இது பாடல் பெற்ற சிவத்தலம். இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கைத் தாலுக்காவில் உள்ளது.





தொண்டை நாட்டில் முற்காலத்திருந்த இருபத்து நான்கு கோட்டங்களில் ஒன்று எயிற்கோட்டம். அக்கோட்டத்தில் அமைந்தது காஞ்சிமா நகரம். எயிற்பதி என்று அந்நகரைச் சேக்கிழார்
காஞ்சிமா நகரில் இருந்த எயிலின்

குறித்துப்போந்தார்.
பெருமை ஒரு பழம்

பாட்டால் விளங்குகின்றது.

"எரி இரண்டும் சிறகா எயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவாச்—சீரிய
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு."

என்ற வெண்பா காஞ்சிப்பதியின் பழைய வடிவத்தைக் காட்டுகின்றது. சோழநாட்டின் ஆதித் தலைநகராகிய திருவாரூருக்கு அருகே பேரெயில் என்னும் பெயருடைய ஊர் ஒன்று உண்டு. அது தேவாரப் பாடல் பெற்ற பழம் பதி. தமிழ் மன்னர்கள் அவ்விடத்தில் பெருங்கோட்டை கட்டியிருந்தார்கள் என்று தோற்றுகிறது. இந்நாளில் அவ்வூர்ப் பெயர் சிதைந்து, ஓகைப்பேரையூர்* என்று வழங்குகின்றது.

கோட்டையின் பல கூறுகளும் உறுப்புக்களும் புறப் பாட்டுக்களாற் புலனாகின்றன. கோட்டையின் சிறந்த அங்கம் மதில். மதிலைக் குறிக்கும் தனித்தமிழ்ச் சொற்கள் பலவாகும். ஆரை, அரண், எயில், இஞ்சி, நொச்சி, புரிசை - இவை மதிலைக் குறிக்கும். மதில்களில் செப்புத் தகடுகளைச் செறித்துத் திண்மை செய்யும் முறை முற் காலத்தில் கையாளப்பட்டதாகத் தெரிகின்றது. "செம் பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்" என்று இலங்கைமா நகரின் திண்ணிய மதில்களின் திறத்தினையும், அம் மதி லால் சூழப்பட்ட நகரத்தின் செழுமையையும் கூறிப் போந்தார் கம்பர்.

---

* இது தஞ்சாவூர்ச் சில்லா, மன்னார்குடித் தாலுக்காவில் உள்ளது.

தென்பாண்டி நாட்டாகிய திருநெல்வேலியில் பாண்டி மன்னர் கட்டியிருந்த கோட்டையின் அடையாளங்கள் பல இடங்களில் உண்டு. அவற்றுள் ஒன்று* பொருநை ஆற்றின் கரையில் அமைந்த செப்பறை யாகும். செப்பறை என்பது செம்பினால் செய்த அறை என்ற பொருளைத் தரும். செப்பறை என்ற இடத்தில் இக்காலத்தில் குடி படை ஒன்றும் இல்லை. அழகிய கூத்தர் கோவில் ஒன்றே காணப்படுகின்றது. ஆயினும், அக் கோவிலைச் சுற்றிச் சிதைந்த மதில்களும், மேடுகளும் உண்டு. செப்பறைக்கு எதிரே ஆற்றின் மறுகரையில் மணற் படை வீடு என்ற ஊர் அமைந்துள்ளது. படை வீடு என்பது அரசனது படை தங்கி இருக்கும் இடமாகும். பாண்டி மன்னன் சேனைக் குரிய மணற் படை வீட்டுக்கு அண்மையில் செப்பறை அமைந்திருத்தலை நோக்கும்பொழுது அவ்விடம் பாண்டியனுக்குரிய கோட்டைகளுள் ஒன்றாக இருந்திருக்கலாம் என்று தோற்றுகின்றது.

> "கடுமுரண் முதலைய நெடுநீ[1]ரிலஞ்சிச்
> செம்புறழ் புரிசைச் செம்மல் மூதூர்." (புறம்: ௩௭)

என்று நப்பசலையார் கருவூரைச் சிறப்பித்த முறை ஈண்டுக்

கருதத் தக்கதாகும்.

மதிலின் உறுப்புக்களில் ஞாயில் மிகச் சிறந்த தென்பது தமிழ்நாட்டார் கருத்து. ஞாயில் என்பது படையெடுத்துவரும் பகைவர்மீது மறைந்து நின்று அம்பு எய்வதற்குரிய அறைகளாகும். மதிலுக்கு ஞாயிலே சிறந்த உறுப்பென்பது புறநானூற்றுப் பாட்டு ஒன்றால் விளங்குகின்றது.

"மதிலும் ஞாயில் இன்றே, கிடங்கும்
நீஇர் இன்மையின் கன்றுமேய்ந்(து)
ஊரது நிலைமையும் இதுவே"

உகளும்

(புறம்: ௩௫௫)

என்று பாழாய்க் கிடந்த ஒரு கோட்டையின் தன்மையை எடுத்துக் காட்டினார் ஒரு புலவர். கோட்டையைச் சூழ்ந்த

* பொருநை ஆறு – தாம்பிரபரணி நதி.    1. இலஞ்சி – மடு.



அகழியில் தண்ணீர் இன்றிப் புல்லும் புதரும் செறிந்திருக்கின்றன; மதில்கள் ஞாயில் இன்றிப் பாழ்பட்டிருக்கின்றன என்பது இப்பாட்டின் கருத்து.

அகழி சூழ்ந்த இடத்தைக் கிடங்கில் என்றும் கூறுவர். முன்னொருகாலத்தில் கிடங்கில் என்ற பெயருடைய கோட்டை நல்லியக்கோடன் என்னும் சிற்றரசனுக்கு உரியதாக இருந்தது. பத்துப்பாட்டுள் ஒன்றாகிய சிறுபாணாற்றுப் படையில் பாராட்டப்படுகின்ற தலைவன் இவனே. இவ்வரசனை நன்னாகனார் பாடிய பாட்டுப் புறநானூற்றிலே தொகுக்கப்பட்டிருக்கின்றது. கிடங்கில் என்னும்கோட்டை இப்பொழுது திண்டிவனத்திற்கருகே அழிந்து கிடக்கின்றது. சிதைந்த அகழியும் இடிந்த கோட்டையும் அதன் பழம் பெருமையை எடுத்துரைக்கின்றன. திண்டிவனம் என்ற சொல் 'புளியங்காடு' என்ற பொருளைத் தரும். இவ்வனம் முற்காலத்திலிருந்த கிடங்கிற் கோட்டையின் காட்டரணாக இருந்தது போலும், அக் காடு நாளடைவில் நாடாயிற்று. பழைய கோட்டையும் ஊரும் இருந்த இடம் பாழாய்க் கிடக்கின்றது.

திண்டிவனத்திற்கு மேற்கே பதினேழு கல் தூரத்தில் செஞ்சிக் கோட்டை அமைந்திருக்கின்றது. செஞ்சி என்ற சொல்லின் பொருள் செவ்வையாக விளங்காவிடினும் கோட்டை மதிலைக் குறிக்கும் இஞ்சி என்பது அவ் வூர்ப் பெயரிலே குழைந்து கிடப்பதாகத் தோன்றுகின்றது.

தரையில் அமைந்த கோட்டைகளே யன்றி வானத்தில் ஊர்ந்து செல்லும் கோட்டைகளையும் முற்காலத் தமிழர் அறிந்திருந்தார்கள். ஆகாயக் கோட்டைகளைத் 'தூங்கு எயில்' என்று குறித்தார்கள். ஆகாய வழியாகப் போந்த மூன்று பெரிய கோட்டைகளை ஒரு சோழ மன்னன் தகர்த்தெறிந்த செய்தியைப் புறநானூறு முதலிய பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன. பகைவரை அழிக்கும்

---

1. திண்டிவனம் திம்திரிணீவனம் என்ற வடசொல்லின் சிதைவு.



படைத்திறமைக்கு அச்சோழனையே
பாடினார் புலவர்.

எடுத்துக் காட்டிப்

> [1] "ஒன்னார் உட்கும் [2] துன்னருங் கடுந்திறல்
> தூங்கெயில் எறிந்தநின் ஊங்கணோர் நினைப்பின்
> அடுதல்நின் புகழும் அன்றே" (புறம் : ௩௯)

என்று நப்பசலையார் கிள்ளி வளவனைப் பாடிய பான்மையால் இவ்வுண்மை விளங்கும். இத்தகைய அருஞ் செயல் புரிந்த சோழனது இயற்பெயர் தெரியவில்லை. அவன் எப் படையைக்கொண்டு ஆகாயக் கோட்டையைத் தகர்த்

தான் என்பதும் தெரியவில்லை. ஆயினும். அவனுக்கு அமைந்துள்ள சிறப்புப் பெயரைப் பார்க்குங்கால் அவன் தோள் வலிமையை அக்காலத்தினர் பெரிதும் பாராட்டினர் என்பது புலனாகும். " தூங்கு எயில் எறிந்த தொடித் தோட் செம்பியன் " என்பது அவன் சிறப்புப் பெயர்.

## ௬. குறுநில மன்னர்

புறநானூற்றிலே புகழப்படுகின்ற குறுநில மன்னர் பலர், குன்று சார்ந்த நாடுகளில் வாழ்ந்ததாகத் தெரிகின்றது. பாண்டிநாட்டில் பழனிமலையை ஆண்ட தலைவன் பேகன். பறம்பு மலையை ஆண்டவன் பாரி. கோடை மலையை ஆண்டவன் கடிய நெடு வேட்டுவன். பொதிய மலையை ஆண்டவன் ஆய் அண்டிரன். சோழ நாட்டில் வல்வில் ஓரி என்பவன் கொல்லி மலையை ஆண்டான். அதிகமான் குதிரை மலையை ஆண்டான். குமணன் முதிர மலையை ஆண்டான். பெரு நள்ளி என்பவன் தோட்டி மலையை ஆண்டான். இச் சிற்றரசர் பலர் பேரரசரினும் சாலப் புகழ் பெற்று விளங்கினர்; வறிஞரை ஆதரித்தனர்; அறிஞரைப் போற்றினர். பாண்டி நாட்டிலுள்ள பறம்பு மலையையும் அதனை அடுத்த முந்நூறு ஊர்களையும் ஆண்டுவந்தான் பாரி. அவன் மனத்தில் அமைந்த அருளுக்குக் கங்கு கரையில்லை. அவன் நாவில் இல்லை யென்ற சொல்லே இல்லை.

---

1. ஒன்னார் - பகைவர். 2. துன்னல் - நெருங்கல்.

தலைமையுரை

காட்டில் குழைந்து கிடந்த முல்லைக் கொடி ஒன்றைக் கண்டு மனம கரைநது, அது தழைதது படாவதறகாகத தன அழகிய தேரை அவ்விடத்தே விட்டுச் சென்ற பாரியின் மனப்பான்மையைத் தமிழ் உலகம் வியந்து மகிழ்ந்தது. பயன் கருதாது கொடுத்த பாரியின் பெருந் தகைமையைப் பொய்யறியாக் கபிலர் புகழ்ந்து போற்றினர்.

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்(டு) ஈண்டு உலகுபுரப் பதுவே" (புறம்: க0எ) என்று பாடினர் கபிலர். "செம்மை சான்ற புலவரெல்லாம் பாரி ஒருவனையே மாறி மாறிப் புகழ்கின்றனரே! இவ் வுலகததைக காபபவன பாரி ஒருவனதானா? மழையும உலகத்தைக் காக்கின்றதன்றோ? என்று கபிலர் பழிப்பார் போலப் பாரியின் பெருமையைப் பாராட்டினர். இம்மண் ணுலகில் பாரிக்கு நிகராகச் சொல்லத் தக்கார் யாரும் இல்லை. கைம்மாறு வேண்டாது விண்ணினின்று பொழியும்

மாரியே அவனுக்கு இணையாகும் என்பது கபிலர் கருத்து. இங்ஙனம் கொடைத் திறத்தால் புகழ்பெற்ற பாரியைத் தேவாரம் பாராட்டுகின்றது. "
கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங்கொடுப் பாரிலை" என்பது சுந்தரர் திருவாக்கு.

பொதியமலைத் தலைவனாய் விளங்கிய ஆய் என்பான்
மற்றொரு வள்ளல். வறுமையால் வாடி வந்தடைந்தவரைத் தாயினும் சாலப் பரிந்து ஆதரித்த ஆயின் பெருமையைப் புறநானூற்றால் அறியலாம்.

> "இம்மைச் செய்தது மறுமைக்(கு) ஆம்எனும்
> அறவிலை வணிகன் ஆயலன்" (புறம்: கநுச)

என்று அவன் மனப்பான்மையை முடமோசியார் என்னும் புலவர் விளக்கிப்போந்தார். இரப்போர்க்கு இல்லை என்னாது கொடுத்தான் அவ்வள்ளல். ஆனால், கைப்பொருளைக் கொடுத்து அறத்தை அதற்கு ஈடாகப் பெறும் வணிக

வள்ளல் அல்லன் அவன். அற்றார்க்குக் கொடுப்பது கடமை, முறைமை என்ற கருத்து ஒன்றே அவன் உள்ளத்தில் நின்றது என்று புலவர் வியந்துரைக்கின்றார். இத்தகைய செம்மனம் படைத்தவர் இவ்வுலகில் நூறாயிரவருள் ஒருவர் அன்றோ?

பாரியும் ஆயும் போன்றவர் பலர் பண்டைத் தமிழ் நாட்டில் வாழ்ந்தார்கள். கொல்லிமலைக் கோமானாகிய ஓரியும், மலையமான் என்னும் திருமுடிக்காரியும் மழவர் கோமானாகிய அதிகமானும், பழனிமலைத் தலைவனாகிய பேகனும், தோட்டிமலை நாடனாகிய நள்ளியும் இவ்வரிசையைச் சேர்ந்தவர்கள்.[1]

இவர்கள் காலத்திற்குப் பின்னர், கொங்கு நாட்டிலே முதிரமலைத் தலைவனாகிய குமணன் தோன்றினான். அவன் புலவர் வறுமைக்குப் பெரும் பகைவன். தம்பியின் கொடுமையால் நாடிழந்து தன்னந் தனியனாய்க் காட்டிலே மறைந்து வாழ்ந்த அக்குறுநில மன்னனைத் தேடிக் கண்டு கொண்டார் ஒரு தமிழ்க் கவிஞர்; அவன் நிலைமையைச் சிறிதும் கருதாது தன் பாட்டைச் சொல்லத் தொடங்கி

னார். "ஐயனே! பன்னாள் உணவின்றி என் மனையாள் வற்றி ஒடுங்கிவிட்டாள். பாலற்ற பசுங்குழந்தை பசியால் வருந்தித் தாய் முகம் பார்க்கின்றது. கண்ணீர் நிறைந்த கண்களோடு தாய்
என் செய்வேன்.

என் முகம் பார்க்கின்றாள். ஏழையேன்
உன்முகம் நோக்கி வந்தடைந்தேன்''

என்று உருக்கமாக உரைத்தார். கவிஞர் பாடிய பாட்டைக் கேட்ட குமணன் கரைந்து உருகினான். தம்பியின் கொடுமையால் நாடிழந்த போது அவன் அடைந்த துன்பத்திலும், வறுமையின் கொடுமையால் வருந்திய புலவரது துன்பத்தை அறிந்த நிலையிற் பெருந்துயரம் அடைந்தான். உடனே, தன் உடைவாளை உருவிப் புலவர் கையில் கொடுத்து, 'இவ்வாளால் என் தலையை அறுத்தெடுத்து நாடாளும் என் தம்பியிடம் விரைந்து செல்வீராக. இத் தலைக்கு அங்கே விலையுண்டு. இதற்கு ஈடாக அவன் தரும்

1. இவர்களைக் கடையெழு வள்ளல்கள் என்பர்.



பொருளைப் பெற்று உமது வறுமையைப் போக்குக' என்று குமணன் முகம் மலர்ந்து கூறினான். அதன் தலைக்கொடையைக்கண்டு திடுக்கிட்டார் புலவர். அவ்வாளைக் கையில் ஏந்தி அவன் தம்பியிடம் விரைந்து ஓடினார்; காட்டில் நிகழ்ந்த செய்தியை உருக்கமாக எடுத்துரைத்து, உடன்பிறந்தார் இருவரையும் ஒன்று சேர்த்து வைத்தார். தமிழறிஞர்

ஒருவரைப் பற்றிநின்ற வறுமையைக் கண்டு மனந்தளர்ந்து தன் தலையையே கொடுக்க இசைந்த குமணனை ஈன்ற தமிழ்நாடு கொடையில் தலைசிறந்தது என்று கூறவும் வேண்டுமோ?

## ரு. பழையகுலங்களும் குடிகளும்

பழந்தமிழ் நாட்டில் விளங்கிய குலங்களையும், குடிகளையும் புறநானூற்றிலே காணலாம். மழவர் என்பார் ஒரு குலத்தார். அவர் சிறந்த வீரராக விளங்கினர். சோழ நாட்டில் கொள்ளிட நதியின் வடகரையில் உள்ள திருமழபாடி என்னும் பழம்பதி அவன் பெயரைத் தாங்கி நிற்கின்றது. மழபாடி, மூவர் தமிழ் மாலையும் பெற்று மிளிரும் பதியாகும்; 'பொன்னார் மேனியனே' என்று எடுத்து 'மன்னே மாமணியே, மழபாடியுள் மாணிக்கமே, அன்னே, உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே' என்று சுந்திரமூர்த்தி புகழ்ந்து போற்றிய பெருமை சான்றது. மழவர் பாடி என்பது மழபாடி ஆயிற்று. இம் மழவர் குலத்திலே அதிகமான் என்னும் பெருமகன் தோன்றினன். அவன் சிவ நெறியில் நின்ற சீலன்; பொய்யறியாப் புலவர்களால் புகழப் பெற்றவன். அவன் படைத் திறத்தைப் பாடினர் பரணர்; கொடைத் திறத்தைப் பாடினர் ஒளவையார். இக்காலத்தில் சேலநாட்டில் தர்மபுரி என வழங்கும் தகடூர் அவன் கடிநகராய் இருந்தது. அவ்வூர்க்கு அருகே அதிகமான் ஒரு கோட்டை கட்டினன். அது அதிகமான் கோட்டை என்று பெயர் பெற்று, இந்நாளில் அதமன் கோட்டை எனச் சிதைந்து வழங்குகின்றது. இன்னும் கெடில நதியின் வடகரையில் அமைந்த

திருவதிகை என்னும் பாடல் பெற்ற பழம்பதியும் அதிகமானோடு தொடர்புடையதாகத் தோன்றுகின்றது. அதிகனூர் என்பது அதிகை[1] என்று குறுகியிருத்தல் கூடும்.

மற்றொரு பழந் தமிழ் வகுப்பார் பாணர் ஆவர். பண்ணோடு இசை பாட வல்லவர் பாணர் எனப்படுவர். அந்நாளில் இசைநலம் வாய்ந்த பாணரைப் பெருநில மன்னரும் குறுநில மன்னரும் வரிசை அறிந்து ஆதரித்தார்கள். சோழநாட்டின் தலைநகராய் விளங்கிய காவிரிப்பூம் பட்டினத்தில் [2]பெரும்பாணர் சிறந்து வாழ்ந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

"குழலினும் யாழினும் குரல்முதல் எழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும்பாண் இருக்கையும்"

என்பது சிலப்பதிகாரம். யாழில் இசைபாடும் பாணர் யாழ்ப்பாணர் என்று பெயர் பெற்றார். சிவனடியார்களுள் ஒருவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணர் இக்குலத்தவரே. திருஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பாடல்களை இவர் யாழில் அமைத்துப் பாடி இன்புற்றார் என்று திருத்தொண்டர் புராணம் கூறுகின்றது. இலங்கையில் உள்ள யாழ்ப்பாணம் என்னும் நகரம் யாழ்ப்பாணர் பெயரையே தாங்கி நிற்கின்றது. யாழிலே இசைபாடிப் பரிசில் பெறும் பாணரை,

> " களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
> பாடின்[3]பனுவற் பாணர் " (புறம் : கஉஎ)

என்று பாராட்டினார் முடமோசியார்.

இப்பொழுது இக்குலத்தார் தமிழ் நாட்டில் இருப்பதாகத் தெரியவில்லை. ஆயினும், பழைய சேரநாடாகிய

---

1. "அதிகைக் கெடில வீரட்டானத் துறை யம்மானே"—திருநாவுக்கரசர் தேவாரம்.
2. இவர் பாணரில் ஒரு வகையார்.
3. பனுவல் – பாட்டு.

மலையாள நாட்டில் பாணர் குலம் இன்றும் காணப்படு கின்றது. ஓணம் திருநாளுக்கு முந்திய நாள் இரவில் பாணர் தம் மனைவியருடன் சிறுபறையும் குழித்தாளமும் முழக்கிக்கொண்டு இல்லந்தோறும் போந்து இசை பாடு வார்கள் என்று தெரிகின்றது. அன்றியும், திருச்சூர்க் கோயிலுக்கு வெளியே நின்று பாணர்கள் பாட்டிசைத்துப் பரிசில் பெறும் வழக்கம் இன்றும் உண்டு என்பர்.[1]

இனி, புறநானூற்றில் பேசப்படுகின்ற வையாவிக் கோப் பெரும்பேகன் என்பவன் ஆவியர் குடியில் பிறந்த வன். ஆவியர் பெருமகன் என்று சிறுபாணாற்றுப் படை அவனைப் போற்றுகின்றது. ஆவியர் குடியிலே தோன்றிய அரசர்களால் ஆளப்பட்டமையால் ஆவி நன்குடி என்பது பழனிக்குப் பெயராயிற்று. நக்கீர தேவர் அருளிய திரு முருகாற்றுப்படையில் திரு ஆவிநன்குடி முருகனுக்குரிய படைவீடுகளில் ஒன்றாகப் போற்றப்பட்டுள்ளது. வையா புரி என்பது அதற்கு மற்றொரு பெயர். ஆவியர் குடியில் தோன்றிய வையாவிக் கோமானால் ஆளப்பட்ட நகரம் வையாவிபுரி என்று பெயர்பெற்றுப் பின்னர் வையாபுரி யாயிற்று என்பர்.

ஆவியரைப் போலவே, ஓவியர் என்பாரும் பழந்தமிழ் நாட்டில் இருந்தனர். ஓவியர் குடியில் பிறந்து சிறந்து வாழ்ந்த சிற்றரசன் ஒருவனை ஓய்மான் நல்லியக் கோடன் என்று புறநானூறு குறிக்கின்றது. ஓய்மான் ஆண்ட நாடு ஓய்மாநாடு எனப்பட்டது. இந்நாளில் திண்டிவனம் என வழங்கும் ஊரும் அதைச் சார்ந்த இடமும் பழைய ஓய்மா

நாடு என்று பட்டையங்களால் அறிகின்றோம்.

## ௯. அறிஞரோடு உறவுகொண்ட அரசர்

தமிழ் நாட்டை யாண்ட பேரரசரும் சிற்றரசரும் அறிஞரோடு உறவுற்று வாழ ஆசைப்பட்டார்கள். பாரி

1. The Castes and Tribes of Southern India-E. Thurston, Vol. VI. p. 40.



என்னும் சிற்றரசனும் கபிலர் என்னும் புலவரும் தலை சிறந்த தோழராக வாழ்ந்தார்கள். பாரியின் இன்பத்தி லும் துன்பத்திலும் கபிலர் பங்கு கொண்டார் என்று தெரிகின்றது. தமிழ் நாட்டு மூவேந்தரும் பாரியைப் பகைத்து அவன் மலையை வளைத்துக்கொண்ட காலத்தில் கபிலர் பாரியோடு இருந்தார். இறுதியில் மூவேந்தர் சூழ்ச்சியால் பாரி இறந்தபோது கபிலர் ஆறாத்துயரம் அடைந்தார்; ஆதரவற்ற பாரியின் பெண்மக்கள் இருவரை யும் பேணக் கருதியே உயிர் வாழ்ந்திருந்தார்; அப்பெண் களுக்கு மணம் முடிக்கக் கருதிச் சிற்றரசர் சிலரிடம் சென்றார்; இருங்கோவேள் என்னும் குறுநில மன்னனிடம் போந்து 'இப்பெண்கள் பாரியின் மக்கள்; யான் இவர் தந்தையின் தோழன்; அந்த முறையால் இவர் என் மக்கள்' என்று உருக்கமாக உரைத்தார்.

"இவர்யார் என்குவை யாயின், இவரே
ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர், யானே
தந்தை தோழன், இவர்என் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே." (புறம்: ௨௦௧)

என்பது கபிலர் பாட்டு.

ஆயினும், பாரியிடம் பகைமை கொண்ட மூவேந்தரது சீற்றத்துக்கு அஞ்சிச் சிற்றரசர் எவரும் அப்பெண்களை மணந்துகொள்ள இசைந்தாரல்லர். அது கண்ட கபிலர் அவர்களை அடைக்கலமாகச் சில அந்தணரிடம் ஒப்புவித்துப் பெண்ணையாற்றின் கரையில் ஒரு பாறையில் தீ வளர்த்து அதன் உள்ளே இறங்கி உயிர் துறந்தார். அப்பாறை கபிலக்கல் என்று வழங்குவதாயிற்று.[1] இங்ஙனம் சிறந்த நட்பின் கிழமையை இறந்து காட்டினார் கபிலர்.

கபிலரோடு உறவு பூண்ட மற்றொரு சிற்றரசன் அதிகமான். அவன் அரிதின் முயன்று அமிழ்தம் சுரக்கும் கரு

1. சாசனத் தமிழ்க் கவி சரிதம், பக்கம்-௬.

நெல்லிக்கனி ஒன்றைப் பெற்றான். அக்கனியைக் கையில் எடுத்து உண்ணக் கருதியிருக்கையில், ஔவையார் அவனைக் காண வந்தார். இனிய கவி பாடித் தமிழ் பரப்பும் பாட்டியைக் கண்டபோது அதிகமான் எல்லையற்ற இன்ப முற்றான். கையில் இருந்த கருநெல்லிக்கனியை அவரிடம் முகமலர்ந்து கொடுத்தான். அக் கனியின் தன்மை யறியாது ஔவையார் அதனை அருந்தினார்; அதன் அருஞ் சுவையினை அறிந்து வியப்பும் திகைப்பும் உற்றார். அந் நிலையில் அக்கனியின் பெருமையை எடுத்துரைத்தான் அதிகமான். அதைக் கேட்ட ஔவையார் இன்பமும் துன்பமும் ஒருங்கே அடைந்தார்; அமிழ்தமாகிய கனியைத் தான் உண்ணக் கருதாது பிறர்க்கு உவந்தளித்த அதிக மானது வள்ளன்மையை எண்ணி வியப்புற்றார்; அவ் வள்ளலை வாயார வாழ்த்தினார்.

> "போரடு திருவிற் [1]பொலந்தார் அஞ்சி
> பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
> நீல மணிமிடற் றொருவன் போல
> மன்னுக பெரும."

(புறம்: கூக)

என்பது ஔவையார் வாழ்த்துரை.

சேரநாட்டை ஆண்ட பெருஞ்சேரல் என்ற அரசன் தமிழ்ப் புலவர் ஒருவருக்குப் பணி செய்த பான்மையைப்

புறநானூறு கூறுகின்றது. அம் மன்னவன் வெளியே சென்றிருந்தபோது வறுமையால் வருந்திய புலவர் ஒருவர் அவன் அரண்மனைக்குச் சென்றார்; அங்கு மெல்லிய பூம் பட்டு விரித்த மஞ்சத்திலே சாய்ந்து உறங்கிவிட்டார். மன்னவன் திரும்பி வந்தபோது மஞ்சத்தில் கண்வளர்ந்த செஞ்சொற் கவிஞரைக் கண்டான்; அவர் நன்றாக உறங்குமாறு அக் கட்டிலின் அருகே நின்று தன் கையால் கவரி வீசினான். புலவர் கண் விழித்தபோது அரசன் செய்த அருஞ் செயலும் தாம் செய்த பெருந் தவறும் அறிந்து மனங்குழைந்தார். தமிழின்பால் வைத்த தலையாய அன்

1. பொலந்தார் – பொன்மாலை.





பினால் தமிழறிந்த ஏழைப் புலவனுக்குப் பணிசெய்ய இசைந்த சேரமான் பெருமையை மனமாரப் போற்றி வாயார வாழ்த்தினார்.

பாண்டிநாட்டை ஆண்ட நெடுஞ்செழியனும் தமிழ்ப் புலவரிடம் ஆன்ற மதிப்புடைய அரசர்களுள் ஒருவன். அவன் தலையாலங்கானப் போர்க்களத்தில் பெரும் பகைவரை வென்று புகழ் பெற்ற வீரன். அம் மன்னவன் மாங்குடி மருதன் என்னும் புலவரிடம் பேரன்பு கொண்டு விளங்கினன்; அவருடைய நன்மதிப்பைப் பெற ஆசையுற்றான்; அவர் புகழுரையை மற்றெவற்றினும் பெரிதாக மதித்தான். தலையாலங்கானப் போர்க்களத்தை நோக்கிப் புறப்படும்பொழுது அவன் பாடிய பாட்டு இக் கருத்தை நன்கெடுத்துக் காட்டுகின்றது.

"நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்என்(று)
உறு[1]துப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு

ஒருங்(கு)அகப் படேஎ னாயின்..............

..........................................

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்

புலவர் பாடாது வரைகஎன் நிலவரை.''

(புறம்: எ௨)

என்பது அவன் பாடிய பாட்டு.

'என்னைச் சிறியன் என்று இகழ்ந்தனர் என் பகைவர்; படைச் செருக்கால் பலபல பேசினர். அவர்களைத் தாக்கிச் சிதற அடித்துச் சிறை செய்யேனாயின், மாங்குடி மருதன் முதலாய நல்லிசைப் புலவர்கள் என் நாட்டைப் பாடாது நீங்குக' என்று வஞ்சினம் கூறினன் பாண்டியன்.

---

1. துப்பு - வலிமை.





# ௭. புலவர் தம் மான வாழ்க்கை

அக்காலத்துப் புலவர்கள் அன்பற்றார் அளித்த கொடையைச் சிறிதும் மதித்தார் அல்லர். பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர் கோடைமலைத் தலைவனாய கடிய நெடுவேட்டுவனைக் காணச் சென்றார். அவன் உரிய காலத்தில் பரிசில் அளியாது காலம் தாழ்த்தான். அது கண்ட சாத்தனார்,

"முற்றிய திருவின் மூவ ராயினும்
[1]பெட்பின் றீதல் யாம்வேண் டலமே

..............................................

நோன்சிலை வேட்டுவ, நோயிலை யாகுக."

(புறம்: உ0௬)

என்று பாடினார்.

கொடுக்கின்ற

'கல்வியின் பெருமை யறிந்து பேணிக்
கொடையையே யாம் பெறுவோம்.
அன்பற்றார் முடியுடை வேந்தராயினும் அவர் அளிக்கும்
கொடையைக் கொள்ளோம்' என்று கூறி அவனை விட்டு
அகன்றார் சாத்தனார்.

பெருஞ்சித்திரனார் என்ற புலவர் ஒருநாள் அதிக
மானைக் காணச் சென்றார். அவன் புலவரை மதிக்கும்
பெற்றி வாய்ந்தவனாயினும், அரசாங்க வேலையில் ஈடுபட்

டிருந்தான். ஆதலால், புலவர்க்குரிய பரிசிலை மற்றொருவ
ரிடம் கொடுத்தனுப்பினான். அப் பரிசிலைக் கண்டார் சித்
திரனார்; சீற்றம் கொண்டார். "என்னை யாரென்று

நினைத்தான் அதிகமான். அவனைக் கண்டு பரிசில் பெற
வந்தேனே அன்றிப் பாராமுகமாக அவன் கொடுக்கும்
பொருளைக் கொண்டு செல்ல வந்தவன் அல்லேன். பாட்

டைப் பாடிவிட்டு அதற்கு ஈடாகப் பரிசில் பெற்றுச் செல்லும் புலவன் வாணிகப்புலவன் ஆவான். அவ்வகை யைச் சேர்ந்தவன் அல்லன் யான். கவியின் சுவையறிந்து

அரசன் தினையளவு பொருள் தரினும், அதனை ஏற்று மகிழ்வேன்" என்று உணர்ச்சி ததும்பப் பாடினார்.

---

1. பெட்பு - பேணுதல்.



"யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணு தீத்த இப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்

தினையனைத் தாயினும் இனிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே"

(புறம் : ௨0அ)

என்பது சித்திரனார் பாட்டு.

# அ. இசைத்தமிழ் வளர்ச்சி

இயற்றமிழை ஆதரித்த பண்டைத் தமிழ் அரசர்கள் இசைத்தமிழையும் நன்கு வளர்த்தார்கள். அக்காலத்து இசைக்கருவிகளில் சிறந்தன குழலும் யாழும். யாழ் பல திறப்பட்டதாக அமைந்திருந்தது.[1] பாணர் என்பவர் சீறி யாழ் என்னும் சிறிய யாழைச் செல்லும் இடமெல்லாம் எடுத்துச் சென்றனர். சிறிய யாழ் எப்பொழுதும் அவர்கள் கையகத்து இருந்தமையால் "கைவழி" என்னும் பெயர் பெற்றது. இசைவாணராகிய பாணரை ஆதரித்த குறுநில மன்னருள் பெருநள்ளி என்பவனும் ஒருவன். அவனைப் பாடினர் வன்பரணர் என்னும் புலவர்.

> "நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
> மாலை மருதம் பண்ணிக் காலைக்
> கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
>
> [2]வரவெமர் மறந்தனர் அதுநீ
> [3]புரவுக்கடன் பூண்ட வண்மை யானே" (புறம்: ௧௪௯)

என்ற பாட்டின் நயம் அறியத் தக்கதாகும். 'அரசே! பாணர்க்கு நீ பெருங்கொடை கொடுக்கின்றாய். உன் உணவை உண்டு மயங்கி இசைமரபினை மறந்து விட்டார் இசைப்பாணர். மாலைப்பொழுதில் பாடுதற்குரிய செவ்

---

1. "யாழ் நால்வகைப்படும். அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன—சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை ௨௬, அடியார்க்கு நல்லார் உரை.
2. வரவு - வரலாற்றுமுறை.
3. புரவு - கொடுத்துப் பாதுகாத்தல்.

வழிப் பண்ணைக் காலைப்பொழுதில் பாடுகின்றார்கள். காலையில் பாடுதற்குரிய மருதப் பண்ணை மாலையில் பாடுகின்றார்கள். இதற்குக் காரணம் நின் கொடையே' என்று கூறினார். இப் பாட்டால் பண்டை இசைவாணர் பண்களை வகுத்திருந்ததோடு அவற்றைப் பாடுதற்குரிய காலங்களையும் வரையறுத்திருந்தார்கள் என்பது இனிது விளங்குகின்றது. இசை பாடும் பாணர்க்கும் பாடினியார்க்கும் தமிழ் அரசர் வரிசை யறிந்து பரிசளித்தார்கள். வெள்ளி நாரால் தொடுத்த பொற்றாமரை பாணர்க்கு உரிய உயர்ந்த பரிசாகும். பாடினியர்க்குச் சிறந்த அணிகலன்களைப் பரிசாகக் கொடுப்பது வழக்கம்.[1]

## சo. முற்காலப் பெண்மணிகள்

அக்காலத்தில் கல்வி அறிவும் கலைஞானமும் பெற்ற பல பெண்மணிகள் தமிழ்நாட்டில் வாழ்ந்தார்கள்.

"பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்" என்பது தமிழ் நாட்டாரது பழங் கொள்கை அன்று என்பதற்குப் புறநானூறு ஒன்றே போதிய சான்றாகும். செவ்விய கவி பாடும் திறம் பெற்ற பெண்பாலார் பாடிய அருமை சான்ற பாடல்கள் புறநானூற்றிலே சேர்க்கப்பட்டுள்ளன. கரிகால் சோழன் வெண்ணிப் போர்க்களத்தில் பெற்ற வெற்றியை வியந்து பாடினாள் ஒரு பெண். அவள் குயவர் குலத்தைச் சேர்ந்தவள். வெண்ணிக் குயத்தியார் என்று புறநானூற்றிலே அம் மாது போற்றப்படுகிறாள். நப்பசலையார் என்ற நல்லிசைப் புலமை மெல்லியலார் மலையமான் திருமுடிக்காரியையும் பிறரையும் பாடியுள்ளார். அவர் தென் பாண்டி நாட்டிலுள்ள கொற்கை மூதூரைச் சூழ்ந்த மாறோக்கம் என்ற நாட்டைச் சார்ந்தவர். இன்னும் அக்காலத்து அரசராலும் அறிஞராலும் பெரிதும் பாராட்டப்பட்ட ஔவையாரை அறியாதார் அறியாதாரே. ஆகவே, ஆண் பெண்ணாகிய இருபாலரும் முற்காலத்தில் கல்வி யறிவால் மேம்பட்டிருந்தார்கள் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

---

1. புறம்: கக.

இன்னும் போர்க்களத்தில் அஞ்சாமல் நின்று அமர் புரியுமாறு தாம் பெற்ற அருமை மைந்தரை ஊக்கி அனுப்பிய வீரத்தாயரும் அக்காலத்தே விளங்கினர். மாற்றார்க்குப் புறங்கொடாது மார்பிலே புண்பட்டு இறந்த மைந்தனது மேனியைக் கண்டபோது பெற்றபோதினும் பெரியதோர் இன்பம் அடைந்தாள் ஒரு தாய். மற்றொரு வீரமாது முதல் நாள் நடந்த போரில் தமையனை இழந்தாள்; மறுநாள் நடந்த போரில் கணவனை இழந்தாள். பின்னும் போர் ஒழிந்தபாடில்லை. அவள் குடும்பத்தில் சிறு பையன் ஒருவனே எஞ்சி நின்றான். முன் இறந்துபட்ட தலைவனையும் தமையனையும் நினைந்து அவள் தயங்கினாள் அல்லள்; தன் குடியைக் காப்பதற்கு மைந்தன் ஒருவனே உள்ளான் என்பதையும் உணர்ந்தாளல்லள்; அருமை மகனை அன்போடு அழைத்தாள்; வெள்ளிய ஆடையை உடுத்தாள்; தலையில் எண்ணெய் தேய்த்துச் சீவிமுடித்தாள்; வேலைக் கையிலே கொடுத்தாள்; போர்க்களத்தை நோக்கி அவனை விடுத்தாள். இவ்வீர மங்கையை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் புலவர் வியந்து பாடுகின்றார்.

"வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே" (புறம்: உஎக)

என்பது அவர் பாடிய பாட்டு.

## மக்களின் வாழ்க்கைநலம்

இனி, அந்நாளில் தமிழ்நாட்டில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கையைக் குறித்துப் புறநானூற்றில் பல செய்தி களைக் காணலாம். 'மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி' என்றவாறு முற்கால மக்கள் மன்னனையே பின்பற்றி நடக்க முயன்றார்கள். அரசன் கடமையை அறிவிக்கின்ற புறநானூற்றுப் பாட்டு ஒன்று இக்கருத்தைக் குறிக்கின் றது. பிள்ளையைப் பெற்று வளர்ப்பது தாயின் கடமை என்றும், அவனை அறிவுடைய னாக்குவது தந்தையின்



கடமை என்றும், ஒழுக்க வழியில்
கடமை என்றும், பொன்முடியார்
நிறுத்துவது அரசன்
என்ற புலவர் திறம்
படக் கூறுகின்றார்.[1]

அரசன் அறநெறி தவறாதவனாய் ஆண்டுவந்தால் குடி களுக்கு எவ்வகைக் கவலையும் இல்லை. அறநெறி தவறிய அரசன் ஆளும் நாட்டில், மழை பருவத்திற் பெய்யாது; பசியும் பிணியும் குடிகளை வாட்டி வருத்தும் என்பது பழந் தமிழ் நாட்டார் கொள்கை.

“ மாரி பொய்ப்பினும் [2]வாரி குன்றினும்
இயற்கை யல்லன [3]செயற்கையில் தோன்றினும்

காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்" (புறம்: நூ௫)

என்று நாகனர் பாடிப் போந்தார்.
நெறி முதற்றே அரசன் கொற்றம்'

இதனலேயே 'அற
என்ற வாய்மொழி
எழுந்தது.

வேளாண்மை என்னும் பயிர்த்தொழில் அக்காலத்தில் சிறந்த தொழிலாகக் கருதப்பட்டது. இல்லறம், துறவறம் என்னும் இருவகை அறமும் நாட்டில் நிலைபெறுவதற்கும், அரசன் வெற்றி பெற்று விளங்குவதற்கும் வேளாண்மை இன்றியமையாதது என்று தமிழ்நாட்டார் கண்டார்கள்.

"பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே"

(புறம்: நூ௫)

என்ருர் நாகனர். இதனலேயே வேளாளர் சிறந்த குடிகளாகக் கருதப்பட்டார்கள். அறத்தையும் அறிவையும் வளர்ப்பதற்கு இன்றியமையாத பொருள்வளத்தை நாட்டிலே பெருக்கியவர் அவர்களே. 'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்' என்ற வாசகம் இந் நாட்டில் நெடுமொழியாக வழங்குகின்றது. வேளாண்மை என்ற சொல் திருவள்ளுவர் காலத்திலேயே பரோபகாரம் என்ற பொருளைத் தருவதாயிற்று.

---

1. புறம்: நூகஉ. 2. வாரி - வருவாய்.

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்ற திருக்குறளில் வேளாண்மை என்னும்
காரம் என்ற பொருளிலே ஆளப்பட்டுள்ளது.

சொல் உப
இத்தகைய

உபகாரிகள் இருத்தலாலேயே உலகம் நிலைபெற்றிருக்கின்றதென்று இளம்பெருவழுதி என்னும் பாண்டியன் பாடினன்.

"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமிய ருண்டலு மிலரே [1]முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்

புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் [2]அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்

தமக்கென முயலா நோன்றாட்

பிறர்க்கென முயலுநர் உண்மையானே." (புறம்: ககஅ உ)

என்பது அவன் பாடிய பாட்டு. இன்னும் வாழ்க்கைக் குரிய சிறந்த நெறிகளை யெல்லாம் பல்லாற்றான் எடுத் தோதுகின்ற புறநானூறு எல்லாரும் கடைப்பிடித்தற் குரிய ஓர் அறத்தினைத் திட்பமாகக் கூறுகின்றது.

"பல்சான் றீரே பல்சான் றீரே

..................................................

நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்

அல்லது செய்தல் ஓம்புமின்"

(புறம்: ககரு)

என்ற அறவுரை பொன்னேபோற் போற்றத்தக்கதாகும்

## கக. இலக்கிய நயம்

புறநானூற்றில் அமைந்த இலக்கிய நயங்கள் பல வாகும். ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாய் உள்ள திருக்குறட் பாக்களுக்கு விரிவுரையாக அமைந்த பாடல்

1. முனிவு - வெறுப்பு. 2. அயர்வு - மனக்கவற்சி.

கள் சில புறநானூற்றில் உண்டு. செய்ந்நன்றி அறிதல் என்னும் அறத்தின் பெருமையை "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்று அறிவித்தார் திருவள்ளுவனார். இக் குறளில் அமைந்த 'எந்நன்றி' என்ற சொல்லுக்குப் புறநானூற்றுப் பாட்டு ஒன்று விரிவுரை தருகின்றது.

> "ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
> மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
> [1] பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
> வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
> நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
> [2] செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
> அறம்பா டிற்றே"

(புறம்: ௩௪

என்று ஆலத்தூர் கிழார் பாடினார். இப்பாட்டில் ஆன்மடி அறுத்தல் முதலிய பல தீச்செயல்களைக் காட்டி, அவற்றினும் கொடியதாகச் செய்ந்நன்றி கோறலைக் கூறினார் கிழார். இக் கருத்து, திருவள்ளுவனார் அருளிய அறத்துப்பாலில் அமைந்திருத்தலால் 'அறம் பாடிற்றே' என்றும் அறிவுறுத்தினார்.

இன்னும் "அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள், சிறுகை அளாவிய கூழ்" என்ற திருக்குறளுக்கு அறிவுடை நம்பி என்ற பாண்டியன் விரிவுரை தரு கின்றான்.

"படைப்புப் பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் [3] துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்

1 'குரவர்த் தப்பிய கொடுமையோர்' என்று பாடங் கொண்டார் திரு. ஆறுமுக நாவலர். திருக்குறள் நாவலர் பதிப்பு, ௧௧0 வது குறளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

2. செய்தி - செய்த நன்று. 3.

துழந்து - துழாவி.



மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"
(புறம் : ௧அஅ)

என்று திருக்குறளின் நயத்தை விரித்துரைத்து விளக்கினான் நம்பி.

புறநானூற்றுப் பாடல்களில் அமைந்துள்ள சொல்லை யும் பொருளையும் பிற்காலக் கவிஞர் பொன்னெபோற் போற்றினர். நாட்டில் வாழும் உயிர்களுக்கு அரசனே உயிர் என்ற உண்மையை,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" (புறம்
: கஅசு)

என்று புறநானூறு கூறுகின்றது. இப் பாட்டின் சொல்
லும் பொருளும் சிந்தாமணி ஆசிரியராலும் கம்பராலும் போற்றப்பட்டுள்ளன. இராமனுடைய இனிய பண்புகளை எடுத்துரைக்கப் போந்த கம்பர்,

"கண்ணிலும் நல்லன் கற்றவர் கற்றிலா தவரும்

உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்"

என்று அருளினர். இன்னும் நிலையற்ற புகழ் ஒன்றே அழியாமல் நிற்கும் என்ற

இவ்வுலகத்தில்
உண்மையைப்
புறநானூறு நன்கு உரைக்கின்றது.

"மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க் கீஇ யாமையின்

[1] தொன்மை மாக்களின் தொடர்பறி யலரே" (புறம் : கசுரு)

என்றார் பெருந்தலைச் சாத்தனார். இப்பாட்டின் பொருள் கம்பர் காவியத்தில் களித்து இலங்கக் காணலாம்.

"மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள் மாயாது
ஏந்திய கைகொடு இரந்தவர் எந்தாய்

1. தொன்மை மாக்கள் – பழைய வண்மையை யுடைய மாக்கள்.



வீய்ந்தவர் என்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவர் அல்லது இருந்தவர் யாரே"

என்பது கம்பர் பாட்டு. இன்னும், புறநானூற்றுப் பாடல்களைத் தழுவி எழுந்த கவிகளும் நூல்களும் பல உண்டு. தமிழறிஞரது கலியைத் தீர்ப்பதற்காகத் தன் தலையைக் கொடுக்க முன்வந்த குமண வள்ளலின் பெருமையை விளக்கிப் பாடினார் ஒப்பிலாமணிப்புலவர்.

"அந்தநாள் வந்திலை அருந்தமிழ்ப் புலவோய்
இந்தநாள் வந்துநீ நொந்(து) எனை அடைந்தாய்
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக்

கொடுத்தசன்

விலைதனைப் பெற்றுன் வெறுமைநோய் களையே"

என்ற பாட்டு, புறநானூற்றுப் பாடலைத்[1]
தழுவி எழுந்த

தாகும்.

இன்னும் சத்திமுற்றப் புலவர்
பறந்து சென்ற நாரையை நோக்கி,

என்பவர் வானிலே

"நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயும்உன் பெடையும்
தென்திசைக் குமரி யாடி
வடதிசைக் கேகுவி ராயின்"

என்று பாடிய பாட்டு, புறநானூற்றிலுள்ள,

"அன்னச் சேவல் அன்னச் சேவல்
..........................................
குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயின்,"

(புறம்: கள)

என்னும் பிசிராந்தையார் பாட்டைப் பின்பற்றியதாகும்.

1. புறம். கஈ௫

உ.அ

புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

இன்னும் பாரி வள்ளலைக் குறித்து கபிலர் பாடிய பாடல்களையே பெரிதும் ஆதாரமாகக் கொண்டு பாரி காதை என்னும் நூல் இக்காலத்தில் தோன்றியுள்ளது.

ஆகவே, புறநானூறு தமிழ்ச் சுவை தேரும் மாணவர்க்கு ஓர் இலக்கியச்சுனை யாகும்; பழைமையில் நாட்டமுடையார்க்குப் பல பொருள் நிறைந்த பண்டாரமாகும்; தமிழ்நாட்டுத் தொண்டர்க்கு விழுமிய குறிக்கோள் காட்டும் மணிவிளக்காகும். இத்தகைய பெருநூலைத் தமிழ் மக்களாகிய நாம் போற்றிப் படித்து இன்பமும் பயனும் எய்துவோமாக.

# க. புறநானூறும் புலவரும்

[வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., பி. எல்.]

## க. தோற்றுவாய்

சங்க இலக்கியத்துள் தலைசிறந்து விளங்கும் புற
நானூறு என்னும் தொகைநூல் நானூறு பாடல்கள்
கொண்டது. அவற்றுள் இரண்டு பாடல்கள் முற்றிலும்
கிடைக்கப்படாது செல்லரித்துப் போயின. நாற்பத்து
நான்கு பாடல்களில் ஒரு சீர் முதல் பல வரிகள் வரை
உருத்தெரியாது சிதைந்து காணப்படுகின்றன. இப் பாடல்
கள் நூற்று நாற்பத்தேழுக்குக் குறையாத புலவர்களால்
பாடப்பட்டுள்ளன. பாடிய புலவர்களின் எண்ணிக்கை
யைத் திட்டவட்டமாய்த் துணிந்து கூறுவதற்கில்லை.
மூலத்திலுள்ள பாடபேதத்தினால் சில புலவர்களின் பெயர்
கள் பலவாறாகக் கொள்ளப்படுகின்றன. எடுத்துக்காட்
டாக, மாங்குடி கிழாரும் மாங்குடி மருதனும் ஒரே புலவர்
என்றும், வெவ்வேறானவர் என்றும் இருவகையாகக் கூறப்
படும். சிறுவெண்டேரையாரும், ஐயாதிச் சிறுவெண்
டேரையாரும் ஒருவரா அல்லது இருவரா என்று துணியக்
கூடவில்லை. பதினான்கு பாடல்களுக்கு ஆசிரியர் பெயர்
காணப்படவில்லை.

இப் புலவர்களில் பதினான்கு பேர் அரசர்களாயும்
அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயும் காணப்படுகின்
றனர். பதினைந்து பேர் பெண் புலவர்கள். புறநானூற்றுப்
புலவர்களில் மிகுதியான பாடல்களை இங்குப் பாடியுள்ள
வர் பெண்புலவர்களிற் சிறந்து விளங்கிய ஔவையாரே

யாவர். அவர் பாடியனவாக முப்பத்துமூன்று பாடல்கள் புறநானூற்றில் காணப்படும். குறக் குலத்தும், குயக் குலத்தும், எயினக் குலத்தும் கவிபாடும் புலமைத் திறம் பெற்ற பெண்கள் தோன்றியுள்ளனர் என்று அறியும் நாம், அக்காலக் கல்வியின் பரப்பைக் கண்டு வியப்பெய்தாம லிருத்தல் முடியாது. கல்விச் செல்வமானது ஒரு பாலா ருக்கும் ஒரு குலத்தினருக்கும் என்று ஒதுக்கப்படாது யாவராலும் விரும்பிப் போற்றப்பட்டது. பெண்கள் கல்வி பூத்துப் பேரறிவுடையவர்களாய்த் திகழ்ந்தனர். பெண்புலவர்களை அரசர்களும் வியந்து பாராட்டித் தம் அரசவையில் அமர்த்திக்கொண்டனர். அரசர்களிடையே சந்து செய்விப்பதற்கும் தூது செல்வதற்கும் பெண்புல வர்கள் துணிந்து முன்வந்தனர் என்றால், பண்டைத் தமிழ்ப்பெண்களின் பெருமையைப் பற்றி வேறென் சொல்வது!

புறநானூற்றுப் புலவர்களிற் பலர் ஏனைச் சங்க நூல் களிலும் பாடல்கள் பாடியுள்ளார்கள். ஆனால், புறநானூற் றில் மட்டும் பாடியோராக அறுபத்தாறு புலவர்கள் காணப்படுகின்றனர். ஆகையால், இந்நூல் இல்லையேல் இவ் வறுபத்தாறு புலவர்களின் பெயரைக்கூட நாம் தெரிந்துகொள்வது அரிதாயிருந்திருக்கும். இன்னும் சில புலவர்களுடைய இயற்பெயர் இன்னதென்று நாம் தெரிந்து கொள்ளாத நிலையில் அவர்கள் பாடிய பாடல்களிற் காணப் படும் யாதானும் ஒரு சொற்றொடரால் அழைக்கப்பட்டுள்

ளனர். அவர்கள் புறநானூற்றில் இரும்பிடர்த்தலையார், கூகைக்கோழியார், தொடித்தலை விழுத்தண்டினார் என்னும் மூவராவர். சில புலவர்கள் கபிலர், பரணர், ஔவையார் போன்று, தம் இயற்பெயரோடு விளங்கினும், எஞ்சியோர், ஊராலும், உறுப்பாலும், தொழிலாலும், மரபாலும், தந்தை பெயர் அடையடுத்தும், பல்வேறாகப் பெயர் பூண்டுள்ளனர். அவர்கள் புலவர்களாய் விளங்கியதோடு, தம் தொழிலையும் நடத்திவந்ததாகத் தெரிகிறது. ஆசிரியன், ஆசான், பொற்கொல்லன், காவிதி, மருத்துவன், ஓதல்,



ஓலைக்கடை, பொன்வாணிகன், கணக்காயன், கணியன், காவற்பெண்டு, உழவர், வண்ணக்கன், கூலவாணிகன், அறுவை வாணிகன், குயத்தி, தமிழக் கூத்தன் முதலிய பதங்கள் அவர்கள் பெயர்களோடு ஒட்டி வழங்கப்படுவதால், அவர்கள் கைக்கொண்டிருந்த தொழில்களிற் சிலவற்றை நாம் எளிதில் தெரிந்துகொள்ளலாம். ஊன்பொதி பசுங்குடையார், பக்குடுக்கை நன்கணியார் முதலிய புலவர்கள் தம் இயற்பெயர்கள் மறைந்துபோம் வகையில் இக் காரணப் பெயர்களால் வழங்கப்பட்டு வந்தனர் போலும்!

## ௨. பரந்த உள்ளம்

தொன்னலம் வாய்ந்த இன்னிசைப் புலவர்கள் கல்வி யிற் சிறந்த கவிவாணர்கள், "யாது மூரே யாவருங் கேளிர்" என்ற பரந்த நோக்குடையவர்களாய்ப் பல நாடுகளுக்கும் சுற்றித் திரிந்து இயற்கைப் பொருள்களையும் உலகியற் பொருள்களையும் நுனித்தறிந்து அவற்றைத் தாம் பாடிய செய்யுள்களில் நன்கு விளங்கவைத்துள்ளார்கள். புறநா னூற்றுப் பாடல்களிற் பலவும் அவ்வச் சமயத்தில் எதிர் பாராது உடனுக்குடன் பாடப்பட்டவை. தமிழ் நாட்டுப் பழைய வரலாற்றுக் குறிப்புக்கள் பலவும் புறநானூற்றி லிருந்தே நமக்கு இப்பொழுது கிடைக்கக்கூடியனவாகும். அவைகள் அரசர் முன்னிலையில் நேர்முகமாக நடந்த பல நிகழ்ச்சிகளைக் குறித்துப் பாடப்பட்டவையாதலால் அவை முற்றிலும் உண்மையென்று நாம் ஐயமறக் கொள்ளலாம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் மக்கள் கொண்டுள்ள வாழ்க்கையிலேயும், பழக்க வழக்கங்களும் நாகரிகமும், பண்பாடும், போர்ச்செய்திகளும், அரசியல் வாழ்க்கையும், ஆடவர் ஆற்றலும், பெண்டிர் பெருமையும் நாம் எளிதில் தெரிந்துகொள்வதற்குப் பெருந்துணையா யிருப்பது புறநானூறே யாகும்.

புறநானூற்றுப் புலவர்கள் எல்லாம் தொல்லிசை படைத்த நல்லிசைப் புலமையோராவர். இவர்கள் முச்

சங்கங்களுமிருந்து தமிழ் ஆராய்ந்த காலவெல்லைக்குள் தமிழ்நாட்டில் ஆங்காங்கு அவ்வப்போது தோன்றி வாழ்ந்த தாகத் தெரிகிறது. இந் நூலில் இரண்டாவது பாடல் பாடிய முரஞ்சியூர் முடிநாகராயர் முதற் சங்கத்தில் வீற்றிருந்ததாக இறையனார் அகப்பொருள் உரையால் அறியலாம். ஆழ்ந்த கருத்துக்களை இனிய தமிழ் நடையில் தெளிவாகப் பாடும் ஆற்றல் மிக்க இப் புலவர்களின் கவிகள், கற்குந்தோறும் அறிவைப் பெருக்கும் சுவைக் கேணிகள். அவை சொல்லணிச் சிக்கல்கள் சிறிதுமின்றி, அணிகளுக் கன்னியாம் உவமை நயமே சிறந்து விளங்கக் குறிப்பிற் பொருள்தரும் வனப்பெய்திக் கற்போர் மனத் தைக் கனிவிப்பனவாகும்.

இப் புலவர்கள் ஒருவரைப் புகழ்ந்து கவிபாடுவது மட்டுமல்லாமல், வசைபாடுவதிலும் சிறந்தவர்கள். ஆரி டப்போலி பாடியதிற் சிறப்பாகக் கூறப்படும் புலவர்க ளுள் பெருஞ்சித்திரனாரும் ஒருவர் என்று யாப்பருங்கல விருத்தி உரையால் அறியலாம். அன்னார் பாடிய பாடல் கள் பாடிய பொருளைப் பயந்தேவிடும் திறம் வாய்ந்த தெய்வப் பாடல்கள் என்பதை நாம் அகச்சான்று கொண்டே நிலைபெறச் செய்யலாம். பாரிமகளிரைக் கொண்டு சென்று மணம் வேண்டிய கபிலர், தம்மை இருங்கோவேள் இகழ்ந்தமை பொறாது, கனன்று, "அரசே! உனது அரையம் அழிந்ததற்குக் காரணம் உன் முன்னோர் களில் ஒருவன் கழாஅத்தலையார் என்னும் புலவரை இகழ்ந்ததேயாகும். அவ் வழிவழிபோல் நீயும் இப்பொழுது என்னை இகழ்ந்தனை. நீ வாழ்வாயாக!" என்று வெறுத்துக் கூறியுள்ளார்.

"கோடிபல அடுக்கிய பொருள்நமக் குதவிய
நீடுநிலை [1]யரையத்துக் கேடுங் கேளினி;
நுந்தை [2]தாயம் நிறைவுற வெய்திய

[3]ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்!

1. 'அரையம்' என்பது ஓர் ஊர். 2. தாயம் - உரிமை.
3. ஒலியல் - தழைத்தலை யடைய.



நும்போல் அறிவில் நுமருள் ஒருவன்
புகழ்ந்து செய்யுட் [1]கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே இயல்தேர் அண்ணல்." (புறம் :
௨0௨) இத் தெய்வப் புலவர்களின் வாக்குத் தப்பாதாகலின், கழாஅத்தலையாரின் வசைப்பாடலால் செல்வம் நிறைந்த
அரையமும் சிதைந்தொழிந்தது. ஆகையால், இச் சொல்லே ருழவர்களைப் பகைத்துக்கொள்ளுதல் அறிவின்மையே யாகும் என்று கபிலர் இடித்துக் கூறியுள்ளார்.

## ௯. ஒற்றுமை

இப் புலவர் பெருமக்களிடையே திகழ்ந்த குணப் பண்புகளுள் சிறப்பாக நாம் நோக்கத்தக்கது அழுக்கா றின்மை. ஒருவரை யொருவர் நன்கு தெரிந்து, பிறர் நலத்தைத் தயங்காது வெளியிட்டுக் கூறுவதற்கு அவர்கள் அஞ்சியதில்லை. பிறர் பெருமையைத் தெரிந்து கூறினல் எங்கே தன் பெருமை குன்றுமோ என்று மனம் குலைந்து புழுங்கிச் சாம்பியதில்லை. பிறர் பெருமையைச் சிறப்பித்துக் கூறித் தம் பெருமையைப் பெருக்கிக்கொண் டனர் என்றே சொல்லலாம். மேற் செய்யுளில் கபிலர் கழாஅத்தலையாரைப், "புகழ்ந்த செய்யுட் கழாஅத்தலையை"[1] என்று சிறப்பித்துள்ளார். ஆனல் கபிலர் எத்தகைய புலவர் என்பதை நோக்குவோம். பொருந்தில் இளங்கீரனர் என்பவர் ஒரு சிறந்த புலவர். இன்றும் சொற்பொழி வாளர்கள் விரும்பிக் கையாளும் சொற்றொடராகிய "விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்" என்னும் அருமை மொழியை நமக்கு வழங்கிய அரும் புலவர். அத்தகைய செம்மொழியாளர் மற்றொரு புலவரான கபிலரை,

> "[2]செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
> [3]வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்"

---

1. கழாஅத்தலை என்றது, கழாத்தலையார் என்னும் புலவரை.
2. செறுத்த - பல பொருளையும் அடக்கிய.
3. வெறுத்த - மிக்க.

என்று பாராட்டியுள்ளார். கபிலரால் சிறப்பித்துப் பாடப்பட்ட திருமுடிக்காரியை மாறோக்கத்து நப்பசலையார் என்னும் பெண்புலவரும் பாட நேர்ந்தது. அப்பொழுது அவ் வம்மையார், “அரசே! மாசற்ற அறிஞனாகிய கபிலன் இனிப் பாடுநர்க்கு இடமில்லாதவாறு, பரந்து புகழ்நிற்க நின்னைப் பாடியுள்ளான். அதன்பின் யான் நின்னை எவ்வாறு பாடவல்லேன்? சேர மன்னனின் மரக்கலத்தால் காவல் பூண்ட மேலைக்கடலினுள் வேறொரு மரக்கலம் நுழையவுங் கூடுமோ? ஆயினும், என் வறுமையின் கொடுமையால் நின்னைப் பாடத் துணிந்தேன்,” என்ற பொருளில்,

> “புலனழுக் கற்ற அந்த ணாளன்
> இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
> பரந்திசை நிற்கப் பாடினன் அதற்கொண்டு
> சினமிகு தானை வானவன் குடகடற்
> [1]பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
> பிறகலஞ் செல்கலா தனையேம் அத்தை[2]
> இன்மை துரப்ப இசைதர வந்துநின்
>
> —
>
> வண்மையிற் றொடுத்தனம் யாமே”

(புறம் : க௨சு)

என்று கபிலரைப் போற்றிப் பாடுகின்றார்.

பெருஞ்சித்திரனர் என்னும் பெரும்புலவர் ஆய் என்னும் அரசனது பெருமையை எல்லாம் அடக்கி, "திருந்து மொழி மோசி பாடிய ஆயும்" என்று சுருக்கமாகக் கூறி விடுகிறார். உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரை, "திருந்துமொழி மோசி" என்று சிறப்பிக்கிறார். அச் செவ்விய சீரிய மொழி படைத்த மோசியால் ஓரரசன் பாடப்பட வேண்டுமானல், அவ் வரசன் பலவகையிலும் ஓங்கிப் புகழ்படைத்த வீரமும் வண்மையும் திகழும் வள்ளலா யிருக்கவேண்டு மென்பது பெறப்படும். இன்னும், ஔவையார் கோவலூர் எறிந்து கொள்ளைப் புகழ்

1. பொலந்தரு - பொன்னைத்தரும்.
2. அத்தை - அசைச்சொல்.



கொண்ட அதியமானைப் பாடும்பொழுது, "வீர! ஏரே போரில் நீ ஏழு மாற்றரசரை முறியடித்த வன்றும் பாடுநர்க் கரியை; இன்றும் பரணர் என்னும் புலவர் ஒருவரே நின்னைப் பாடினர். அதுவும் தன் பெருமையாற் பாடினர். பிறரால் நின் வெற்றியைப் பாடுதல் எளிதன்று" என்று குறித்துள்ளார்.

" அன்றும் பாடுநர்க் கரியை இன்றும்

பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் [1] நூறிநின்
அரண்அடு [2] திகிரி ஏந்திய தோளே. "

(புறம்: கக)

இதனால் பரணரிடத்து ஔவையார் கொண்டுள்ள நன் மதிப்பு நன்கு விளங்கும். இவ்வாறு பண்டைப் புலவர் களிடையே இயல்பான அன்பும் நட்பும் வாய்மையும் இனி தமைந்து, அழுக்காறு அறவே கடிந்தொதுக்கப்பட்டது. அதன் பயனால் தமிழ்மொழியும் தழைத்தோங்கியது.

## ௯. மதிப்பு

இத்தகைய புலவர்களின் நன்மதிப்பையும், அன்பை யும், உரையையும், பாட்டையும் பெறவேண்டி அக் காலத் தமிழரசர்கள் ஒருவரை யொருவர் ஏறட்டுக்கொண்டு, அரும்பாடு பட்டனர். அப் புலவர்களின் உறவு தமக்குக் கிடைப்பதே பெரும்பேறு என்றும், அவர்கள் தம்மைப் புகழ்ந்து பாடும் வகையில் தாம் நடந்துகொள்வதே தம் வாழ்க்கையின் குறிக்கோள் என்றும் தமிழ் அரசர் கருதி வந்தனர். வீரம் காட்டி அரிதிற் பெற்ற பொருளை ஈரம் காட்டி எளிதி னளிக்கும் பேரரசர்களையே இப்புலவர்கள் சிறப்பித்துப் பாடும் இயல்புடையோர். ஆதலால், தமிழ் மன்னர் வீரமும் வண்மையுமே தம் பூணாகப் பூண்டு புலவர் பாட்டையே அதன் பயனாகத் துய்த்து வான்புக ழெய்தினர். தம்மையும் தம் நாட்டையும் புலவர்கள் புகழ்ந்து பாடும் வகையில் அரசர் நடக்க முயன்றனர். மதுரைக் காஞ்சி

---

1. நூறி - அழித்து. 2. திகிரி - ஆழி.

யின் தலைவனை தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன், "நான் என் பகைவரை முறியடித்துப் புகழ்சூடத் தவறுவனேல், ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங்குடி மருதனைத் தலைமையாகக் கொண்டு உலகுள்ளளவும் மாயாப் புகழ்படைத்த புலவோர் என் நாட்டினைப் புகழ்ந்து பாடாது கழிவதாக!" என்று வஞ்சினங் கூறுகிறான். பண்டைத் தமிழ்ப் புலவர்களின் புகழ் உலகுள்ளளவும் அழியாது நின்று பலராலும் ஏத்தப்படுமென்று இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த நெடுஞ்செழியன் கூறியது இன்றும் உண்மையாய் நாம் காண விளங்குகின்றது. என்றும் அப்புலவர் புகழ் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை. அப்பெற்றியராய் புலவர்களாற் பாடப்பட்டோர் இம்மை யின்பம் எய்துவதன்றி மறுமைக்கண்ணும் துறக்கவின்பம் அடைவர் என்பது,

> "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
> [1]வலவன் ஏவா வான வூர்தி
> எய்துப என்பதஞ் செய்வினை முடித்தென"

(புறம்: உ௭)

என்னும் முதுகண்ணன் சாத்தனார் வாக்கால் அறியலாம்.

## ரு. செந்நெறி

இப் புலவர்களிற் பலர்
கையரேனும், தம் வயிற்றை

வறுமையால் வாடிய வாழ்க்
வளர்ப்பதற்காக யாரையும்
பாடித் தம் புலமையை விற்றோரல்லர். வீர மன்னரைப்
புகழ்ந்தனர்; வீரமற்றோரை இகழ்ந்தனர். அறனழியச்
செய்வோரையும் அவர் வழிவழித் தோன்றல்களையும்
துகளாக மதித்துத் தா வென்று வெறுத்தனர். இளங்
கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச்
சென்ற பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் இளங்
கண்டீரக்கோவைப் புல்லி, இளவிச்சிக்கோவைப் புல்லா
ராக, ஏன் அவ்வாறு செய்தீர் என்று வினவியபொழுது,

1. வலவன் - பாகன்.



"இளவிச்சி க்கோ பெண்கொலை புரிந்த நன்னன்
மரபிலே தோன்றியவன்; அதுவுமன்றி, செந்தமிழ்ப்
புலவர்களைப்
பேணாத
வர்கள்

சிறுமையோன். ஆதலின், என்போன்ற புல
அவனது விச்சிமலையைப் பாடாது நீங்கினர்.

ஆகையால் யான் அவனை மதிப்பதில்லை" என்று கூறியதாக, புறம் கருக-வது பாடல் தெரிவிக்கிறது. இதனால் அக்காலப்

புலவர்கள் அரசர்களை மார்புறத் தழுவி மகிழ்ந்துறவாடினர் என்பதும், பழியுடை மன்னரைப் பதரென ஒதுக்கினர் என்பதும் அறியலாம்.

இப் புலவர் பெருமக்கள் பருத்திவேலிச் சீறூர் மன்னரையும், யானை யெருத்தத் திலங்கும் முடிகெழு வேந்தரையும் ஒன்றாகவே கருதி யொழுகினர். யாவ ராயினும் உண்மையைக் கண்டு உரைத்தனர்; வண்மை யைக் கண்டு வாழ்த்தினர்; வெண்மையைக் கண்டு வெறுத்தனர். வன்பரணர் என்னும் புலவர் கண்டீரக் கோப் கண்டு

பெருநள்ளியின் மாறாது வழங்கும் கொடையைக் வியந்து, அவனிடம், "வள்ளால்! நீ பரிசிலர்க்கு மனத்தானமர்ந்து இனிதளிக்கும் கொடையைக் கண்டு எம்முடைய சிறிய செவ்விய நாவானது பிற மன்னர் களைப் பாடுதல் அறியாதாயிற்று" என்று மகிழ்ந்து கூறும் பாடல் :—

"[1]கறங்குமிசை யருவிப் பிறங்குமலை நள்ளிநின்
அசைவில் நோன்[2]றாள் நசை[3]வளன் ஏத்தி
நாடொறு நன்[4]கலங் களிற்றொடு கொணர்ந்து
[5]கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்[6]முற் றளிப்பப்

பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
"எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே."
(புறம்: கசஅ)

1. கறங்கல் - ஒலித்தல். 2. தாள் - முயற்சி.
3. வளன் - செல்வம். 4. கலம் - அணிகலம்.
5. கூடு - நெற்கூடு. 6. முற்றுதல் - சூழ்தல்.
7. எய்யாதாகின்று - அறியாதாயிற்று.



இங்கு வன்பரணர், தம்முடைய நாவானது பொய் கூறாதாகலின், 'செந்நா'என்றும், தற்புகழ்ந்தாராகா திருத்தல் பொருட்டுச் 'சிறு செந்நா' என்றும் பாடிய நயம் அறிந்து மகிழற்பாலது. பிறர்க்கீயும் பெருமையில்லாத அரசரைப் 'பீடில் மன்னர்' என்று குறித்து, அன்னவரைத் தம்முடைய நாவானது பாடியதில்லை என்று பெருமிதமெய்துகின்றார். இவ் வன்பரணர் வாக்கோடு திருந்துமொழி மோசியின் கூற்றும் ஒப்பிடற்பாலது.

"பெரிய ஓதினுஞ் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவிற்

பாடின் மன்னரைப் [1]பாடன்மா ரெமரே." (புறம்: நஎஒ)

இவ்வாறு மோசியார் திண்ணமாய்க் கூறுவதால், அவர் தம்மோடு பயின்றுவந்த ஏனைப்புலவர்களும் பெருமையில்லாத மன்னரைப் புகழ்ந்து பாடமாட்டார்கள் என்பதை நன்குணர்ந்திருந்தார் என்று கொள்ளலாம்.

பண்டைப் புலவர்கள், சிற்றரசர்கள் வேளிர்களாயினும், வள்ளல்களாயுள்ளவர்களை வாயார வாழ்த்தி, முடிவேந்தராயினும் ஈயாதோரை நாணச் செய்து தமிழ் நாட்டில் விளங்கினர் என்பதை,

"வையக வரைப்பில் தமிழகங் கேட்பப்
பொய்யாச் செந்நா [2]நெளிய ஏத்திப்
பாடுப வென்ப பரிசிலர் நாளும்
ஈயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே" (புறம்: கசஅ)

என்ற பிட்டங் கொற்றனைக் குறித்த அடிகளால் நாம் எளிதி னுணரலாகும். மோசியார், வேள் ஆயை நெடுங் காலம் அறியாதிருந்து பின் அவனது நட்பு உண்டாய காலத்துத் தாம் அவனைத் தெரிந்துகொள்வதற்கு முன் சென்ற காலமெல்லாம் வறிதே கழிந்ததே என்று வருந்திப் பாடியுள்ளது யாவரும் அறிதற் கொன்றாகும்:—

---

1. பாடன்மார் - பாடுதலைத் தவிர்வாராக.
2. நெளிய - வருந்தும்படி.

"முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே
ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னுவே
பாழூர்க் கிணற்றின் தூர்கவென் செவியே"

(புறம்: ௧௬௨)

என்பதில் ஆயினிடத்தில் மோசியார் கண்ட குணச்சிறப்புக்களின் பயனாக, அவன்மீது தாம் கொண்ட அன்பின் பெருக்கே இங்குக் கவிப்பெருக்காய் ஓடுவதை யாவரும் அறியலாம்.

## ௬. தன்மானம்

இப் புலவர்கள், இன்மையால் இடருழந்து வாடிய இடத்தும், தன்மானம் கெட வரும் வாழ்க்கையைக் கைக்கொண்டிலர். உயரிய எண்ணங்களை விழுமிதின் நுவன்று, கிளர்ந்தெழுந்த தணியா உள்ளத்தராய், முற்றிய திருவின் மூவராயினும் பெட்பின் றீதலைத் தாம் வேண்டா ஆளியனையராய் அன்னார் விளங்கினர். "பெரிதே யுலகம் பேணுநர் பலரே" என்ற உறுதி படைத்த உள்ள வெறுக்கையர். அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டித்தவழி ஔவையார்;

"தன்னறி யலன்கொல் என்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
[1]வறுந்தலை யுலகமு மன்றே அதனாற்
[2]காவினெம் கலனே சுருக்கினெம் [3]கலப்பை

மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"
(புறம் : உ0௬)

என்று கூறி வெளியேறினர். இப்புலவர் தம் வரிசை
யறியாது தரும் பரிசிலைச் சிந்தையாலுந் தொடாச் செம்மைக் குணத்தோர். உள்ளங் குளிர உவந்தெதிர்கொண்டு அகங்க வாரா முகனழி பரிசில உதறி யெறிந்து, பெருஞ்சித்திரனார்,

1. வறுந்தலை - வறிய இடம்.
2. காவினெம் - தோளில் தூக்கினேம்.
3. கலப் பை - கலங்களையுடைய பை.







௦ "காணாது ஈத்த இப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்

தினையனைத் தாயினும் இனிதவர்
[1] துணையள வறிந்து நல்கினர் விடினே"

(புறம் : உ0அ)

என்று அதியமான் நெடுமானஞ்சியை நீங்கிச் சென்றதாக

நாம் படிக்கிறோம்.

இப் புலவர்கள் இரவலர் வாழ்க்கையைப் பூண்டு அரசர்களின் கைவண்மையை எதிர் நோக்கி வாழ்ந்தன ரேனும், அவ்வரசர்களின் முன்னிலையில் அஞ்சி யொடுங்கி அவலமுற் றறிந்தறியார். தம்மைக் காக்கும் வள்ளல்களே யாயினும் அரசர்களைப் புலவோர் தம் நண்பர்களாகவே கொண்டு, உயர்வு தாழ்வெனும் யாதொரு வேற்றுமையு மின்றி அளவளாவி மகிழ்ந்தனர். அரசர்களும் அப்புலவர் களுக்குரிய பூசனையைப் புரிந்து தம்முடன் வைத்துப் போற்றிப் பரிவு காட்டினர். முரசு கட்டிலில் துயின்ற மோசிகீரன் என்னும் புலவருக்குச் சேரவரசன் விசிறி கொண்டு வீசிப் புகழ்படைத்தது யாவரும் அறிந்ததே. அரசர் கோயிலைத் தமக்குரிய வீடாகவே மதித்துப் புலவர் கள் இனிது பழகிவந்தனர். மாற்றரசர் அஞ்சி யொடுங்கிக் குலைநடுங்கும் அத்தாணி மண்டபத்தின்கண் தமிழ்ப்புல வோர் பெருமிதத்துடன் அண்ணாந்து தலை நிமிர்ந்து போவதும் வருவதுமாய் இருப்பர். சேரமான் குட்டுவன் கோதையின் மண்டபத்தினுள் தாமும் ஏனைப் புலவர்களும் பழகியிருந்த தன்மையை மாடலன் மதுரைக்குமரன் என்னும் புலவர்,

"எங்கோன் இருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல இடையின்று குறுகிச்
[2]செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்
[3]எம்மன வாழ்க்கை இரவலர்க் கெளிதே" (புறம் : ருச)

என்று பாடியுள்ளார்.

1. துணை - கல்வி முதலியவற்றின் எல்லை.
2. செம்மல் நாளவை - தலைமையுடைய திருவோலக்க அர சவை. 3. எம்மன வாழ்க்கை - எம்மைப்போலும் வாழ்க் கையை யுடைய.



## எ. பீடு நடை

பண்டைப் புலவர்களின் ஏறுபோன்ற பீடு நடையை நாம் என்றும் மறுத்தல் கூடாது. இவர்களுக்கு இவ் வகைப் பெருமிதம் எவ்வாறு வந்தது? அவர்கள் கற்ற கல்வியிஞலேதான் வந்தது. சோழன் நலங்கிள்ளியுழை நின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்று வந்தானென்று கொல்லப் புக்குழி, கோவூர்கிழார் என்னும் புலவர் குறுக் கிட்டு, "அரசே! புலவர்களது வாழ்க்கை பிறர்க்குத் தீங்கு செய்வதொன்றன்று; ஊர் பல கடந்து நெடுந்தூரம் சென்று உதவியாளர்களாக விளங்கும் அரசர்களை நாடி யிருந்து, பரிசில் பெற்று, சுற்றம்பேணிப், பிறர்க்கும் ஈந்து தாமும் உண்டு மகிழ்வர். இன்னும், அவர்கள் தம் போன்ற புலவர்களைக் கல்வியான் வாதாடி வென்று, தலை யெடுத்து நடந்து நிலமாளும் அரசர்கள் போலத் தலைமை யும் எய்துவர். ஆகையால் இக் குற்றமற்ற புலவர்களில் ஒருவரான இளந்தத்தன் என்னும் இவரைக் கொல்லாது விடுவாயாக!" என்று வேண்டி அப் புலவரின் உயிரைக் காப்பாற்றினதாக வரும் பாடல்:—

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி

நெடிய என்னாது சுரம்பல கடந்து
[1]வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு [2]கூம்பாது வீசி
[3]வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் [4]தீதறிந் தன்றோ இன்றே, திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்

1. வடியா - திருந்தாத. 2. கூம்பாது - உள்ளம் மலர்ந்து.

3. வரிசைக்கு – தகுதிக்கு.

4. தீதறிந்தன்றோ இன்று - இல்லை.

கொடுமையறிந்தோவெனின் ›



மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே."

(புறம் : சஎ)

இக் கோவூர் கிழார் தாமும் பரிசில் வாழ்நருள் ஒருவராத லின், திருந்திய நாவுடைப் புலவர்களை "வடியா நாவின் வல்லாங்குப் பாடி" என்று குறிப்பிட்டார். இவ்வழகிய பாடல் பண்டைப் புலவர்களின் வாழ்க்கையைப் படம் பிடித்ததுபோல் நமக்குத் தெளிவுறுத்துவதாகும். இதி லிருந்து, அவர்கள் வள்ளல்களைப் பாடிப் பரிசில் பெற்று வாழ்வோர் என்பதும், பிறர்க்குச் சிறிதும் தீங்கு விளைக் காத சீலமுடையோர் என்பதும், தம்மிடையே சொற் போர் நிகழ்த்தித் தம் கல்வித்திறனைக் காட்டிப் பெருமிதம் எய்துவர் என்பதும், அரசவைகளில் அண்ணாந்து நடந்து தலைமை தாங்குவோர் என்பதும், பலவிடங்களுக்கும் சுற்றி யலைந்து உலகியலை நன்கு அறிந்தோர் என்பதும் புலனாகும்.

## அ. தொண்டு

சோழன் நலங்கிள்ளிக்கு வேண்டியவரான கோவூர் கிழார் அவனின் பகைவனை நெடுங்கிள்ளிக்கும் வேண்டியவராகவே காணப்படுகிறார். நெடுங்கிள்ளி உறையூர் புக்கிருந்த காலத்தில் சோழன் நலங்கிள்ளி அவ்வூரை முற்றுகை யிட்டான். அது தெரிந்த கோவூர்கிழார், ஒரு குலத் துதித்த அவ்விருவரும் அவ்வாறு சண்டை செய்வது அக்குலத்திற்கே பெரும்பழி யுண்டாக்கும் என்றும், ஏனை அரசர்கள் கண்டு நகைசெய்வர் என்றும் கூறிச் சந்து செய்வித்தார். நலங்கிள்ளி ஆவூர் முற்றியிருந்த காலத்துப் போர் செய்யாது அச்சத்தால் அடைத்திருந்த நெடுங்கிள்ளியை நோக்கி, "நாணுத்தகவுடைத்திது காணுங்காலே" என்று இடித்துரைத்தார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானையின் காலால் இடறச் செய்வுழிக் கோவூர்கிழார் அதனைத் தடுத்து, புலவர்களின் வறுமைத் துன்பத்தைக் கண்டஞ்சி தன் உடைமையை யெல்லாம் இல்லை யென்னாது பகுத்துக் கொடுக்கும் பேருதவியாளனாய் விளங்கிய அம்மலையமான் மக்களின் உயிரைப் பாதுகாத்தனர் என்று புறம்



௪௬-வது பாடலால் அறியலாம். இப்பாடலில் புலவர்களைப் 'புலனுழுதுண்மார்' என்று குறித்துள்ளார். நிரந்தினிது சொல்லுதல் வல்லரான கோவூர்கிழார் அரசர்களிடையே புகழ் படைத்து அவர்களுடைய நன்மதிப்பைப் பெரிதும் பெற்றிருந்ததனால் அவர்களிடையே நிகழ்ந்த பல பூசல்களைத் தீர்த்துப் பல அரசர்களையும் நன்னெறிக் குய்த்த பெரியார் ஆவர் என்று தெரிகிறது.

பண்டைப் புலவர்கள் இளமையில் வறுமை யுற்று வருந்தினரேனும், பின்னர்ப் பேருதவியாளர்களான அரசர்களை யடுத்துச் செல்வத்தில் திளைத்துப் பெருவாழ் வெய்தினர் என்பதில் ஐயமில்லை. தமிழையே தாய்மொழி யாகக்கொண்ட தலைமையோரே அரசர்களாய் அக்காலத்து விளங்கியதனால், அருந்தமிழும் அன்புடன் போற்றி வளர்க்கப்பட்டது. தமிழ்ப் புலவர்களும் அரசவைகளில் முதலிடம் பெற்றுப் பெருமையுடன் பொலிவெய்தினர். தமிழ்அரசர்கள் தமிழ்ப் புலவர்களைத் தங்கள் உயிரினும் மேலாகப் பூசித்து வழிபட்டனர். தம்பியால் நாடு கொள் ளப்பட்டுக் காட்டில் மறைந்திருந்த குமணனிடம் பெருந் தலைச் சாத்தனார் என்னும் புலவர் சென்று பாடி நின்றாராக, வறியனான அவ்வள்ளல் தன் தலையை அரிந்து தம்பி கைக் கொடுத்தால் புலவருக்குத் தக்க விலை கொடுப்பானென்று எண்ணித் தன் உடைவாளைப் பெருஞ் சித்திரனார் கைக் கொடுத்தான். அவ் வாளைக் கொண்டு இளங்குமணற்குக் காட்டி அப் புலவர் பின்வருமாறு உள்ள முருகப் பாடி யுள்ளார் :

> "பாடி நின்றனெ னாகக் [1]கொன்னே
> பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
> நாடிழந் ததனினும் நனியின் னாதென
> வாள்தந் தனனே தலையெனக் கீயத்
> தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்
> [2]ஆடுமலி யுவகையொடு வருவல்
> [3]ஓடாப் பூட்கைநின் [4]கிழமையோற் கண்டே." (புறம்:கசுரு)

---

1. கொன்னே - பயனின்றி. 2. ஆடு மலி - வென்றி மிக்க.
3. ஓடாப் பூட்கை - பின்னிடாத மேற்கோளையுடைய.
4. கிழமையோன் - (ஈண்டுத்) தமையன்.

## ௯. நட்பு

நோயின்றி நெடுங்காலம் வாழும் வாழ்க்கையை அளிக்கும் நெல்லிக்கனி யொன்றை அதியமான் உண்ணப் புகுந்த காலையில் அவன் நிழலுறையும் ஔவையார் அங்குத் தோன்றினர். அதியமான் அக் கனியைத் தான் உண்ணாது ஔவையாரை உண்பித்துத் தான் உள்ளம் மகிழ்ந்தான். தான் வாழ்வதைவிட அத் தமிழ்ச் செல்வி நெடுங்காலம் வாழ்ந்து தமிழைப் பேணவேண்டும் என்பதே அவ் வள்ளலின் விருப்பமாகும். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனை அத் தகைசால் வேந்தனது இரக்க உள்ளத்தைப் பாராட்டி ஔவையார், "நீலமணிமிடற் றொருவன்போல மன்னுக பெரும நீயே!" என்று வாயார வாழ்த்திப் போற்றினர். தன்னுடைய ஆக்கம் கருதாமல் நஞ்சையுண்டு பல்லுயிர்களையும் காத்தருளிய நனி நாகரிகரான சிவபெருமான் சாதற்குக் காரணமாகிய நஞ்சை யுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல, அதியமானும் சாவாதிருக்க வேண்டும் என்ற கருத்தமைத்தே "நீலமணிமிடற் றொருவன் போல" என்று அம்மையார் திருவாக்கு எழுந்துள்ளது. அவ் வாக்கின்படியே இந் நிலவுலகிற் பொன்றாது நிலைநிற்பதாகிய புகழ் அதியமான் சார்பில் என்றும் உளதாயது. அவன் அவ்வாறு ஈயாது தானே அக் கனியை அருந்தியிருப்பின் அவனது ஆக்கைபோல் அவன் பெயரும் மங்கியிருத்தல் கூடும்.

அதியமான் ஔவையாரிடத்தில் பேரன்பு படைத்தவன். அம் மூதறிவாட்டியின் இன்றமிழ்ப் பாடல்களுக்கு உருகி மனங்குழைந்து அருள் சுரந்தான். புதல்வரின் மழலைமொழிக்குத் தந்தையர் அருளுதல்போல், அதியமானும் தன் வாய்ச்சொல்லுக்கு அருளினன் என்று அப் புலவரே பாடியுள்ளார். அதியமானுக்காக ஔவையார் தொண்டைமானிடத்துத் தூதுசென்று, அவனது படைக்கலக் கொட்டிலைப் புகழ்வதுபோல் அவனது வீரத்தைப் பழித்துக்கூறி அவனது செருக்கை அடக்கிய செய்தி யாவரும் நன்கறிந்ததே.

அதியமான் போரில் வேலேற்று விழுந்தபொழுது ஔவையார் மனங்கலங்கிப் பாடிய பாடல் கல்லையுங் கரைவிப்பதாகும். தன்னிடம் உள்ளது சிறிதானாலும் அதை முழுதும் தமிழ் வாணருக்குக் கொடுத்துத் தான் வறிதிருப்பான். உணவருந்தும்பொழுதும் ஔவையார் பாடல்களைக் கேட்டு இன்புறுவான். சுவை மிகுந்த உணவுப் பகுதியை எல்லாம் தான் விரும்பாது புலவருக்கே கொடுப்பான். ஔவையாரிடத்துத் தான் கொண்ட பேரன்பினால் நரந்தப் பூ நாறும் தன் கையால் அப் புலவர் பெருமாட்டியின் தலையைத் தைவந்து அருள்காட்டுவான். அவ்வள்ளல் இறந்துபட்டது, இசைப்பாணருக்கும் இரவலர்க்கும் அவன் சுற்றத்தாருக்கும் புலவர்களுக்கும் பெருந்துயர் விளைப்பதாயிற்று. அதனால் அவன் மார்பில் தைத்த வேல் அதோடு நிற்காது, பாணரது இரவோட்டைத் துளைத்து, சுற்றத்தார் கண்ணையும் உருவிச் சென்று, இரப்போரது கையையுந் துளைத்துப் புலவர்களது நாவிற் பட்டதேயாகும். அதனால் இனிப் பாடுவோருமில்லை, பாடுவோரைப் பாது காப்போருமில்லை என்று ஔவையார் கசிந்துருகிக் கதறிய பாடல் :-

"சிறியகட் பெறினே எமக்கீயு [1]மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயு மன்னே ;
அம்பொடு வேல்நுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறும் தன்கையாற்
புலவுநாறும் என்றலை தைவரு மன்னே ;

அருந்தலை [3]இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்

---

1. மன்னே - அது கழிந்தது.
2. பாட - உண்டு பாட.
3. இருமை - பெருமை.



## புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்

[1]அருமிறத் தியங்கிய வேலே;
[2]ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ

இனிப், பாடுநரு மில்லை பாடுநர்க்கொன் றீகுநரு மில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்

சூடாது வைகி யாங்குப் பிறர்க் கொன்
றீயாது வீயும் உயிர்தவப் பலவே."

(புறம்: உகூ)

இங்குப் புலவர்களை, அழகிய சொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்ச்சியையுடைய அறிவினையுடையோர் என்னும் பொருள்பட, 'அஞ்சொல் நுண் தேர்ச்சிப் புலவர்' என்று ஔவையார் பாடியிருத்தல் நோக்கத்தக்கது. அதியமானின் செங்கைப் பெருமையைக் குறிக்க "நரந்த நாறும்" என்றும், தன் தலையின் சிறுமையைக் குறிக்கப் "புலால் நாறும்" என்றும் கூறியுள்ளார்.

## கo. நன்றியறிவு

அரசர்கள் புலவர்களிடத்தில் அன்புடன் ஒழுகியது போல் புலவர்களும் அரசர்களிடத்துப் பேரன்பினர்களாயிருந்தனர். புலவர்கள் அரசர்களின் வண்மைக் குணத்தைச் சிறப்பித்துப் பாடியது போல் அவர்கள் போர்த் தொழிலையும் வீரத்தையும் வியந்து பாடியுள்ளனர். அரசர்களைப் பின்பற்றிப் போர்க்களங்களுக்கும் சென்று அவர்களுக்கு வெற்றியுண்டாக வேண்டுமென்று வாழ்த்தித் தொழுதனர். தம்மைப் புரந்த மன்னர்கள் போரில் மடிந்தால் தாமும் உலக வாழ்க்கையை வெறுத்து அந்நாட்டை விட்டகன்றனர். பாரியின் பறம்பு பகைவர் கைப்பட்டுப் பாரி இறந்ததும் அவனுடன் நெடுங்காலம் வாழ்ந்த கபிலர், பாரியின் மகளிரையும் அழைத்துக்

---

1. அரு நிறத்து - அரிய மார்பில்.
2. ஆசு ஆகு - எமக்குப் பற்றுக்கோடு ஆகிய.

கொண்டு அம் மலைநாட்டை விட்டு நீங்கினர். பாரியின் மகளிருக்குத் தகுந்த மணம் முடித்தல் வேண்டி அரிது முயன்று அலையலுற்றார். தன் தோழனை பாரியின் மக ளிரைத் தன் மகளிராகவே கொண்டு பேணினர் என்பது,

> "நெடுமாப் பாரி மகளிர் ; யானே
> தந்தை தோழன் ; இவரென் மகளிர் ;
> அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே"

(புறம்: உ0க)

என்று இருங்கோவேளிடம் சொல்லுவதிலிருந்து தெரிய லாம். பின்னர்ப், புண்பட்ட மனத்துடன் பாரி மகளிரைத் தகுமிடத் தமர்த்திப், பாரியின் பிரிவை யாற்ருது, மறு பிறப்பிலும் அவனே டுறைதலை வேண்டி, வடக்கிருந்து உயிர்நீத்தார். கபிலர் பாரியிடம் கொண்டிருந்த நட்பின் பெருமைதான் என்னே ! எழுமையும் தொடரும் கெழுமிய நட்புடைய அவர் அவனேடு உயிர் துறந்திருப்பார். ஆனல் அவ்வமயம் பாரி தடுத்துவிட்டான். பாரியின் மகளிருக் காகச் சிறிதுகாலம் உயிர் வைத்திருந்தார். அவ்வாறு அவர் வடக்கிருந்தபொழுது அன்பலைத்து என்புள்ளுருக்கும் அருங்கவி யொன்று பாடியுள்ளார்:

> "[1] கலையுணக் கிழிந்த [2] முழவுமருள் பெரும் [3]பழம்

சிலைகெழு குறவர்க் [4]கல்குமிசை வாகும்

மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீயெற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பின் நட்பிற் கொல்லா
[5]தொருங்குவரல் விடாஅ தொழிகெனக் கூறி
இனையை யாதலின் நினக்கு மற்றியான்

1. கலை – முசுக்கலை என்னுங் குரங்கு.
2. முழவு மருள் – முழவு போலும்.
3. பழம் – (ஈண்டுப்) பலாப்பழம்.
4. அல்கு மிசைவு – வைத்திருந்து உண்ணும் உணவு.
5. ஒருங்கு வரல் – உடன் வருதற்கு.

## சஅ. புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

[1]மேயினே னன்மை யானே யாயினும்
இம்மை போலக் காட்டி யும்மை
[2]இடையில் காட்சி நின்னோ

டுடனுறை வாக்குக உயர்ந்த [3]பாலே." (புறம் : உ௩௬)

இக்கவியில் ஒவ்வொரு மொழியும் அன்பில் ஊறி

அகத்தி

னை மறழுந்துள்ளது. புலவரது
மனவுணாசசுயைக கள்ள
மின்றி உள்ளவாறே கனியக் கனியக்
கட்டுரைக்கின்றது
இக்கவி யென்னலாம்.

இவ்வாறு அரசர்கள் இறந்தால் அவர்களோடு நட்புப் பூண்டு ஒழுகிய புலவர்களும் உடன் உயிர்துறக்கும் வழக்கம் அக்காலத்திருந்தது என்பதற்கு இன்னும் ஒரு சான்று உண்டு. கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து உயிர் நீத்த காலை, அவனுடன், பிசிராந்தையாரும் உயிர் விட்டார். இவர் கோப்பெருஞ் சோழனை நேரிற் கண்டறியாதிருந்தும், அவன் புகழைப் பல்லாற்றானுங் கேட்டு மனமகிழ்ந்து அவனிடத்து அழியா நட்பும் அன்பும் கொண்டிருந்தவர்; பாண்டி நாட்டுப் பிசிர் என்னும் ஊரில் வாழ்ந்த புலவராவார். அவன் வடக்கிருக்கும் செய்தி கேட்டு, விரைந்து வந்து அவனருகில் தாமும் இருந்து உயிர்துறந்தார். கோப்பெருஞ் சோழனுக்குப் பொத்தில் நண்பினரான பொத்தியார் என்னும் புலவரும் அவனுடன் வடக்கிருக்க முற்பட்ட பொழுது, கருவுற்றிருந்த அவரின் மனைவியார் மகவீன்பது கண்டு மகிழ்ந்தபின் வருகெனக் கோப்பெருஞ் சோழன் நிறுத்திவிட்டான். தனக்குக் குழந்தை பிறந்த பின்னர், பொத்தியார் சோழனது நடுகல்லை யடைந்து, "என்னிவண் ஒழித்த அன்பிலாள! என் இடம் யாது?" என்று அன்பு ததும்ப வினவிய பாடல், அக்கல்லையும் நகரச்செய்து இடனளித்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

---

1. மேயினேன் அன்மையான் - பொருந்தினேனல்லாமை யால்.

2. இடையில் காட்சி - இடைவிடாத காட்சி.
3. பால் - விதி.

## புறநானூறும் புலவரும்

சசு

ஆலத்தூர்கிழார் என்னும் பெரும்புலவர் கிள்ளிவளவனிடத்தில், "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னும் அருங்குறளின் நுண்பொருளை விளக்கி, "வேந்தே! அல்லும் பகலும் நீ அளிக்கும் விருந்தை அயர்ந்து நின்னை வாழ்க என்று வாழ்த்தாதொழியின் உயிர்களுக்கு அலகாகிய கதிரவனும் தோன்றுதலைச் செய்யாது உலகம் இருளில் ஆழ்ந்துவிடும்" என்று பாடியதிலிருந்து இப் புலவர்கள் செய்ந்நன்றி யறியும் செம்மைக்குணம் படைத்த சிலர்கள் என்று நன்குணரலாம். இன்னார் அரசர்களுக்கு வேண்டிய அரசியல் நீதிகளை வேண்டும்பொழுது விரித்துரைத்ததன்றி அவ்வரசர்களின் குடும்ப வாழ்க்கையிலும் குறுக்கிட்டு வேண்டும் உதவி புரிந்து வந்தனர் என்பது பேகனது வரலாற்றிலிருந்து நாம் அறியலாம்.

## கக. கல்விப் பெருக்கம்

முத்தமிழில் வல்லுநராய் மூதறிவு படைத்து விளங்கியதுமல்லாமல் சான்றோர் எனச் சிறந்த இப் புலவர் பெரியார்கள், வான நூல், நிமித்தங்கண் டறிதல் முதலிய பல கலைகளிலும் கற்றுத் துறைபோகிய கலைஞராவர் என்பது பல புறநானூற்றுப் பாடல்களாலும் உணரத்தகும். இன்னும் இப் புலவர் பெருமையைப் பேசின் பெருகிக் கொண்டே போகுமாகலின் இத்துடன் நிறுத்துவாம். இவர்களது வரலாற்றைப் படிக்குந்தோறும் நமக்கு முதன்மையாய்த் தோன்றுவது அக்காலத்துக் கல்விப் பெருக்கமேயாகும்.

> "ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக வென்னா தவருள்
> அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்"

என்ற பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் வாக்கு இங்கு நினைத்து மகிழற்பாலது.

---



# உ. புறநானூறும் கலைகளும்

---

[டாக்டர், அ. சிதம்பரநாத செட்டியார், எம்

ஏ.]

சங்க நூல்களில் ஒன்ருகிய புறநானூற்றில் ஒரோ வோர் இடத்திற் கலைகளைப்பற்றிய குறிப்புக்கள் காணப் படுகின்றன. அக் குறிப்புக்களைத் திரட்டி ஒருவாறு ஒழுங்குபடுத்திக் காட்ட முயலுவேன்.

## க. இசை

அக்காலத்துத் தமிழ்மக்கள் இன்னிசையில் மிக்க பயிற்சியும் பற்றும் விருப்பமும் உடையராய் இருந்தனர் என அறிகின்ருேம். யாழ், குழல் முதலிய இன்னிசைக் கருவிகளை இயக்கி இன்பம் துய்த்தார் என அறிகின் ருேம். இன்னிசை இயக்குவதாற் பேய்களை வெருட்ட முடியும் என்பதை அறிந்திருந்தார்கள். எடுத்துக்காட்டாக, வீரன் ஒருவன் போர்க்களத்திலே மார்பிற் புண்பட்டானுக, அப் புண்ணை உண்ணவரலாகும் பேய்களைத் தடுப்பான் கருதி, காஞ்சிப் பண்ணைப் பாடி யாழையும் குழலையும் இயக்குவோம் என்று சொல்லித் தலைவி தோழியை அழைப்பது போன் றமைந்த பாட்டொன்று புறநானூற் றிற் காணப்படுகிறது.

> " தீங்கனி [1]யிரவமொடு வேம்புமனைச் செரீஇ
> வாங்குமருப் பியாழொடு பல்லியம் கறங்கக்
> கைபயப் பெயர்த்து மையிழுது [2]இழுகி
> [3]ஐயவி சிதறி [4]ஆம்பல் ஊதி

---

1. இரவமொடு-இருள்மரத்தழையோடு. 2. இழுகி-இட்டு.
3. ஐயவி - வெண் சிறுகடுகு. 4.

ஆம்பல் - ஆம்பலங்குழல்.



இசைமணி எறிந்து [1]காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடி[2]நறை புகைஇக்
காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே
" (புறம்: உ௮க)

வீரன் இன்னொருவன் அரசனாற் பெருஞ் சிறப்புச் செய்யப் பெற்றவன், போர்க்களத்திலே சாதல் விருப்பத்தோடு சென்றவன், இப்பொழுது மார்பிலே புண்பட்டு வீழ்ந்திருக்கிறான். அவனைச் சுற்றிப் பறவைகள் பல வட்டமிடுகின்றன. நரியும் வரும்போல இருக்கிறது. அவன் பறவைகளாற் பற்றப்படாமலும் நரியாற் கவரப்படாமலும் இருக்கும்பொருட்டு இன்னிசை இயக்குக என நெடுங் கழுத்துய பரணர் என்பார் பாடினர்.

"சிறாஅஅர்! துடியர்! பாடுவல் [3]மகாஅஅர்
தூவெள் அறுவை மாயோற் குறுகி

[4]இரும்புட் பூசல் ஓம்புமின்; யானும்
[5]விளரிக் கொட்பின் வெள்நரி கடிகுவென் "(புறம்: உகக)

என்று கூறியவிடத்து, சிறுவரையும் துடியரையும் பாடுத லில் வல்ல மக்களையும் அழைத்துத் தலைமகனைப் பறவை களினின்றும் பாதுகாக்கும்படி சொல்லுகிறார். விளரி என்னும் இரங்கற் பண்ணைப் பாடி அங்கே வரும் நரியை ஓட்டுவேன் என்றுஞ் சொல்லுகிறார். அவ் விரங்கற் பண்ணைப் பருந்தின் சுழற்சியைப்போல வட்டமிட்டுப் பாடுவதால் நரிகளை ஓட்டமுடியும் என்று அக் காலத்திற் கண்டிருந்தார்கள்.

இத்தகைய இன்னிசைகள்

இல்லாவிடங்களில், கொடிய

முரசு ஆர்க்கும் இடங்களில், பருந்துகள் மிகப் பலவாய்

1. காஞ்சி - காஞ்சிப்பண். 2. நறை - அகில் முதலியன.

3. மகாஅஅர் - பாண்மக்கள்.

4. இரும்புட் பூசல் - பறவைகளைப் போன்று செய்தல்.

ஆரவாரம்

5. விளரிக் கொட்பின் - விளரிப் பண்ணின்

சுழற்சியால்; புறநானூறும் கலைகளும்



வந்து வட்டமிட்டு, புண்பட்ட வீரர் மார்பை

அவர் தம்

மனைவியர் முயங்க இடங்கொடாது மொய்த்தன

என்பது

கழாத்தலையார் பாடிய செய்யுள் ஒன்றால்

விளங்குகிறது.

யாழ், குழல் முதலிய

வாய்ப்பாட்டாலும் மக்கள்

இன்னிசைக் கருவிகளாலும்

இன்பம் துய்த்ததேயன்றி,

பேய் பிசாசுகளை ஓட்டவும்

இவற்றால் அறியப்படுகிறது.

அறிந்திருந்தார்கள் என்பது

பேய்களை ஓட்டுதற்குரிய

உச்சாடணம் என்பது ஒரு கலை. இசைக்கலையில்

தமிழர் அக் கலை துணையாகவே மற்றொரு கலையாற்

வல்ல

பெற

லாகும் பயனையும் பெற்றிருந்தார்கள்

அறியக்கிடக்கிறது.

என்பது இதனல்

அக் காலத்தில், இசைக்கலையில் வல்லுநரை ஆதரித் தோர் பலர். அரசர் முதலானோர் பாணர்க்குப் பொன்னு லாகிய தாமரைப்பூ வெள்ளி நாரால் தொடுத்ததனையும், பாடினிக்குப் பொற்கலன்களையுங் கொடுத்துச் சிறப்புச் செய்தனர். எடுத்துக்காட்டாக, பாடவல்ல பாணன் ஒரு வனை நோக்கி,

> " நின்
> பாடினி மாலை யணிய
> [1]வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே "

(புறம் : ௩௨௧)

என ஆலங்குடி வங்கனர் உரைத்ததைக் கூறலாம்.

> " மறம்பாடிய பாடினியும்மே
> ... ... ... ... ...
> சீருடைய [2]இழைபெற்றிசினே
> ... ... ... ... ...
> ... ... பாண்மக னும்மே
> ... ... ... ... ...
> ஒள்ளழல் [3]புரிந்த தாமரை
> வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே "

(புறம் : ௧௧)

எனப் பேய்மகள் இளவெயினி இயம்பினர்.

1. வாடாத் தாமரை - பொன்னாலான தாமரைப் பூ
2. இழை - அணிகலம். 3.

புரிந்த - ஆக்கப்பட்ட

## ருசு புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

தமிழ்ப் பெரு வேந்தர் மூவரும், சிற்றரசரும், செல்வர் பிறரும் பாடவல்ல ஆடவரையும் பெண்டிரையும் பாது காத்து வந்தனர். அவருக்கெனப் பரிசிலாக நாடுகளையும் ஊர்களையும் கொடுத்த வள்ளல்களிற் பாரி தலைசிறந்தவன். அவனை இகலில் வெல்லுத லென்பது மூவேந்தர்க்கும் அரிது என்றும், அம் மூவரும் ஆடல் வல்லாராய்ப் பாடல் வல்லாராய் வரின், பாரியின் பறம்பு நாட்டைப் பெறுதல் எளிது என்றும் கபிலர் கூறியிருப்பது பலரும் அறிந்ததொன்று.

"ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே."

(புறம் : ௧0௯)

கோப்பெருஞ் சோழன் பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் பேரன்போடு கொடுத்தான் என்ற இசை திசையெங்கும்

பரவியிருந்தது.
புலவரொருவர்

அவன் இறந்தான் என்பதைக் கண்ட (பொத்தியார்) அவனுயிரைக் கொண்டு போன கூற்றுவனை வைவோம், வாரீர் புலவீர் என்று அழைத்த செய்தி பின்வருமாறு உரைக்கப்பட்டுள்ளது:—

"பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே
... ... ... ... ...
அனையன் என்னாது அத்தக் கோனை
... ... ... ... ...
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று
[1]வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்." (புறம்: உஉக)

நம்பி நெடுஞ்செழியன் "பாண் உவப்பப் பசி தீர்த்தனன்" எனப் பரவப்படுகின்றான். சேரமான் வஞ்சன் பாணர் சிறிது இன்னிசை இயக்கியவுடன் பெரிதுவந்து,

விருப்பிய முகத்தனாகி, அவர் அரையில் உள்ள கிழிந்த துணிகளை நீக்கி, பொங்கு துகிலை யுடுத்திவிட்டு, இன் சுவை யுண்டி பல கலங்களில் நிரப்பி உண்பித்து, மாலை

சூட்டுவான், எனத் திருத்தமனாற் பாராட்டப்படுகின்றான். இவற்றால் முப்பெரு வேந்தரும் இசைக்கலையில் எத்துணை ஈடுபாடுடையராய் இருந்தனர் என்பது வெளியாகும். ஆய் என்னும் வள்ளலும் அம்பர்கிழான் அருவந்தை என்னுஞ் செம்மலும் இசையில் ஆர்வம் மிக்கவர் என அறிகின்றோம்.

அரசரே யன்றி, இசையில் ஈடுபாடுடைய பொது மக்களும் இசைவல்ல பாணரைத் தத்தம் நிலைக்கு இயன்றவாறு போற்றினர் என அறிகிறோம். காட்டாக, ஓர் அரசன் பகைவெல்லப் போர்க்களத்திற்குப் போயிருக்கின்ற வேளையில் அவன் நாட்டினுள் வந்து சேர்ந்த பாணரை நோக்கி, "அரசன் மீளுங்காறும் எம் இல்லில் உறைந்து யாம் கொடுப்பதை உண்ணுக" என்று ஊரார் வேண்டிக்கொண்டதாகக் காட்டும் பாட்டொன்று புறநானூற்றில் இருக்கிறது.

"முயல்சுட்ட வாயினும் தருகுவேம் புகுதந்து

ஈங்கிருந் தீமோ[1] முதுவாய்ப் பாண"
(புறம் : ௩௨௧)

என அப் பாட்டுச் சொல்லும்.

இப்படி ஆதரிக்கப்பட்ட பாணர் நன்றியுடையராய் இருந்த செய்தியையும் எடுத்துரைக்க வேண்டும். ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பான் இறந்த பின்பு அவன் நாட்டிற் பூக்கும் முல்லைப் பூவை எடுத்து யாழிலே சூட்டிக்கொள்ளப் பாணர் விரும்பவில்லை; அப் பூவை எடுத்துத் தலையிலே யணியப் பாணினி விழையவில்லை. இதனால் அவர் எத்துணை வருத்தம் உடையராயினர் என்பது புலனாகும்.

> “ பாணன் சூடான் பாடினி யணியாள்
> ... ... ... ... ...
> வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
> முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே ”

(புறம்: உ௪உ.)

---

1. இருந்திமோ - இரு.



என்றதைக் காண்க. எதிரே தோன்றும் நிமித்தங்கள் தீயனவாகியவழி, தம் தலைவனுக்கு இன்னல் வரலாகாது என இறைவனை வேண்டி வழிபட்டார் பாணர் ஒருவர். இச் செய்தியால் அவர் நன்றி மறவாதவர் என்பது பெறப்படும்.

பொருள் தரும் வரையிலேதான் பாடுவார் என்பது பாணர் இயல்பன்று. முன்னர்ப் பொருள் தந்தவன் வறுமையுற்ற வேளையிலுஞ் சென்று இன்னிசை அளித்து இன்பமூட்டிய பாணர் செய்தி பல புறநானூற்றிற் காணப் படுகின்றன. பாணர் வீரரொடு பாசறையிலும் பிறவிடங்களிலும் இருந்து ஊக்கம் விளைத்தனர் என்று அறிகிறோம். பாணர் சிலர் தம் தலைவன் புகழைப் பிறர் அவைக்களத்திலுஞ் சென்று ஏத்தும் துணிவுடையராய் இருந்தனர்.

சோழன் நலங்கிள்ளியின் புகழை, அவன் பகைவர் கேட்டு நடுங்கும்படி, பகையரசர் அவைக்களத்திற் போய் ஏத்துவேன் எனப் பாணன் ஒருவன் கூறியதுபோலக் கோவூர்கிழார் பாடினார்:—

"நின் பகைஞர்
கேட்டொறும் நடுங்க ஏத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே" (புறம்: ௩௮௨)

பாணர் சிலர் ஒருவரிடத்தே பற்றுடையவராகி விட்டால், பின்னர்ப் பிறர் எவரிடத்திலுஞ் சென்று தம் கலைத் திறத்தைக் காட்டிப் பரிசில் பெறும் விருப்பமின்றி வாழ்வாராயினர்.

"யானே பெறுக அவன் தாள்நிழல் வாழ்க்கை
அவனே பெறுகஎன் நாவிசை [1]நுவறல்" (புறம்: ௩௭௯)

என்றார் ஒருவர்.

"நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்பாடிப் பெறல்வேண்டேம்" (புறம்: ௩௮௨)

என்றார் இன்னொருவர்.

1. நுவறல் - சொல்லுதல்.



பிறரிடத்திற் சென்று பரிசில் வேண்டாத அளவு நிரம்பக் கொடுக்கும் பெற்றியாளர் பலர் இருந்ததாலும், பெற்றது போதும் என்ற பொற்புடை மனம் படைத்த இசைஞர் பலர் இருந்ததாலும், இந் நிலையினின்று வழுவாது இசைஞர் இருக்க இயன்றதென்க. பெற்றது கொண்டு மகிழ்ந்து பேராசையின்றி இசைஞர் வாழ்ந்ததால் இசைக் கலை பெருங்கலையாக வளருதற்கு வாய்ப்பு இருந்தது. பெருங் களிறும் வெஞ்சின வேழமும் நாடும் ஊரும் பரிசிலாகப் பெற்ற பாடுநர் சிலரே. உண்டியும் உடையும் உறையுளும் அணிகலனும் பெற்று மகிழ்ச்சியுற்றுக் கலையை வளர்த் தோரே பலர்.

வீரர் சிலர் இசை வல்லுநர்க்குக் கொடுக்காத மன்னர் மேற் படையெடுத்துச் சென்று வென்று அவரைக் கொடுக் கும்படி செய்தனர் எனின், அவ்வீரர்க்கு இசைக்கலையில் உள்ள ஆர்வம் அளவிடற்பாற்றோ? அவ் வீரருள் ஒருவன் அதியமான் மகன் பொகுட்டெழினி என அறிகிறோம்.

யாழிசை கேட்போர் தலையை யசைத்துக் கேட்பது வழக்கம் என்றும், மத்தளத்தின் இன்னிசையைக் கேட்ட

மறவர் வென்றிகொள்ளும் வேட்கையை யுடையவராய்ப்

போர்க்களஞ் செல்வர் என்றும்

புறநானூற்றுச் செய்யுட்
களால் அறிகிறோம்.

## உ. நாட்டியம்

நாட்டியக் கலையை அக்காலத்து வள்ளல்கள் ஓம்பினார்கள் என்பதற்குச் சான்று பாரியைப் பற்றியும் கோப்பெருஞ் சோழனைப் பற்றியும் பாடப்பட்டுள்ள செய்யுட்களாற் கிடைக்கின்றது.

"ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே"

என்றதையும்,

"ஆடுநர்க் கீத்த பேரன் பினனே"

என்றதையும் நினைவு கூர்க.

"செங்கீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந்தோன்" எனப் பாண்டியன் ஒருவன் (புறம். கூ) புகழப்படுகின்றான். வயிரியர் என்பார் கூத்தர். கூத்தாடுவோர் கொள்ளுங் கோலத்தைக் களைந்து மாறி மாறி வருவதுபோல, இவ்வுல கில் உள்ளோரும் செத்துப் பிறந்து மாறி மாறி வருவதுண்டு என்பது ஒரு பாட்டிற் சொல்லப்படுகிறது. அங்ஙனம் கூறுதற்கு, அக்காலத்தே கூத்தருளராதலும், அவர் தம் கூத்துக் கோலத்தைக் கண்டு துய்த்தோர் உளராதலும் வேண்டும்.

"விழவிற்

[1]கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியும்இவ் வுலகத்து......"
(புறம் : உகூ),

என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் நலங்கிள்ளி
யைப் பற்றிய பாட்டிற் கூறினர்.

"கூத்தர்

ஆடுகளங் கடுக்கும் அகநாட் டையே"

என்று அவரே இன்னொரு பாட்டிற் சொன்னார். நலங்கிள்ளியின் நாட்டில் உள்ள வயல்களிற் கரும்பை எடுக்கின்றவர்கள், வேலிக்கு வெளியே போகின்ற மக்கள் தின்னும் பொருட்டுக் காசின்றிக் கரும்பைப் புய்த்து எறிவார் என்றும், அக் கரும்புகள் தாமரைப் பாத்திகளில் விழுந்து பூக்களைச் சிதைக்கும் என்றும், சிதைக்கப்பட்ட பூக்கள் கிடக்கும் இடம் கூத்தர் ஆடுகின்ற களத்திற் பூக்கள் சிதறுண்டு கிடப்பதைப் போலிருக்கும் என்றும் கூறியிருக்கிறார். இப்படிக் கூறுவதற்குக் கூத்தாடு களத்தொடு அவருக்குப் பழக்கம் இருக்கவேண்டும் என்க. ஆணும் பெண்ணுமாய் ஆடும் அல்லியம் என்னும் கூத்தும், நெல்லுக்குற்றும் பெண்டிர் வேங்கை மரத்தடியிலும் முற்றங்களிலும் கைகோத்தாடுங் கூத்தும் சில பாடல்களிற் பேசப்படுகின்றன.

1. கோடியர் - கூத்தரது.



## ௫. ஓவியம்

தமிழர் ஓவியக் கலையையும் நன்றாக அறிந்தவர் என்பதற்குப் புறநானூற்றில் ஒரு சான்று உண்டு. சித்திரத்தை ஒத்த அழகு வாய்ந்த வீடு என்று ஓர் இல்லம் பேசப்படுவதால், சித்திரம் உண்டு என்பதும், அதைத் துய்க்கும் பெற்றியாளர் உண்டு என்பதும் பெறப்படும்.

"ஓவத் தன்ன இடனுடை வரைப்பு" என்றார் மாற்பித்தியார். ஓவியம் வீட்டைப்போலவே இருக்கிறது என்று சொல்லக்கூடிய காலங் கழிந்து, வீடு ஓவியத்தைப்போல இருக்கிறது என்று சொல்லக்கூடிய காலம் ஏற்படுதற்கு நீண்ட இடையீடு வேண்டும். சித்திரத்திற் பழகிப் பழகி, அதனைச் சுவைக்கும் பக்குவம் அடைந்த பிற்பாடுதான் சித்திரத்தைப்போல வீடு இருக்கிறது என்று சொல்ல இயலும். இதனால், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னாலேயே தமிழர் ஓவியக்கலையில் மிக்க தேர்ச்சிபெற்றவர் என்பது பெறப்படும்.

## ௬. படைக்கலப் பயிற்சி

வில்வித்தை என்னுங் கலையில் தமிழர் மிக்க தேர்ச்சி பெற்றவர் என்பதைக் காட்ட ஈண்டொரு செய்தி குறிப்பிடுவேன். வில்வீரன் ஒருவன் அம்பு தொடுத்தான். அவ் வம்பு ஒரு யானையைக் கீழே வீழ்த்தி, ஒரு புலியைக் கொன்று, கலைமான் ஒன்றை உருட்டி, ஒரு பன்றியை வீழச்செய்து, புற்றிலே உள்ள உடம்பிற் சென்று செறிந்தது. யானை புலி கலைமான் பன்றி உடும்பு என்றிவற்றை முறை முறையே வீழ்த்தும்படி ஒரே அம்பினை எய்வது என்றால், எத்துணைத் திறமை வேண்டும்? அத்துணைத் திறமை பெற்ற வேட்டுவர் தமிழ்நாட்டில் உண்டு. இவ்வாறு வல்வில் வேட்டம் வலம்படுத்திருந்த ஓரி என்பானைக் குறித்து வன்பரணர் பாடிய பாட்டிலே,

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் [1]பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி(து) உறீஇப்

1. பகழி – அம்பு.

[1]புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி உரற்றலைக்
கேழற் பன்றி வீழ அயலது
ஆழற் புற்றத்(து) உடும்பிற் [2]செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்" (புறம்:

கடுஉ)

என்று கூறினர்.

## ரு. போர்க் கலை

போர்க்கலையிலே தமிழர் சிறந்தவர் என்பது யாவரும்
அறிந்தது. போர் என்றவுடனே விருப்ப மிக்குடையராய்
வீரர் எழுவர் என்பது,

"போரெனிற் [3]புகலும் புனைகழல் மறவர்

காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வேம் அல்லேம் என்னர்"

(புறம். ௩௧)

என்றவிடத்துக் கோவூர்கிழாராற் கூறப்பட்டது. காடு
இடையதாகக் கிடந்த பகைநாடு மிக்க தொலைவில்

உள்ள

தாம் போருக்குப் போகமாட்டேம் என்று சிறிதும் நினையாமல், போரென்றவுடனே விருப்பத்துடன் எழுகின்ற வீரரைச் சோழன் நலங்கிள்ளி பெற்றிருந்ததாக அப் பாட்டுக் கூறுகிறது. போருக்குப் புறப்படும் தறுவாயில் அமைதி பேசிப் போர் நிறுத்தப்படுவதாயின் மகிழும் வீரர் பலர் இக்காலத்து உளராக, அக்காலத்திற் சந்து செய்வித்துப் போர் நிறுத்தப்படுமாயின் மகிழாது சாத் துயர் அடையும் வீரர் தினவுகொண்டு தோள் தட்டுவர் என்று சொல்லப்பட் டிருக்கின்றூர்.

> "உட்பகை ஒருதிறம் பட்டெனப் புட்பகைக்(கு)
> ஏவான் ஆகலிற் சாவேம் யாமென
> நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப"

(புறம்: சுஅ)

என்றதனல் அக்காலத் தமிழ வீரர்க்குப் போரின்கண் இருந்த விருப்பமும் இறப்பதன்கண் அச்சமின்மையும்

1. புழல் தலை - துளைபொருந்திய கொம்பினையுடைய தலை.
2. செற்றும் - செறியும்.
3. புகலும் - விரும்பும்.

புலப்படும். எதிர்த்துவரும் வீரர்க்கு அஞ்சாமல் மேன்மேலும் மீண்டும் வீரர் மலிந்த நாடு தமிழ்நாடு. அடிக்கிற கோலுக்கு அஞ்சாமற் பாம்பு மேன்மேலும் மண்டி வருதலைப்போல எதிர்த்துவரும் வீரரைப் பற்றி,

> "[1]எறிகோல் அஞ்சா அரவின் அன்ன
> சிறுவல் மள்ளரும் உளரே"

(புறம்: ௮௯)

என்றவிடத்துச் சொல்லப்பட்டுள்ளது. முதுகுகாட்டி ஓடுவாரை மக்கட் பதடி யென்றே கருதினர். மார்பிலல்லாமல் முதுகிலே புண்பட்டவர்கள் உண்ணா விரதம் இருந்து உயிரை விட்டார்கள். படைக்குப் பிந்தி பந்திக்கு முந்தி என்ற வழக்கு அக்காலத்து இருந்திலது. அம்பும் வேலும் நுழையும் போர்க்களமெல்லாம் விரும்பி ஏற்ற வீரர் பலர் இருந்தார்கள்.

> " அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தானிற்கும்
> மன்னே "

(புறம்: ௨௯௫) என்றதைக் காண்க.

மயிற்றோகையாலும் மாலையாலும்

அணிசெய்யப்பட்டு
நெய் தடவப்பட்ட ஆயுதங்கள்
கொட்டிலை உடையோர் மிக்கோர்

உள்ள படைக்கலக்
என மதிக்கப்பட்டது,

போரிற் பயன்பட்டுப் பகைவரைக் குத்தியழித்துக் கங்கும் நுனியும் சிதைந்து கொல்லன் உலையிற் செப்பனிடப்படும்

பொருட்டு
சிறந்தோர்

வந்து கிடக்கும் ஆயுதங்களை உடையோரே எனக் கருதப்பட்டனர்.

## ௬. மற்போர்

இக் கலையிலும் தமிழர்க்கு இருந்த தேர்ச்சி மிக்கது. மல்லன் ஒருவன் காலை மண்டியிட்டு மற்றொரு மல்லன் மார்பிலே மடித்து வைத்துக்கொண்டு, அப் பகைவன் செய்யும் சூழ்ச்சிகளை மற்றொரு காலால் தடுத்துக் கொண்டு, பச்சை மூங்கிலைத் தின்ன முயலும் யானை அம் மூங்கிலை இரண்டு பக்கத்திலும் மோதுவதைப்போல,

1. எறிகோல் - அடிக்குங்கோல்.



பகைவன் தலையையும் காலையும் மோதி மோதிக் கொன்ற தாக ஒரு பாட்டுக் கூறுகிறது. மற்போரில் தலைசிறந்த அரசர்களாய்ப் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி என்னும் சோழனும், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியனும் புறநானூற்றிலே புகழப்படுகின்றனர்.

## எ. கோள் நூல்

சோதிடக் கலையறிவையும் தமிழர் பெற்றிருந்தனர் என்பதற்குச் சான்ருக ஒரு செய்தி கூறுவன். சேரநாட்டிலே பங்குனிமாதக் கார்த்திகை நாளில் ஒரு நேரம் விண்மீன் ஒன்று பிதிர்ந்து கிளர்ந்து வீழ்ந்தது. அதனைக் கண்டு அந்நாட்டுப் புலவரும் பிறரும் அரசனுக்கு ஏதம் வரும் என அஞ்சினர். அங்ஙனமே ஏழாநாள் சேரவரசன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர லிரும்பொறை என்பான் மேலோருலகம் எய்தினன். இச் செய்தியைக் குறித்துக் கூடலூர்கிழார் என்னும் புலவர் பாடியுள்ளார்.

"[1] ஆடியல் [2]அழற்குட்டத்(து)
ஆரிருள் அரையிரவில்
... ... ... ... ... ...
பங்குனி உயர் அழுவத்து
... ... ... ... ... ...
பாசிச்[3] செல்லாது ஊசி[4] முன்னாது
... ... ... ... ... ...
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே;
அதுகண்டு, யாமும் பிறரும் பல்வேறு
இரவலர்......
அஞ்சினம், எழுநாள் வந்தன்(று) இன்றே
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
மேலோர் உலகம் எய்தினன்"

(புறம்: உ௨௯)

என்று அவர் கூறியவிடத்து, பங்குனி
திகை நட்சத்திரம் நிகழும் நாளிற் சட்டி

மாதத்திற் கார்த்
அல்லது சத்தமித்

1. ஆடு - மேடராசி. 2. அழற்குட்டம் - கார்த்திகை நாள்.
3. பாசி - கிழக்கு. 4. ஊசி - வடக்கு.



திதியாக இருக்குமாதலாற் பாதி யிரவில் இருள் நிறைந் திருக்கும் என்று கூறியது பொருத்த முடைத்து. அம் மீன் கிழக்குஞ் செல்லாது வடக்குஞ் செல்லாது வீழ்ந்த தாகலிற் கேடு பயக்கும் என்பதை யுறிந்திருந்தார். "பாசிச் செல்லாது ஊசி முன்னது" என்று கூறி இரங் கினர். பங்குனித் திங்களில் நட்சத்திரம் வீழ்தல் அர சர்க்கு அழிவு காட்டும் என்பதை அறிந்தே, "பங்குனி உயர் அழுவத்து ஒருமீன் விழுந்ததே" என இரங்கினர். "ஆடு கயறே டனுச்சிங்கத் தெழுமீன் விழுமேல் அரசழி வாம்" என்று கோள்நூலிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதனை அறிந்திருந்தனர் அக்காலத் தமிழ் மக்கள் என் பதற்கு மேலே கூறிய செய்தி சான்று என்க.

## அ அறநூல்

புறநானூறு ஓர் அறநூல் என்னலாம்.

கல்வி கற்பத

னால் ஆகும் நன்மையை,

“ உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ”
என்ற இடத்துச் சொல்லுகிறது.

செய்ந்நன்றியறிதல் ஆகிய பேரறத்தை,
“ நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்(கு) உய்தி இல்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ ”
என்ற இடத்தில் வற்புறுத்துகிறது.
“ வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய் கூறுவல் ”
என்ற இடத்து வாய்மையாகிய விழுமிய அறம் பாராட்டப் படுகின்றது.
“செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே”
என்று சொல்லும் ஒரு பாட்டு.



“ வரிசை யறிதலோ அரிதே, பெரிதும்
ஈதல் எளிதே ”
எனப் பகரும் இன்னொரு பாட்டு.

“ஈயென இரத்தல் இழிந்தன்று, அதனெதிர்

ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று,

அதனெதிர்

கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று”

என்று பேசுகிறது பிறிதொரு பாட்டு.

அரசன் குடிகளைத் தன் குழந்தைகளைப் கருதிப் பாதுகாக்கவேண்டும் என்ற அறம்,

போலக்

“காவல்

குழவி கொள்பவரின் ஓம்புமதி”

என்ற இடத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அரசனுடைய பாதுகாவல் இல்லாவிட்டால் மக்கள் பொருளையும் ஒழுக்கத்தையும் இழக்க நேரிடும் என்று கண்டறிந்த தமிழர் அரசனைச் செங்கோலினனாக இருக்கவேண்டும் என்று அடிக்கடி வற்புறுத்தினர். மாதவர் நோன்பிற்கும் மடவார் கற்பிற்கும் காவலன் காவல் இன்றியமையாதது என்று கருதினர். நெல்லும் நீரும் மக்கள் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாவாயினும், அரசாட்சி அறம் உடைத்தாய்க் காப்புச் செய்த வழியே அவை பயன்படுமாதலின்,

“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்

அதனால், 'யான் உயிர்' என்ப(து) அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"

என்று அறிவுறுத்தினர். நாற்படையின் வெற்றி பெறலாம் என்று கருதிய காவலரை

பெருமையால் நோக்கி,

"நான்குடன் [1]மாண்ட தாயினும்
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"

---

1. மாண்டதாயினும் - மாட்சிமைப்பட்டதாயினும்.



என்று சொல்லி நடுவுநிலைமையினின்று வழாது இருக்கும்படி செய்தனர். இன்னோரன்ன செய்திகளைத் தாங்கிக்கொண்டிருக்கும் புறநானூறு அறநூற் கலை மலிந்த இலக்கியம் என்பது எளிதில் அறியப்படும்.

## ௧௦. சொல்வன்மை

சொல்வன்மை யென்பது ஒரு கலை. அதனை 'மதுர பாடனம்' என்ப. அக் கலையிலும் தமிழர்

வலலராய

இருந்தனர் என்பதற்கு வேண்டிய சான்றுகள் புறநானூற்றில் உள. ஒரு பெண்மகளின் கணவன் போருக்குச் சென்றிருக்கிறான். அவன் நலமுடன் திரும்பி வர வேண்டுமென்று நினைக்கின்ற அவன் மனைவி, அக்கால வழக்கப்படி நடுகல்லைத் தொழுது பரவுகின்றாள். பரவுங்கால் கணவன் போரில் உயிரிழக்கலாகாது என்று வெளிப்படையாக வேண்டாது குறிப்பாகக் கேட்குந்திறம் அழகுடைத்து. "யான் விருந்தினரை மேன்மேலும் பெற்று ஓம்ப வேண்டும். என் கணவன் அடுத்த போரிலும் விழுமிய பகையைப் பெறுவான் ஆகுக" என்பதே அவள் வேண்டுகோள். விருந்தினரை எதிர்கொள்ளக் கணவன் இருத்தல் கட்டாயம் ஆகலின், விருந்து எதிர் பெறுக என்றவள், சென்ற கணவன் மீண்டு வர விரும்புகிறாள் என்பது பெறப்படும். அவ்வாறே அடுத்த போரிலும் கணவன் நல்ல பகைவனைப் பெறுவானாக என்றவள், இப்போரில் அவன் வெற்றியோடு மீண்டு வருக என வேண்டிக்கொண்டவள் ஆயினள். இச் சொல்வன்மை அக்காலத் தமிழ்ப் பெண்டிரிடத்தும் உண்டு என்பது,

> "நடுகல் கைதொழுது பரவும், [1]ஒடியாது
> விருந்தெதிர் பெறுகதில் யானே, என்னையும்[2]
> ... ... ... ... வேந்தனொடு
> நாடுதரு விழுப்பகை எய்துக எனவே" (புறம்: ௩௦௬)

என்று அள்ளூர் நன்முல்லையார் பாடியதால் அறியப்படும்.

---

1. ஒடியாது - ஒழியாது. 2. ஐயும் - கணவனும்.

பு. சொ.—5

சோழர் குடியைச் சார்ந்த இருவர் தம்முட் பொரக் கருதி யிருந்த வேளையில், "இருவீரும் ஒரு குடியிலேயே தோன்றினிர். நும்முள் ஒருவர் தோற்றாலும் நுமது குடியன்றோ தோற்பது! நீவிர் இருவீரும் வெல்லுதல் என்பதும் இயலாதே! இருவீரும் பொர நிற்பதைப் பார்த்தாற் பகையரசர் உள்ளம் பூரிப்பர் அல்லரோ?" என்று கூறிக் கோவூர்கிழார் என்னும் புலவர் அவ்விகலினை நிறுத்தினர்.

அவரே ஓரரசன் தன் மாற்றானின் மக்களை யானைக்கு இட நினைத்திருந்த வேளையிலே சொல்வன்மையால் தடுத்தனர். அவ்வரசன் சோழனாதலின், அக் குடிப் பெருமையை எடுத்தோதிப் புறவினுடைய அல்லலைத் தீர்க்கத் தன்னையே அரிந்திட்ட சிபியை நினைப்பூட்டினர். ஒன்று மறியாப் பச்சிளங் குழவிகள் இரங்கத் தக்கன அன்றி இறக்கத்தக்கன அல்ல என்று காட்டினர். "தம்மைக் கொல்லவரும் யானையைக் கண்டவுடன் அதனை விளையாட்டுப் பொருளாக மதித்து அழுதுகொண்டிருந்த அழுகையை விட்ட சிறுவர் பின்னர் இடம் புதிதாக இருப்பதைக் கண்டு மீண்டும் அழுகையைத் தொடங்குகின்ற சிறுவர் இரங்கத்தக்கார் அல்லரோ? நான் சொல்லியதைக் கேட்டபின் நீ விரும்பியதைச் செய்க" என்றே அப் புலவர் அரசனிடங் கூறினர்.

> "நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
> இடுக்கண் பலவும் விடுத்தோன் [1]மருகனை
> இவரே, ... ... ... ...
> களிறுகண்(டு) அழூஉம் அழாஅல் மறந்த

புன்தலைச் சிறுஅர் மன்றுமருண்டு நோக்கி
[2]விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை ஆயினீ வேட்டது செய்ம்மே" (புறம்

: சசு) என்று சொல்லியதைக் கேட்ட கிள்ளி வளவன் அம் மக்களைக் கொல்லுமாறு வற்புறுத்துவனோ?

---

1. மருகனை - மரபினை. 2. விருந்தின் - புதுமையான.

இன்னொருநாள், புலவர் ஒருவர் ஒற்றராய் வந்தார் எனத் தப்பாக எண்ணி நெடுங்கிள்ளி யென்பான் அவரைக் கொல்லத் தலைப்பட்ட நேரத்திலே, அக் கொலை சொல்வன்மையாலே தடுக்கப்பட்டது. "இப் புலவருடைய வாழ்க்கை பிறர்க்குத் தீங்கு நினைக்கும் வாழ்க்கை அன்றே. அவர் வாழ்க்கை பொருமைபடத் தக்கதொரு வாழ்க்கையா? அன்றே. பழுமரந் தேரும் பறவைபோல வள்ளல் உள்ள இடத்தைத்தேடி, போகவேண்டிய வழி நெடியதென்றும் அரியதென்றும் பாராது கடந்து செல்வோர் வாழ்க்கை பொருமைபடத் தக்கதா? ஏதோ தமக்குத் தெரிந்ததைப் பாடி, கொடுக்கப்பெற்றதைக் கொண்டு மகிழ்ந்து, உறவினரையும் ஊட்டி, தாமும் உண்டு பிறர்க்கும் வழங்குகின்ற புலவர் வாழ்க்கை பிறர்க்குத் தீதறியா வாழ்க்கை அன்றோ! மேலும், கல்வியாற் பிறரை வென்று அண்ணாந்து நோக்கிப் போகும் பெருமையால் மண்ணாள் செல்வமுடையாரை நிகர்க்கும் பெருமையுடையதன்றோ அவர் வாழ்க்கை?" என்று கூறிக் கோவூர் கிழார் அப் புலவரைக் காத்தார். பிறர்க்குத் தீங்கு நினைப்போரையே அரசன் கொல்லவேண்டும். இப் புலவர் தீங்கு நினைத்திலராதலின் கொல்லலாகாது என்றும், எளியாரையும் பிறர்க்குப் பயன்படுவாரையுங் கொல்லலாகாதாதலின் இவரையுங் கொல்லக்கூடாதென்றும், எளியரென இகழற்க; இவர் பெரியருமாம் ஆதலின் கொல்லற்க என்றும் கோவூர்கிழார் கூறிய சொற்றிறம் பாராட்டத் தக்கது.

இச் சொல்வன்மையாலேயே, கோவூர்கிழார் கோப்பெருஞ் சோழனுக்கும் அவனுடைய பிள்ளைகளுக்கும் இடையே எழுந்த பூசலையும் தவிர்த்தனர். அச் சோழனை நோக்கி, "நின்னொடு எதிர்த்து வந்த இவ் விருவரும் நின் பகைவர் அல்லர். நீயும் அவர்க்குப் பகைவன் அல்லை. நீ நல்ல புகழொடு மேலுலகஞ் சென்ற பிறகு, விட்டு விட்டுப் போகும் செல்வம் இவருடையது அன்றோ? நல்லறிவு இல்லாத உன் மக்கள் இருவரும் உனக்குத்

தோற்றால், நினது பெருஞ்செல்வத்தை யார்க்கு வைத்துப் போவாய்? போரில் விருப்பம் உள்ளோய்! ஒருகால் நீ அவர்க்குத் தோற்றால் நின் பகைவர் எல்லாம் உவக்கும் படி பழிதானே எஞ்சியதாகும்! அதனால், நின் வீரத்தைச் சற்று விலக்கிவைக்க," என்று கூறிச் சந்து செய்வித்தார். அரசனை நோக்கி 'உன் மக்களுக்கு நீ தோற்றால்' என்று சொல்வது வெறுப்பும் வெகுளியும் ஊட்டவல்லது. வெறுப்பும் வெகுளியும் தோற்றுதவாறு, 'போரில் விருப்பமுடையோய்,'' என முன்னர் விளித்ததன் கண்ணே நயமுண்மை அறிக. "உனக்குப் பழிதானே எஞ்சும்" என்று சொல்லியவுடனே "நின் வீரத்தை விலக்கி வைக்க" என்ற அளவே சொல்லினமையால், அரசனுடைய வீரத்தின்கண்ணும் ஆற்றலின்கண்ணும் ஐயமின்மையைக் காட்டி அழகுபடுத்தியுள்ளார். அரசன் மக்கள்மேல் வெறுப்புக்கொண்டுள்ள நேரத்தில் அம் மக்களுக்காகப் பரிந்து பேசுகின்ற புலவர் அவ் விருவர்க்கும் நல்லறிவு இன்மையாலேயே இங்ஙனம் தந்தையொடு இகலினர் என்பதைக் கூறியது போற்றத்தக்கது என்க. இவ்வாறு சந்துசெய்வித்த கோவூர்கிழார் போன்ற சொல்வன்மையுடையார் பலர் அக் காலத்தில் வாழ்ந்தனர். சொல்வன்மைக் கலையும் மக்களுடைய நன்மைக்காகவே பயன் படுத்தப்பட்டது.

இதுகாறுங் கூறியவாற்றால், புறநானூற்றுக் காலத் தமிழர் இசைக்கலையிலும், நாட்டியக் கலையிலும் வல்லராய் இருந்தமையும், அக் கலைகளைப் பெரிதும் பேணினமையும், ஓவியம் வில்வித்தை போர் மற்போர் கோள்நூல் அறநூல் ஆகிய கலைகளிலே தேர்ச்சியுடையராய் இருந்தமையும், சொல்வன்மைக் கலையிற் சிறந்து அக் கலையை நல்லாற்றிற் பயன்படுத்தி வந்தமையும் அறியப்படும்.

---

# ந. புறநானூறும் போர்களும்

[வித்துவான், அ. கிருட்டினமூர்த்தி]

## க. தோற்றுவாய்

போரின் கொடுமை இன்னதென்பதை அறியாத நாடு, உலகத்தில் ஒன்றேனும் இல்லை. ஓரிடத்திலும் போரே யில்லாமல், ஒரு பத்தாண்டுகளாவது இவ் வுலகம் அமைதியா யிருந்தது என்று, வரலாற்றுச் சான்றாகக் கூற முடியாது. கடந்த ஐயாயிரம் ஆண்டுகளில் உலகம் பல்லாயிரக் கணக்கான போர்களைக் கண்டிருக்கிறது. சங்ககாலத்தில் மட்டும் தமிழகத்தில் நூற்றுக்கணக்கான போர்கள் நடந்திருக்கின்றன. இதனைப் பதிற்றுப்பத்து, தகடூர் யாத்திரை, புறநானூறு, சிலப்பதிகாரம் முதலான பெரு நூல்களிலும், மற்றைத் தொகைநூல்கள், முத்தொள்ளாயிரம் முதலியவற்றின் சிதறிய குறிப்புக்களிலும் நன்கறியக் கூடும்.

இவற்றுள் "தகடூர் யாத்திரை" என்பது தமிழ் வேந்தரின் படையெடுப்பைப் பற்றி மட்டும் சிறப்பித்து எழுதப் பட்ட தனிநூல்களில் காலத்தால் பழைமை யுடையதாக விளங்குவது; அதிகமான் என்பவனின் தலைநகரான தகடூர்மீது சேரன் செல்வக் கடுங்கோவாழியாதன் மகன் பெருஞ்சேரலிரும்பொறை என்பவன் படையெடுத்து அதனை அழித்து அதிகமானையுங் கொன்ற வென்றிச் சிறப்பைக் கூறுவது. இந் நூலின் பெரும்பகுதியும், மற்றை விவரங்களும் சிதைந்து போயின. எனினும், தமிழ் வேந்தர் படையெடுப்பைக் கருதும்போது, இந் நூல் முதலில் நினைவில் வைத்தற் குரியது. தொல்காப்பியத்

திற்கு முந்தியதாகக் கூறப்படும் செங்கோன் என்பவனது படையெடுப்பைக் கூறும்—" செங்கோன் தரைச் செலவு " என்ற நூலைப் பற்றிய உண்மைகள் தமிழறிஞர் எல்லோர்க்கும் ஐயப்பாடாக இருத்தலின், அதனைப் பெயரளவில் நினைப்பதே சிறப்புடைத்தாகும். சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவனது வடநாட்டுப் படையெடுப்பு ஒரு தனிக் காண்டமாகவே வைத்து விளக்கப்படுகின்றது.

தனியே எடுத்த படையெடுப்புக்களைப் பற்றிக் கூறும் நூலும் நூற்பகுதியும் சங்க காலத்தைப் பொறுத்த மட்டில் இவ்வளவேயாக, போர்க்களத்தில் களிற்றியானைகளைக் கொன்று குவித்து வெற்றியுடன் மீளும் வீரனைப் பற்றிய " பரணி " என்னும் நூன்முறை பிற்காலத்ததாகும்.

இனி, பதிற்றுப்பத்து சேரமன்னர்களின் போர்ச்
சிறப்புக்களைப்பற்றி மட்டும் கூறுவது. புறநானூறு ஒன்றே தமிழகத்து முடிவேந்தரும், குறுநில மன்னரும் தமிழ்நாடெங்கும் செய்த போர்களைக் கொண்டதாய்த் தலைமைசான்ற புறப்பொருள் நூலாக விளங்குவது. அதனை நடுவாக வைத்து ஏனை நூற் குறிப்புக்களையும் துணையாகக் கொள்வதே, இங்குப் பொருத்தமும் ஏற்றமுமாகும்.

## உ. போர்ப்பண்பு

இனி, போர்களைப் பற்றிப் பேசுமுன், தமிழரின் போர்க் குணத்தைப் பற்றிக் கூறுவது ஒரு சிறந்த முன்னுரையாகும் என்று கருதுகிறேன். ஏன்? குணந்தானே தொழிலாகின்ற தாதலால். தம் தொழின் முயற்சியிலும், விளையாட்டிலும், பழக்க வழக்கங்களிலும், இயற்கைப் பண்பிலும் தமிழர் போர்க்குணம் படைத்தவராகவே விளங்கினர். இரவு பகல் என்று வரையறை யில்லாமல், கடல் நடுவில் சென்று மீன்வேட்டை யாடுதலும், காடுகளிலும், மலை யுச்சியிலும் கொடிய வழிகளிற் சென்று விலங்கு வேட்டை யாடுதலும் அவருடைய பழைமையான



தொழில்கள். காட்டு நிலத்தில் வாழ்ந்த தமிழர், சீறித் துள்ளிக் கொம்புகளாற் குத்திக் கொல்லுகின்ற போர்க் காளைகளைத் தழுவிப்பிடித்து எவனொருவன் அடக்குகிறானோ, அவனையே மணமகனாகத் தேர்ந்து, தம் மகளிரை மணஞ்செய்து கொடுப்பர்.

ஐம்படைகளைக் கோத்து அவற்றுடன் புலிப் பல்லை யும் சேர்த்து 'ஐம்படைத்தாலி' என்று தம் மக்கள் மார் பில் அணிந்து தமிழர் இன்புறுவார்கள். இளையரும் முதி யரும் விளையாடும்போது, சேவற்கோழி, காடை, ஆட்டுக் கிடாய், காளை முதலிய பறவை, விலங்குகளைத் தம்முள் ஒன்றோடொன்று மோதிப் போர் செய்யும்படி பழக்கி, வேண்டியபோதெல்லாம் போர்செய்ய விட்டு, வெற்றி கொண்டாடி ஆரவாரிப்பார்கள். அவை முட்டி மோதி இரத்தம் ஒழுக நிற்பதும், சுற்றி நிற்போர் போர்ப்பறை கொட்டிக் களிப்பதும், இதனைப் பாட்டில் தொகுத்துப் பாடுவதும் பண்டும் வழக்கம்; நாட்டுப் புறங்களில் இன் றுங் காணலாம் இக்காட்சிகளை.

இனி, பிள்ளையைப் பெற்று வளர்த்தல் தன் கடனென் றும், அதற்குக் கூர்வேல் கொடுத்தல் கொல்லன் கடனென் றும், போர் முனையில் மதயானைகளை வெட்டி வெற்றி யுடன் மீளுவது தன் மகன் கடனென்றும் கூறினாள் ஒரு தமிழ் மகள் (புறம்: ௩௧௨). 'உன் மகன் எங்கே' என்று ஒரு கிழவியைக் கேட்டதற்கு, "என் மகனாகிய புலி கிடந்த வயிறு இது; இப்பொழுது அவனைக் காணக் கூடும் போர்க்களத்திலே" என்று விடையிறுத்தாள் (புறம்: அசு) அம் முதுமகள். "போரில் என் மகன் புற முதுகிட்டு ஓடி வந்திருப்பின், அவனுக்குப் பாலூட்டிய இம்முலையை அறுத்திடுவேன்," என்று போர் முனை புகுந்து, வீர மகன் இறந்து கிடப்பது கண்டு பெற்ற பொழுதினும் பெரு மகிழ்வு கொண்டாள் வேறொரு தமிழ் மகள்.

முதலில் தன் தந்தையும், பிறகு தன் கணவனும்

வாளேந்திப் போரிட்டு மடிந்துங்கூட,

சோராத நெஞ்சுடன்,



தன் ஒரே மகனுக்கு வேலைக் கொடுத்து, கோலஞ் செய்து, "நீயும் போய்வா போருக்கு!" என்று அனுப்பினாள் இன்னொரு தமிழ் மகள். இத்தகைய மகளிரின் வீரத்தைப் பாராட்டிப் பொருளிலக்கணக்காரர், "மூதின் முல்லை" என்று ஒரு துறையும் வகுத்தனர் போரிலக்கணத்தில்.

இன்னொரு தமிழ்மகள், "மூப்பும் பிணியும் கொண்டு மக்கள் பலர் மடிகிறார்கள்; அப்படியன்று என் மகன் மடிந்தது; அவன் மடிந்தது போர்க்களத்தில்," என்று பெருமிதம் பேசினாள், தறுகண்மையுடன். பகைவன் எறிந்த வேல், தன் கணவன் மார்பில் பாய, அவ் வேலைப் பிடுங்கிப் பகைவன் யானைப் படைமேல் அவன் எறிய, அதனால்,

" புன்றலை மடப்பிடி நாணக்

குஞ்சர மெல்லாம் புறங்கொடுத் தனவே[1] "
(புறம் : ௩௦௮)

என்று வீரக்களிப்படைந்தாள் வேறொரு பெண்மகள்.

இவ்வாறு மகளி ரனைவரும் போரென்றால் அஞ்சிப் புறங்கொடுக்காமல், பூரிக்கும் நெஞ்சமும் புன்முறுவலுங் கொண்டு விளங்கினார்கள்.

இனி, வஞ்சினங் கூறுதல் என்பது பின்னர் நடக்கும் நிகழ்ச்சியின் உறுதிப்பாட்டை முன் கூட்டியே தெரிவிக்கும் விசைக்கருவியாகத் தமிழர் நெஞ்சிற் பதிந்து கிடந்தது. போர்முனையிலாகட்டும், மற்ற வீரச் செயலிலாகட்டும், இன்னது செய்யேனாயின், நான் இன்னமாதிரியாவேன் என்று துணிந்து கூறி, அவ்வாறே செய்து முடிப்பது ஆடவர், சிறுவர், மகளிர் அனைவர்க்கும் பொதுப் பண்பாகும்.

தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தான் போருக்குப் போகுமுன், "என் பகைவரைச் சிதற அடித்து, அவர் முரசத்தைக் கைப்பற்றாது வருவேனாயின், என் குடிகள் என்னைக் கொடுங்கோல் வேந்தன் என்று கூறட்டும்; புலவர்களால் என் நாடு பாடப்

1. ஆண்யானை யெல்லாம் பெண்யானை வெட்கித் தலை குனியும்படி திரும்பியோடின.

படாமல் ஒழிவதாக; இல்லை என்று இரப்பவருக்கு இல்லை என்று சொல்லும் இழிவு எனக்கு வருவதாக," என்று வீர வஞ்சினங் கூறினன். சோழன் நலங்கிள்ளி தான் போர்க்களம் புகுமுன்பு, "என்னைப் பகைத்த பகைவர் புலியுடன் பகைத்தோராவார்; அவரை, நான் விடுவேனு யின், என் மார்பின் மாலை பொதுமகள் மார்பிற் புரளுவ தாக" என்று கூறிச் சென்றான். இங்ஙனம் சென்ற இவர் கள் வஞ்சினம் வாய்க்கப்பெற்றுத் தத்தந் தலைநகரத்தில் வெறிமாலையுடன் சென்று புகுந்தனர். "கற்புடைப் பெண்டிர் பிறந்த நாட்டில் நான் பிறந்தேனுயின், யானும் கற்புடையவளாயின், யான் என் கணவனைச் சென்று கூடு வேன்; இந் நகரமும் தீப்பற்றி எரியும்," என்று வஞ்சினங் கூறிய கண்ணகியின் செய்தி, மகளிர் கூறும் வஞ்சின வுறு திக்கு ஏற்ற எடுத்துக் காட்டாகும்.

வஞ்சினத்தை யடுத்துக் குறிப்பிடத் தக்கது மானம். மானம் என்பது தமிழர் குருதியுடன் கலந்து வளர்ந்த ஓர் இயற்கைப் பண்பு. "மானங் கெடவரின் வாழாமை முன் இனிது," என்பது மானத்தைப் பற்றிய தமிழர் தங் கொள்கை. வள்ளுவர் கூறிய மானம் என்ற அதிகாரம் தமிழர்க்கே யுரிய தனிப்பண்பைக் காட்டுவது. மானத் தினும் பெரிய அறனும் பொருளும் இன்பமும் இல்லை என்பது இவர்தம் முடிபு. தன் மைந்தர், முறைக்கு மாறுகத் தன்னுடன் போருக்கு வந்தது பொறுத கோப் பெருஞ் சோழன், பட்டினி கிடந்து வடக்கிருந்து மடிந் தனன். சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகால னேடு போர்செய்து தோற்று முதுகிலே புண்பட்டதற்கு நாணி வடக்கிருந்து பட்டினியால் உயிர் விட்டனன். சோழன் செங்கணனேடு போர் செய்து சிறைப்பட்ட சேர மான் கணைக்கா லிரும்பொறை, தண்ணீர் தா வென்று கேட்க, அது தாமதித்து வர, மானங்கெட வந்த இதனை யும் குடிப்பதா? என்று அதனைக் கையில் வைத்துக் கொண்டே உயிர்விட்டனன் என்றால், மானத்திற்கு இத னின் மேம்பட்ட வேறு சான்றும் வேண்டுமோ?

• இனி, அரசர்கள் போரில் மடியாமல் நோய்வாய்ப்பட்டிறப்பினும், பிள்ளை செத்துப் பிறப்பினும், அல்லது ஊன் பிண்டமாகப் பிறப்பினும் அவர்களை வாளாற் பிளந்து அடக்கஞ் செய்வதே அரசகுலத்து மரபு. வீரர் போர்க்களத்தில் புறமுதுகிட்டு வருதலும், புறமுதுகிட்டவர் மீது அம்பு தொடுத்தலும், முதுகிலே புண்படுவதும், இழிக்கப்பட்டன. போர்க்களத்தில் நீங்கிய உயிர் வீரவுலகம் போகுமென்பதும் தமிழகத்து மாந்தர் எல்லாரும் கொண்ட கொள்கை. போர்முனையில் பெரும்புண்பட்டு விழுந்துகிடப்போர், அப் புண்ணைப் பெரிதாகக் கிழித்துவிட்டு உயிரை விடுவது “மறக் காஞ்சி” என்னும் துறையாகப் போரிலக்கணங் கூறுகின்றது. ஆடல் பாடல்களில் விழாநாளில் திருமணத்தில் தெய்வ வணக்கத்தில் முதலினும் இறுதியிலும், “வேந்தன் வாழ்க! வெற்றி பெறுக! அவன் கொற்றம் வாழ்க!” என்று வாழ்த்துவது, தமிழ்மக்களின் பெரிய ஆரவாரமாகும். போர் முனையில் வெற்றிகொண்டு வாகை சூடிய மன்னன் வரும்போது, அவன் தேரின் முன்னும் பின்னும் ஆடல் பாடல் வல்ல வீரமகளிர் அவன் வெற்றியைப் பாடிப் புகழ்ந்து கூத்தாடுவதும், அவ்வாறே, அரசன் படையெடுத்துப் போகும்போது பாடினி படையெடுப்பைப் பாடுவதும், படையொலியோடு எதிரொலி செய்து வீரன் செவிக்கு இன்பமூட்டுவன. வெற்றியுடன் வீடு திரும்பிய வீரர்களின் உடல் வலியை (போர்ப் புண்களை) அவர் மனைவியர் தம் முலைகளால் வேது கொடுத்து ஒற்றுவதும், இறந்த வீரரின் மனைவியர் தம் கணவரோடு தீப்பாய்வதும், வேறு சிலர் அவன் வீரச்சாவு பெற்றதற்கு இன்பக் கண்ணீர் சொரிவதும்

அவர்தம் பண்பைக் காட்டும் சான்றுகளாகும். இறந்து போன வீரனுக்கும், வீரப்பெண்டிர்க்கும் கல்நாட்டி விழா வெடுத்து வீர வணக்கம் செய்வது அவர் போருணர்ச்சியின் அறிகுறி.

இவ்வாறு மறப்பண்பு

வாய்ந்த மக்களிடையே அடிக்கடி போர்கள் மூளுவது இயற்கையே. போரைப்

புறநானூறும் போர்களும்

எடு பற்றிய இவர்தம் கொள்கை உயர்ந்த அடிப்படையில்

வகுக்கப்பட்டது. குடும்ப வாழ்க்கைக்கு அன்பும் காதலும் எவ்வளவு இன்றியமையாது வேண்டப்படுமோ, அவ்வளவு நாடாட்சிக்கு ஆண்மையும் வீரமும் வேண்டப்படும் என்று கருதினர்கள். அவர்தம் போர்முறையைத் தொல்காப்பியம் இலக்கண முறையாலும், திருக்குறள் போர் நுட்பங்களாலும் வைத்து விளக்குகின்றன. காதல் உள்ளங்கையானல் அதன் புறங்கைபோல விளங்குவது போர்; காதல் ஏழு பிரிவானல், அதற்கு நேராக ஏழு பிரிவுடன் விளங்குவது தமிழ்ப் போர்முறை என்று தொல்காப்பியங் கூறும். தமிழர் பூக்கள் அணிந்து கொள்ளும் தமது பெருவிருப்பைத் தங்கள் போர்த் தொழிலிலும் கொண்டு போரின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வொருவகைப் பூவையும் அணிந்து வந்தனர். போர் தொடுப்பவன் வெட்சியும், அவனை எதிர்ப்பார் கரந்தையும், படையெடுப்பவன் வஞ்சியும், மதிலைத் தாக்குங்கால் உழிஞையும், அதனைக் காவல் செய்வோன் நொச்சியும், கைகலந்து இருபடையும் போர் செய்யும் பொழுது தும்பையும், வெற்றிகொண்டோர் வாகையும் சூடுவது மரபு. இவற்றை மரப்பூவாகவும், பொற்பூவாகவும் பூணுவது வழக்கியல். இனி, அவ்வாறு நடந்த தமிழகத்துப் போர்களை 'உள்நாட்டுப் போர்' 'வெளிநாட்டுப் போர்,' 'தற்காப்புப் போர்' என மூன்றுகக்கொண்டு கூற விரும்புகின்றேன்.

## ந. உள்நாட்டுப் போர்

சங்க காலத்தின் முடிவிற்குள்ளாகத் தமிழகத்தில் பல நூறு போர்கள் நடந்திருக்கின்றன என்றேன். சேர சோழ பாண்டியர் என்ற முடிவேந்தர் மூவரும் முக்கோணமாக நின்று ஒருவரோடொருவர் இடைவிடாது போர் செய்தனர். அவர்களோடு அவரவர் சிற்றரசரும், குறுநிலமன்னர்களும் கலந்துகொண்டதுடன், தாங்களும் தனித்தனியே பல போர்களைச் செய்தனர். ஒரு போருக்



கும் மற்றொரு போருக்குமிடையே சிறிதுகாலம் அமைதியிருந்ததாயின், அது மற்றொரு போருக்கு முன் முயற்சிக் காலமாகவே இருந்தது.

இப் போர்கள், மேலை நாடுகளில் இடைக்காலத்தில் நடந்த பல போர்களைப்போலச் சமயத்திற்காக நடந்த போர்களல்ல. மற்று, தற்காலத்தில் நடப்பது போன்ற வாணிபம் முதலான பொருளாதாரப் போட்டிகளா லல்ல; அல்லது தம் மக்களைக் குடியேற்ற, நாடு பிடிக்கும் நோக் கத்தோடு மல்ல; எனில் வேறு எதற்காக இப்போர்களை நடத்தினர்கள்? சுருங்கக் கூறின், தம் படைவலி, தம் செங்கோல், தம் ஆணை - இவற்றை எல்லோரும் ஒப்புக்கொண்டு தம் ஒரு குடைக்கீழ் எல்லா நாடும் அடங்கியிருக்கத், தாம் மன்னர் மன்னராக விளங்க வேண்டும் என்ற பெருமிதக் கொற்றமே காரணம். இவ் வாறு அரசர் பலர் முயன்றிருப்பினும், ஒவ்வொரு குடி யிலும் இரண்டொரு வேந்தர் மட்டும் மன்னர் மன்னராக விளங்கிச் சென்றிருக்கின்றனர். இவருள், இமயவரம் பன், செங்குட்டுவன், நெடுஞ்செழியன், கரிகாலன் என் பார் குறிப்பிடத்தக்கவர். இவர்கள் வல்லரசராய் விளங் கிய காலத்தின் முன்னும் பின்னும் காலமறிந்து இவர் தம் பகைவர் அவ்வரசுக்குரியவரை எதிர்த்து வீறிட் டெழுந்து தம் உரிமையை மீண்டும் பெறப் பற்பல போர் களைச் செய்யவேண்டியவராயினர். இவ்வாறு போர்கள் ஒன்று பலவாகக் கிளைத்துத் தமிழகம் பல நூற்றுண்டு கள்வரைப் பெரும் போர்க்களமாகவே காட்சியளிக்க, வெற்றிமாலை மார்புக்கு மார்பு மாறிய வண்ணமாயிருந் தது. பாழிப் பறந்தலை, வெண்ணிப் பறந்தலை, கருவூர், கூடல், நெய்தலங்கானல், தகடூர், முசிறி, வாகைப் பறந்

தலை, கழுமலம், கானப்பேர், தலையாலங்கானம் போன்ற
இடங்களிலெல்லாம் பெரும்போர்கள் நடந்திருக்கின்றன.
இப் போர்களில் வெற்றி யடைந்த மன்னர் பெயருடன்
அவர் வெற்றிக் குறிப்பும் பின்னர்ச் சேர்ந்து வழங்கிற்று.
சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறை,



தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்
செழியன், சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்
சேர லிரும்பொறை, சேரமான் பாமுளூ ரெறிந்த நெய்
தலங்கானல் இளஞ்சேட் சென்னி போல்வன அவ்வாறு
வழங்கிய சில பெயர்கள்.

முதலிற் கூறியது தவிர, தமிழ்நாட்டுப் போர்
களுக்கு வேறுசில சிறு காரணங்களு முண்டு. சொல்லில்
அல்லது செயலில் மானக்குறைவு செய்ததாகப் பகை
வன்மீது படையெடுப்பது, மிக இளம் பருவத்தில் அரசு
கட்டில் ஏறிய பாண்டியன் நெடுஞ்செழியனை, “இவன்,
இளையன், சிறுவன்: அரசுகட்டில் ஏறினன்,” என்று
இகழ்ந்து முரண்பட்ட மன்னர்களுடன், அவன் வஞ்சி
னங் கூறித் தலையாலங்கானத்தில் பெரும்போர் செய்த

னன். பிறர்பால் உள்ள மகளிரைத் தமக்கு மணஞ் செய்து கொடுக்குமாறு வற்புறுத்திப் பல போர்கள் நடந்திருக்கின்றன. இதற்குச் சான்ருகப் போரிலக்கணத்தில் "மகட்பாற் காஞ்சி" என்னும் துறையும், ஏறக்குறைய இருபது பாட்டுக்கள் புறநானூற்றிலும் பரந்து கிடக்கின்றன. இவ்வாறு பெண்வேண்டியோ அல்லது பொருமை, சீற்றம் முதலான காரணங்களாலோ காழ்ப்பேறிய மூவேந்தரும் பாரி வள்ளலின் பறம்புமலைக் கோட்டையை முற்றுகையிட்டனர். முல்லைக்குத் தேரும், பரிசிலர்க்கு 300 ஊரும் தந்து பிறகு வேண்டினவர்க்குத் தன்னையும் கொடுக்கக் காத்திருந்த பெருங்குண வள்ளல் பாரியைக் கொன்று, அவன் கோட்டையைப் பாழாக்கி, அவன் பெண்களைத் திருமணமின்றி அரசர் பலரிடம் அலையவிட்ட கொடுமை, தமிழரின் அறநெறிக்கு அழியாத கறையாகும்.

இனி, இப் போர்கள் தொடர்பாகப் புலவர்களைப் பற்றிச் சில கூற விரும்புகின்றேன். அரசர்களுக்கு அவ்வப்போது வீரப்பெருக்கையும், போருணர்ச்சியையும் புலவர்கள் நிரம்ப ஊட்டியிருக்கின்றனர். தமிழக மாந்தரும் மன்னரும் புலவர் வாக்கிற்கு வானளாவிய மதிப்பு

வைத்திருந்தனர்; அவர் பாடலுக்கு, உண்டால் நெடு நாள் வாழக்கூடிய நெல்லிக்கனியைக் கொடுத்தனர் ஒருவருக்கு 16,00,000 பொன்னைக் கொடுத்தனர்; ஒரு வருக்கு மலைமேல் ஏறி நின்று கண்ணிற்கண்ட நாட்டைத் தும் கொடுத்தனர்; ஒருவருக்கு மன்னன் தன் அரசு கட்டிலையே கொடுத்து அடிமையாகவும் முன்வந்தனன். பலருக்கு யானையும், குதிரையும், பொன்னும், மணியும், தேரும் பிறவும் அவர் வேண்டியனவெல்லாம் பாற்சோறும் பட்டாடையும் பொற்கலத்தோடு கொடுத்து அரண்மனை வாழ்வையும் அளித்தனர். இப் புலவர்கள் முயன்றிருந் தால், தமிழகத்து வேந்தர்களை ஒற்றுமைப்படுத்திப் போர் களைத் தடுத்துக் குறைத்திருக்கலாம் என்று தற்காலத்தார் எண்ணுவது இயற்கையே.

இவர்கள் முயன்றிருந்தால் போர்களைச் சிறிது தணிக்க முடியுமே தவிர, முற்றும் நிறுத்திவிட இயலாது. அவ்வாறு போரை நிறுத்தித் தமிழக முழுதும் ஒரு நாடென்ற உணர்ச்சியுடன் தமிழ் மன்னர்கள் இருந்திருப்பின், தமிழக வரலாறு முற்றும் வேறு வகையாக இருந்திருக்கும். ஆனால், அக்காலத்தில், தற்காலம் போல ஒருமை உணர்ச்சியின்றித் தமிழகம் மூன்று நாடும் பல குறுநாடுகளும் கொண்ட நிலமாக இருந்தது. தனித்தனி மன்னரிடம் பிரிந்து பிரிந்திருந்த படைவலி, தோள்வலி, சீற்றம், போர்க்குணம், பகைமை இவற்றைத் தீர்த்துக் கொள்ளத் தக்காணத்தில் தகுந்த போர்க்களங்கள் அக்காலத்தில் இல்லை; போர்வேண்டின், பல பெருங்காவதங் கடந்து வடநாடு செல்லல்வேண்டும். இது நினைத்தவுடன் நிகழ்வது அரிதாகலின், உள்நாட்டுப் போர்களைத் தடுப்பது பயன் தராது. பயன் தரவேண்டின், படைகளைக் குறைத்து, அரசுகளை ஒன்றுபடுத்தித் தமிழகம் ஒருமைப்பட்ட பொதுமை நாடாக ஆகியிருத்தல் வேண்டும். இத்தகைய மனப்பான்மை அக்காலத்தில் இன்றித் தனித்தனி அரசுகளாகப் போர் செய்து வாழ்தலே அழகுந் தகுதியு மென்று அனைவருங் கருதினர். இதனால், புலவர் பெரும்பாலோர்



பாடிய பாட்டுக்கள் இப் போர்களுக்கு எண்ணெய் வார்ப்பதுபோல் முடிந்தன.

"நீ உன் பகைவர் நாட்டைச் சுடுகின்ற தீப்புகையி

ஞல், உன் தலையின் மாலை வாடுவதாக."

"வாடுக பெருமநின் கண்ணி, ஒன்ஞர்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே"

*   *   *   *

"புலவர் எல்லோரும் உன்னை நோக்கினுர்கள்; நீயோ

உன் பகைவராகிய இரண்டு வேந்தர்களின் மண்ணை

நோக்கிஞய்"

"புலவ ரெல்லாம் நின்ஞேக் கினரே, நீயே
....................................
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
[1]மாற்றிரு வேந்தர் மண்ஞேக் கினயே"

(புறம்: சஉ

*   *   *   *

"தாயிழந்து, உணவின்றி அழுகின்ற குழந்தையைப் போல, உன்னைப் பகைத்தவர் நாடு ஓயாது அலறிப் பாழாகும்," "உன் சொற் கேட்டு உன்வழி வாழாமையின், பாழாயின நின் பகைவர் தேயம்," "முன்னே வளந் ததும்பிய உன்பகைவர் நாடு இன்று காடாயிற்று," "நீ வேண்டியதைக் கொடுத்த மன்னர் தங்கள் நடுக்கந் தீர்ந்தனர்; இல்லையாயின், புற்றீசல்போல ஒரு பகல் உணவிற்கும் வழியில்லாமல் அவர்கள் கெடுவார்கள்."

"தாயில் [2]தூவாக் குழவி போல
ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே"

(புறம் : ௬௩)

" வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம் "

(மதுரைக்காஞ்சி : ௧௫௩-௧௫௪)

" காடாகி விளியும் நாடுடை யோரே "

1. மாற்று - மறுதலை. 2. துவா - உண்ணாத.



" தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
[1]கொண்டி வேண்டுவ னாயின் கொள்கெனக் ௭
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
......அவனளி யிழந்தோர்......

செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே" (புறம் : ௰௪)

என்று புலவர்கள் வெற்றிகொண்ட வேந்தர்களைப் பாடி யிருக்கின்றனர். இங்குப் பகைவர் என்போர் மூவேந்த ரும், மற்றச் சிற்றரசருமே யாவர். இவர்கள் ஒருவரோ டொருவர் நட்பும் பகையும் மாறி மாறிக்கொண்டிருந்ததை இப்பாட்டுக்கள் குறிப்பிடுகின்றன. வடநாட்டு இராச புத்திரர்கள் இடைக்காலத்தில் 400 ஆண்டுகள் தம்முள் ஒருவரை ஒருவர் வென்று கொன்று வாழ்வதே வீரம், மானம், கொற்றம் என்று கருதிச் செய்த போர்கள் அவரழிவிற்கே காரணமாயின. பண்டைத் தமிழகமும் இவ்வாறே போர் செய்து அழிந்தது என்பது மிகை யாகாது. இனி போர் நிகழ்ச்சிகளைச் சிறிது சுருக்கிக் கூற

விரும்புகிறேன்.

தன் பகைவனோடு போர் தொடங்குவதன் அறிகுறி யாக ஒரு வேந்தன் மற்றவனின் பசுக் கூட்டத்தைக் களவிலே சென்று கவர்ந்து வருவது வழக்கம். போர் தொடங்கும் பண்டைய நெறி இதுவே யாகும். இவ்வாறு வந்த போர் முதிர்ந்து, பகை வேந்தன்மேல் படையெடுத் துச் செல்லும் வேந்தன், நீராடிப் போர்மாலை யணிந்து, எதிர்ப்பட்டவர்கட் கெல்லாம் பொருட்கொடை செய்து, வீரர்கட்குப் போர்க் கருவிகளைத் தந்து, யானை தேர் குதிரை வீரர் எல்லாரும் புடைசூழக் கொற்றவை என்ற போர்த் தெய்வத்தை வணங்கி, முன்னணி பின்னணி வகுத்துப் பெரிய ஆரவாரத்துடன் புறப்படுவான். வீரர் எல்லோரும் தாம் முன்பு கொண்ட வெற்றிக்கும், தம் வீரப் பெருமிதத்திற்கும் அறிகுறியாக வெற்றிக்கழல், வீரக் கழல்களைக் கட்டிப், போர்க் கருவிகள் பேரொலி செய்ய விரைந்தேகுவர்.

---

1. கொண்டி - திறை.



புறப்பட்டுப்
பகைவர் ஊர்களை

போகும் படை, வழியிலே குறுக்கிடும்
யெல்லாம் தீயிட்டுக் கொளுத்தி, அகப்
பட்ட பொருளை யெல்லாம் வாரிக்கொண்டு, தான் தாக்க
வேண்டிய ஊரைச் சென்று நெருங்கும். அதனைச் சுற்றிப்
பகைவர் கண்ணுற் கண்ட அளவிலேயே தமது ஊக்கம்
ஒடுங்கும்படியான அகலமும் உயரமும் அழுத்தமும் அச்ச
மும் கொண்ட மதிலும், அதனைச் சுற்றி முதலைகளும்
கொடிய நீர்வாழ் விலங்குகளும் கூடிய ஆழமான அகழி
யும், அதனைச் சுற்றிக் கடக்க முடியாத அடர்ந்த கொடிய
காடுகளும், அதற்குக் காவலாகப் பெருமுள்ளிட்டுச் செய்த
வேலியும் வீரர்களால் காவல் செய்யப்பட்டு அச்சந் தர
விளங்கும்.

படையெடுத்த வேந்தன் படைஞர் தமக்கு உதவியாக
வந்த துணைவேந்தர் படைகளோடு சேர்ந்து, காட்டரணை
அழித்து, அகழியைப் பெரும்போர் செய்து கலக்கி, முன்
னேறுவார்கள். மதில்மீது அம்புக் கட்டுகள் வைக்கும்
அறைகளும், பகைவர்மீது அம்புகளை ஏவிவிட்டு மறைந்து
கொள்ளும் மறைவிடமும், பகைவர் நெடுந்தூரத்தில்
வருவதைக் கண்டறிவதற்கான மேடைகளும், மற்றும்
பெருவாரியான போர்க்கருவிகளும் ஆங்காங்கு அமைக்கப்
பட்டிருக்கும். மதில்மீது ஏணியைச் சார்த்தி வீரர்கள்
உடும்புப் பிடியாக ஏற, வாளும் வில்லும் ஈட்டியும் வேலும்
உலக்கையும் முதலிய கொடுங்கருவிகளால் வெட்டுண்டும்,
கொலையுண்டும் வீரர்கள் கீழே விழுகின்ற காட்சியும்,
அகழியில் விழுந்து தத்தளிக்குங் கொடுமையும், காண்
போர் நெஞ்சிற்கு நடுக்கந் தருவனவாகும்.

பகைவனின் படையெடுப்பை அறிந்தவுடனே, அவனை எதிர்க்கும் மன்னன், தன் ஊர்களில் உள்ள பசு, பெண்டிர், பிணியாளர் முதலிய போருக்கு ஆகாதவர்களையும் அஞ்சினவர்களையும் தமக்குப் பாதுகாப்பான இடத்தை அடையும்படியும், போரில் ஈடுபட விரும்புவோர் போர்க்குப் புறப்படுமாறும், போர்ப்பறை கொண்டு அறிவித்து, வீரமுரசுக்குப் பலியிட்டுக் கொற்றவைக்கு

வணக்கஞ் செலுத்திப் போர்முனைப் பாதுகாப்பிற்குப் புறப்படுவான். இவ்வாறு புறம்போந்து போர் செய்யாமல் அஞ்சி நடுங்கிய உள்ளத்துடன் நாட்டின் பாதுகாவலையும் கருதாமல், அரண்மனையில் பதுங்கிக் கிடந்த ஒரு சேர மன்னனின் தலைநகரை (கருவூரை)ச் சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் முற்றுகையிட்டு, அவன் காவல் மரத்தை வெட்ட, வெட்டும் ஓசை அரண்மனையில் எதிரொலி செய்யவும், அதற்கும் வெளிப்படாது நாணமின்றி யிருந்தனன்; 'நாணமின்றி யிருந்த அவ்வரசனோடு, நீயும் பகைப்பது கேட்போர்க்கு வெட்கந் தருவது' என்று ஆலத்தூர் கிழார் சோழனைப் பாடிய பாட்டு (புறம்: ௩௬), ஒரு முற்றுகை நிகழ்ச்சியைக் கூறுவதாகும். சோழன் நலங்கிள்ளி, நெடுங்கிள்ளியின் ஆவூரை முற்றுகையிட, நலங்கிள்ளி போரை நிறுத்தாமலும், போருக்கு வராமலும் பதுங்கிக் கிடந்தது கண்ட கோவூர் கிழார், ஊரில் ஏற்பட்ட கொடுங் குழப்பங்களை எடுத்துக் கூறி, 'வேந்தே! அறமுடையவனானால் போரை நிறுத்து; மறமுடையவனாயின், களத்தில் சென்று போர் செய்; அறமுமின்றி, மறமுமின்றி அடைத்திருப்பது வெட்கந் தருவது' என்று இடித்துக் கூறியது மற்றொரு முற்றுகை நிகழ்ச்சியாகும். (புறம்: ௪௪).

நலங்கிள்ளி உறையூரை முற்றுகை யிட்டபொழுது அடைத்திருந்த நெடுங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடி, 'இருவரும் ஒருகுலத்து மக்கள்; வெற்றியாயினும், தோல்வியாயினும் அதன் பயன் உங்கள் குடிக்கே வருவது' என்று எடுத்துக் கூறி, அவர் உளத்தைச் செம்மை செய்து போரை நிறுத்திய செய்தியும் இங்கு நினைவுகூரத் தக்கது. இவ்வாறு, பகைத்த இரண்டு வேந்தர்கட் கிடையில் பெரியோர் குறுக்கிட்டு இருவரையும் சந்து செய்வது மிகவும் அரிய செயல். குறிஞ்சிப்பாட்டில், "வினையிடை நின்ற சான்றோர் போலத்" தோழி, செவிலிக்கும் தலைவிக்கும் நடுவில் நின்று சந்து செய்யத் தவித்ததாக ஆசிரியர் கபிலர் கூறுகின்றார்.



இவ்வாறு முற்றுகை நெடிதுநாள் நடப்பதும், வீரர்கள் பாசறையில் தங்கிப் பல நாள் போர் செய்வதும், இரவில் புண்பட்ட வீரர்களையும் மற்றைப் படைகளையும் அரசன் போய் நேரே பார்வையிடுவதும், வீரர்களோடு கலந்து உறவாடுவதும், அவன் நள்ளிரவில், மழையையும் பொருள் செய்யாது அங்குமிங்கும் அலைவதும், பிறவும் நெடுநல் வாடையின் இறுதியில் அழகுற விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறு நெடுங்காலம் நடக்கும் போரில், படைகளின் உணவுக்கும் போர்க்கருவிக்கும் குறைவின்றி இருபதினாயிரம் வண்டிகளில், வேண்டிய எல்லாப் பொருள்களும் ஏற்றிச் செல்லப்பட்டதாகச் சிலப்பதிகாரம் செங்குட்டுவன் படையெடுப்பில் வைத்துக் கூறுகின்றது.

இனி இவ்வாறு முற்றுகை நடத்தி, தேரிலும் யானையிலும் குதிரையிலும் ஏறி, அம்புகளை மதில்மேல் உள்ள பகைவர்மீது ஏவி, யானைகளைக் கொண்டு கோட்டை வாயிலை இடித்துத் தள்ளி, நகருக்குள் புகுதலும், மதில் ஏறி அங்குள்ளோரைக் கொன்று உள்ளே குதித்தலும் ஊரைப் பிடிப்பதற்கு முதல் வழிகளாகும். யானைகளை வேல்களாலே குத்தி, யானையோடு யானையை மோதவிட்டு, யானையும் வீரரும் கீழே சாய்கின்ற காட்சி நெஞ்சிற்கு நடுக்கந் தருவதாகும். வெளிமதிலைக் கடந்தது போலவே உள்மதிலையுந் தாண்டிப் போர்க்களத்தைத் தனதாக்கி, பகைவரின் முரசும், குடையும், பிற கருவிகளும் வாரிக் கொண்டு, அரண்மனையை அடையும்வரை மதிலிலும், தெருக்களிலும் பெரும்போர் செய்து, அரண்மனையைக் கைக்கொண்டு, பகைவரை வென்று கொன்று, மற்றையோரைச் சிறைப்பிடித்து ஊரைப் பாழாக்குவர்; அல்லது, அங்கு வென்ற வேந்தன் புது நீராடி, முடி சூடி, விழாக் கொண்டாடுவான். வெற்றிகொள்ளும் ஆரவாரம் சங்க நூல்களில் அடிக்கடி கூறப்பட்டுள்ளது.

இங்ஙனம் வெற்றியில்லாமல் இரண்டு படைகளும், படைத்தலைவரும் வேந்தரும் அடியோடு மடிந்து மாண்டு போதலு முண்டு. இதற்குத் "தொகை நிலை" என்று

புறத் திலக்கணம் பெயர் கூறும். சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெரு விறற் கிள்ளியும் இவ்வாறு போர் செய்து இருவரும் தம் படையுடன் மடிந்ததை (புறம்: 62, 63) ஆசிரியர் கழாத்தலையாரும், பரணரும் பாடியது இங்கு நினைவு கூரத் தக்கது. போர்க்களத்தில் வீரர்கள் படையுடன் கொன்று குவிக்கப்பட்டிருக்கும் காட்சியைக் கண்டு, கூற்றுவனும் சிறிது மனமிரங்கினான். "கூற்றுக் கண் ணோடிய வெருவரு பறந்தலை" என்று ஒரு புறப்பாட்டு கூறும்.

இவ்வாறு அழிந்த ஊர்களில் கழுதை பூட்டிய ஏர்க ளால் உழுது, கண்டோர் அந் நகரத்தின் பழஞ்சிறப்பை யும் இன்றைய அழிவையுங் கூறி இரங்கியழப், பொய்கை களில் யானையை விட்டுக் கலக்கி, காவல் மரத்தை வெட்டி முரசமாக்கி, எள்ளையுங் கொள்ளையும் ஊரில் விதைத்துப் பாழ்படுத்திச் செல்லும் முறைமையும் உண்டு. ஆசிரியர் மாங்குடி மருதனார் பாண்டியன் நெடுஞ்செழியன் தன் பகைவர் ஊர்களைப் பாழ்படுத்திய விதத்தை மதுரைக் காஞ்சியில் கூறுவதும், பதிற்றுப்பத்தில் இவ்வாறு வரு வனவும் இப் பாழ்ங் காட்சியை இரக்கந் தோன்ற விளக்குகின்றன.

இனி, அன்னிமிஞிலி என்பவளின்

ணைக் கோசர்கள் என்னும் ஒரு சாரார் பிடுங்கியது, செங்குட்டுவன் பகைவன் ஊரை யழித்து அவன் ஊர்ப் பெண்டிரின் கூந்தலைக் கயிறாகத் திரித்து அதனால் யானையைப் பூட்டிச் செலுத்தியது, (பதிற். ரு பதி.) ஒருவனுடைய பல்லைப் பிடுங்கிவந்து கோட்டை வாயிலில் அதனைப் பதித்தது (அகம்: உ௦உ) முதலிய சில செய்திகள் ஒரோவழிக் கொடுநிகழ்ச்சிகளாக நடந்திருக்கின்றன.

இனி, இவ்வாறு தரையில் மட்டுமன்றிக் கடலிலும் பெரும் போர்களைத் தமிழர் செய்திருக்கின்றனர். சேரன் செங்குட்டுவன் மேலைக்கடல் தீவுகளில் கடம்பர் என்னும்

கூட்டத்தார் வழிவழியாகத் தங்கள் அரசுக்கு இடையூறு செய்துவந்தது பொறாமல், கடல் நடுவில் கப்பலைச் செலுத்தி அவர்களை வலியொடுங்கச் செய்த செய்தி சங்க நூல்களில் பலகால் சிறப்பிக்கப்பட்டிருக்கின்றது. இவன் குடியில் இவனே இவ்வாறு கடல் நடுவில் சென்று முதலில் பகைவரை ஒடுக்கினவனாதலின், இவன் சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் என்று பெயர் பெற்றனன். சிலப்பதிகாரம் இச் செய்தியை இன்னும் வலியுறுத்தும். பாண்டியருடைய கடற்படையைப்பற்றிக் குறிப்புக்கள் வரலாற்று நிகழ்ச்சிகளாகக் கிடைக்கப் பெறவில்லை. சோழன் கரிகாலனை, "நளியிரு முந்நீர் நாவாயோட்டி. வளிதொழி லாண்ட உரவோன் மருக" என்று வெண்ணிக் குயத்தியார் பாடியது (புறம்: சுசு) அவர் தம் பண்டைச் செயலொன்றைக் குறிப்பாகச் சுட்டிக் காட்டுகின்றது. கடற்போர் செய்யும்படியான இன்றியமையாமை அக்காலத்தில் மிகுதியாக இல்லையாதலின், மிகுந்த குறிப்புக்களும், இதுபற்றிக் கிடைக்கவில்லை.

## ௬.

## வெளிநாட்டுப் போர்

இனி, வெளிநாட்டுப் போர்களாகத் தமிழ் வேந்தர் செய்தவை யெல்லாம், அவர்கள் வடநாட்டில் சென்று ஆரியர்களோடு செய்த போர்களே யாகும். 'தமிழ் வேந்தர் இமயப் படையெடுப்பு' என்ற தம் கட்டுரையில் திரு. மு. இராகவையங்காரவர்கள், தமிழரின் வடநாட்டுப் போர்களைத் தக்க சான்றுகளுடன் உறுதிப் படுத்தி எழுதியிருக்கின்றனர். தமிழ் வேந்தரில் நெடுஞ்சேரலாதன் ஒருவனே, முதல் முதல் இமயம்வரை சென்று போர் செய்தவனாதல் வேண்டும். அதனாலே தான் இவன் மட்டும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று அழைக்கப்படுகிறான் போலும்! அவன் மகன் செங்குட்டுவனும், சோழரில் கரிகால் வளவனும் இமயம்வரை சென்று வெற்றியுடன் வந்தவராவர். பாண்டியரிலும் இமயம்வரை சென்ற மன்னர் இருந்தனர் என அறிகிறோம்; ஆயினும் அவர் பெயர் முதலிய விரிவு

•

கீள் கிடைத்தில. இவ்வாறு இவர் சென்று வந்தமையின், இவர் தம் பெயருடன் வடநாட்டுப் படையெடுப்பையும் சேர்த்து இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், கங்கைபேர் யாற்றுக் கரை போகிய செங்குட்டுவன் என இரண்டு மன் னர்கள் குறிப்பிடப்படுகின்றனர். கரிகால் வளவன், வட நாடு சென்று, மகத மன்னன் வச்சிரவரசன், அவந்தி வேந்தன் என்ற ஆரிய வேந்தரிடம் வெற்றியுடன் கொண்டு வந்த திறைகளைப்பற்றிச் சிலப்பதிகாரம் தெளியக் கூறு கின்றது. இவன் இடைப்பட்ட வேந்த ரெல்லோரையும் வென்று, இமயம்வரை சென்றும் தன் தோள்வலி யடங்கா மல் இமயத்திற்கு அப்பாலும் செல்ல முயன்றபோது, அம் மலை கடத்தற்கரியதாய்க் குறுக்கே நின்றமையின், சினங் கொண்டு அதன் உச்சியில் புலிப்பொறி நாட்டித் திரும் பினன் என்று பண்டை நூல்கள் கூறும். இவற்றை நோக்குமிடத்துத் தமிழ் வேந்தர், இமயமலை குறுக்கிடா விடின், அதற்கப்பாலும் சென்று வெற்றிகொள்ளும் படை வலியும் போர்த்திறனும் உடையவர் என்பது நன்கு விளங் கும். மூவேந்தரும் இமயம்வரை சென்று செய்த போர் களையும், வெற்றிகளையும் அவர் வழியில் வந்தோர் எல்லோ ரும் தத்தமக்கும் உரியவாகத் தத்தம் சிறப்புக்களுடன் சேர்த்துக் கூறிக்கொள்வது, ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வழக்கமாக இருந்துவந்தது.

இவ்வாறு, எக்காரணத்தாலோ வடநாட்டிற்கும்,

தமிழ் மன்னர்க்கும் நெடுகப் பகையிருந்ததைத் தமிழ்நூல்

கள் ஆங்காங்கு வற்புறுத்துகின்றன.

"வடவாரியர் படைகடந்து"

"பேரிசை மரபின் ஆரியர் வணக்கி" (பதிற் : உ பதி.)

"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்ன என் நலம்" (அகம் : ருகக)

புறநானூறும் போர்களும் அள

என்பன போலப் பல்வேறு சான்றுகளைப் பரக்கக் காண

லாம். இந்த நிகழ்ச்சியின் உண்மை இன்மைகளைப் பற்றிய வழக்குரையைச் சுருக்கங் கருதி வரலாற்றுச் சொற்பொழி வாளர்க்கு விட்டுவிடுகிறேன்.

## ரு. தற்காப்புப் போர்

இனி, தற்காப்புக்காகப் பல போர்களைத் தமிழர்

செய்யவேண்டியவராயினர். இவ்வாறு செய்த போர்கள்

ஆரியர் முதலான கூட்டத்தினர் தமிழ்நாட்டிற் படையெடுக்காது தடுத்துச் செய்த போரும், தமிழகத்திலேயே தம் பகைவேந்தரால் தந்நாடு அழியாதபடி அவ்வப்போது, வேண்டும்போதெல்லாம் படையெடுத்து வந்தவரோடு எதிர்த்துச் செய்த போரும் எனத் தற்காப்புக்காகத் தமிழர் செய்த போர் இருவகை.

> "ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்"

என்றும்,

> "மாரி யம்பின் மழைத்தோற் சோழர்
> வில்லீண்டு குறும்பின் வல்லத்துள் புறமிளை
> ஆரியர் படையின் உடைக"

என்றும் வரும் அடிகளால், வல்லம், முள்ளூர் முதலான சில ஊர்ப்பக்கத்தே ஆரியர்கள் தம் படையுடன் வந்து தமிழ் வேந்தருக்கு அவ்வப்போது இடையூறு விளைவித்து வந்தனர் என்று அறிகிறோம். கோவலன் கொலையுண்ட நாளில், மதுரை யாண்ட மன்னன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று சிலப்பதிகாரம் கூறும். இவன் வென்று கடந்த அவ்வாரியப்படை இவ்வாறு தமிழகத்தில் நுழைந்த ஒரு படையேயாதல் வேண்டும். சோழனொருவனை நோக்கி, "நீ வடதிசையில் எந்நேரத்திலும் படையெடுத்து வரக்கூடும் என்ற அச்சத்தால், அங்குள்ள, வேந்தன் தூங்குவதே யில்லை—'நீ வருதலுமுண்டென்று துஞ்சாக்கண்ண வடபுலத்தரசே' "-என்று ஒரு புலவர்

கூறுவது; இங்கு நினைவுகூரத்தக்கது. தமிழகத்தின் வடதிசையில் வாழ்ந்த மழவர், ஒளியர் முதலிய சிறு சிறு கூட்டத்தினருடன் பல போர்களைத் தமிழர் செய்திருக்கின்றனர். கடம்பருடன் சேரன் செங்குட்டுவன் செய்ததாக நான் முன்பு குறிப்பிட்ட கடற்போரும் தற்காப்புப் போரேயாகும். இவ்வாறு தற்காப்பின் பொருட்டு நடந்த போர்கள் பலப்பல.

---

# ௬.

# புறநானூறும் இலக்கியமும்

[திருவாளர், பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம். ஏ.]

## க தோற்றுவாய்

இலக்கியம் என்பது செய்யுள் நடையானும் அன்றி உரைநடையானும் ஆன்றோர் இயற்றிய நூல் எனப் பொருள்படும். இலக்கியம் என்பதனுள் எவ்வகை நூல்கள் அடங்கப்பெறும் என்பதைக் குறித்துப் பல ஆசிரியர் பல் வேறு கருத்துக்களைக் கூறுவர். இதைக் குறித்து ஆங்கில ஆசிரியர் யாது கூறுகின்றனர் என்பதை முன்னர் நோக்கு வோம். தமிழ் இலக்கியத்தைப் பற்றிப் பேசுங்கால், ஆங்கில ஆசிரியர் கூறிய கருத்துக்களை ஈண்டு மொழிபெயர்த்துக் கூறுதல் பொருத்த முடைத்தோ என ஒரு சிலர் ஐயுற லாகும். ஆனல் நமது இலக்கணம் மொழி பெயர்த்தலுக் கும் இடம் தருகின்றது.

"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழி பெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே"
(தொல். மரபியல் : கள)

என்ற நூற்பாவின்படி தொல்காப்பியர் நூல் செய்யும் வகையுள் இம் மொழிபெயர்ப்பினையும் ஒன்ருகக் கூறியுள் ளனர். எனவே, ஆங்கில ஆசிரியர் கூறும் கருத்தினை ஈண்டுக் கூறுதல் வழுவன்ரும். மேலும், மேனட்டு இலக் கியத்திற்கும் நாம் நாட்டு இலக்கியத்திற்கும் உள்ள ஒப்பு மையினை எடுத்துக் காட்டுவதுடன் புறநானூற்றினின்று

நாம் அறியக்கிடக்கும் இலக்கியப் பண்புகள் யாவை என் பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

பொதுவாக மக்கள் அனைவர்க்கும் பயன்படக் கூடிய தாய் விளங்கும் நூல்களே இலக்கிய மென்றும், ஒரு சில

குழுவினர் மட்டும் மிக்க ஊக்கத்துடன் ஆராயும், வான நூல், பொருளாதாரம், தத்துவம், வரலாறு முதலியவை களை இலக்கியம் எனக் கூறுதல் ஆகாதென்றும், அவை களைச் சாத்திரம் எனக் கூறுதல்வேண்டும் என்றும் கூறுவர் அட்சன் என்ற ஆசிரியர்.[1] ஆனல் ஆலம்[2] என்பார் இக் கருத்திற்கு நேர் முரணுக, மருத்துவம், சமய நூல், சட்டநூல் முதலிய நூல்களும் இலக்கியத்தின்பாற் படும் என்பர். மவுல்டன் என்ற ஆசிரியரும் இதே கருத் தினைக் கொண்டுள்ளார்; இலக்கியம் வேறு சாத்திரம் வேறு என வரையறுத்துக் கூற இயலாதென்றும், ஓர் இலக் கியத்தைத் துருவி ஆராயும்போது, அதில், சமயநூல், தத்துவம், வரலாறு, மொழிநூல் முதலிய பிற சாத்திரங் களும் தோத்திரங்களும் அடங்கும் என்றும் கூறுவர்.[3] யாப்பின் வகையைக் கூறப்போந்த தொல்காப்பியனர்,

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே"[4]

என்ற நூற்பாவில் யாப்பாவது, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என்ற எழனடி யாகத் தமிழ்நாட்டில் வழங்கும் செய்யுள் மரபாகும் என்பர்.

---

1. "Literature is composed of those books, and of those books only, which in the first place, by reason of their subject-matter and their mode of treating it, are of general human interest:.........A piece of Literature differs from a specialised treatise on astronomy,

history."

political economy or even
—*William Henry Hudson*.

2. Hallam.

3. "The Study of Literature in its natural development touches some twenty other studies (Theology, Philosophy, History, Philology etc.) distinct and independent. It is obvious that questions of demarkation will arise between the boundaries of these studies and what may be considered the intrinsic study of Literature itself."

*The Modern Study of Literature—(Moulton)*

4. தொல். செய்யுளியல், நூ. எக.



மேலே காட்டிய ஏழனுள் பிசி என்பது விடுகதை யாகும். உதாரணமாக:

"நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடில்

ஊராடும் நீரிற்காக் கை"[1]

இவ் விடுகதை நெருப்பினைக் குறிக்கும். இவ் விடுக்தைக்கும் ஓர் இலக்கணம் அமைத்து அதுவும் செய்யுளில் ஒன்ருக அடங்கப்பெறும் எனக் கூறியதால், ஓர் இலக்கியம் என்பது பலதிறப்பட்ட பாக்களையும் பலதிறப்பட்ட நூல்களையும் கொண்டதாகும் என்பது பெறப்படுகின்றது. திரு. டி. செல்வகேசவராய முதலியார் எம்.ஏ., அவர்கள் இலக்கியம் என்பது இன்னதென்பதை அழகாக விளக்கியுள்ளனர்: "ஒரு பாஷைக்கே உரிய இலக்கியமென்பது.... அந்தப் பாஷை வழங்கு நிலத்தின்கண் நிகழ்பொருள்களை, உள்ளன உள்ளவாறேயாக, புனைந்துரை வகையாளுக, கவி வல்லாரும் உரைநடை வல்லாரும் கூறிப்போந்த நூல்களின் தொகுதியாம். அவைதாம் சிறுகதைகளும், பெருங்கதைகளும், கற்பிதக் கதைகளும், தேச சரிதங்களும் அகப்பொருளும் புறப்பொருளும் முதலாகப் பல துறைப்படும்."[2] புறப்பொருள் பற்றிய புறநானூறு என்ற நூலில், சேர சோழ பாண்டியர் கடையெழு வள்ளல்கள் முதலியோர் வரலாறு, சோதிடம், சகுனம், கனுநூல், வானநூல் முதலிய நூல்களைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. எனவே, புறநானூறு என்பது ஒரு தனிப்பட்ட இலக்கியமாகும் என்பது பெறப்படுகின்றது.

## உ. இலக்கியப் பண்புகள்

இனி, ஓர் இலக்கியத்திற்குரிய பண்புகள் யாவை என்பதைக் காண்போம். ஒரு மொழியின் வாயிலாக வாழ்க்கைமுறையினை எடுத்துக்காட்டுவது இலக்கியமாம்.

---

1. தொல். செய்யுளியல், நூ. 176 பேராசிரியர் மேற்கோள்.

2. Tamil an Essay, P. 31. by Mr. T. Chelvakesavaraya Mudaliar, M.A.



"Literature is thus fundamentally an expression of life
through the medium of language"[1]

என்றார் அட்சன் என்ற ஆசிரியர். ஒரு சில ஆசிரியர் தாம் இயற்றிய நூல்களுள் தங்கள் குறிக்கோளினையும், வாழ்க்கையின் நிகழ்ச்சிகளையும், குறிப்பானும் வெளிப்படையானும் குறிப்பதுண்டு. ஆகவே, நாம் அந் நூல்களைப் படிக்கும் போது அவ் வாசிரியர்களின் உள்ளக்கிடக்கையினை அறிய இயல்கின்றது. ஆதலால் ஓர் ஆசிரியன் இன்னான் இனையன் என்பதை அவன் நூல் வாயிலாக அறிகின்றோம். ஒரு நூல் எழுதும் ஆசிரியன் ஒரு பொருளைப்பற்றிக் கூறுங்கால், தான் நேராகக் கண்ட அப் பொருளின் பண்பினை உள்ளதை உள்ளவாறே கூறுதல் வேண்டும். இதனை ஆங்கிலத்தில் "The principle of Sincerity"[2] என்பர். ஓர் இலக்கியத்தில் சிறந்த கருத்துக்கள் பொதிந்திருக்கக் காணலாம் என்பர் எமர்சன் என்ற ஆசிரியர்.[3]

சிறந்த இலக்கியத்தினுல் மக்கள் அறிவு, கூர்மையடைய அவர் ஞானத்தைப் பெறுவர்.[4] மக்களுக்கு நல்லொழுக்கம் புகட்டுவதில் இது ஒரு சிறந்த கருவியாக விளங்குகின்றது.[5] இலக்கியத்தின் மற்றோர் சிறப்பு யாதெனில், அது மக்களுக்கு இயற்கையின் எழில்நலத்தை எடுத்துக்காட்டி, அதைப் படைத்த இறைவனின் தன்மையினை நினைவூட்டி, அவர்களை நல்லாற்றுப் படுத்தும் நெறியாகவும் உள்ளது.[6] இதுகாறுங் கூறியவற்ருல் இலக்கியம் என்பது ஒரு மொழியின் வாயிலாக வாழ்க்கை முறையினை மக்களுக்கு எடுத்துக்காட்ட வல்லது என்பதும், நூலா

---

1. An Introduction to study of Literature by Hudson, P. 11.

2. "Involved in this, yet calling for separate emphasis, is the great principle, first enunciated by Plato, that the foundation of all good and lasting work in **literature is entire sincerity to oneself,** to one's own experience of life and to the truth of things as one is privileged to see it."

—*W. H. Hudson.*

3. "Literature is a record of best thoughts"

—*Emerson.*

சிரியன் நூல் எழுதுங்கால் தான் கண்ட பொருளின் தன்மையை உள்ளது உள்ளவாறே கிளத்தல் வேண்டும் என்பதும், சிறந்த கருத்துக்களைக் கொண்டது இலக் கியம் என்பதும், அது மக்கள் அறிவினைக் கூர்மையாக்கி அவர்கள் ஞானம் பெறுதற்குக் கருவியாக விளங்கி, நல் லொழுக்கத்தில் புகும்படி செய்து, அவர்களுக்கு இயற் கையின் எழில்நலத்தை எடுத்துக் காட்டுவதுடன், அத னைப் படைத்த பரம்பொருளின் பெருங்கருணைத் திறத் தினையும் விளக்கி, அவர்களை நல்லாற்றுப்படுத்தும் நெறி யாகவும் விளங்குகின்றது என்பதும் பெறப்படுகின்றன.

## ௩. புறநானூறும் இலக்கியமும்

மேலே கூறப்பட்ட இலக்கியப் பண்புகள்

அனைத்
தும்
கள்
னைக்

நாம் புறநானூற்றில் காணலாம். புலவர் பெருமக் தம் பாடல்களுள் அவர்களது வாழ்க்கை வரலாற்றி குறிப்பானும் வெளிப்படையானும் எடுத்துக்காட்டி அப் பாக்கள் மூலம் வாழ்க்கை முறையினை மக்களுக்கு விளக்கிக் கூறுவர் என்பது முன்னரே கூறப்பட்டது.

பாணர் என்ற புலவர் ஓர்
வள்ளல்களுள் ஒருவனாகிய

இரவலனைக் கடையெழு
பேகன் என்பானிடத்து
ஆற்றுப்படுத்துகின்றார். ' இரவலனே ! பேகன்
என்ற,

---

4. "In the words of Cardinal Newman-the object of literature in education is to open the mind, to correct it, to refine it, to enable it, to comprehend and digest its knowledge, to give it power over its own faculties, application, flexibility, method, critical exactness, sagacity, address and expression". -Select Essays from the writings of *Viscount Morley* edited by H. G. Rawlinson, M. A., P. 51.

5. "Lilerature is one of the most powerful instruments for forming character". —*Viscount Morley*.

6. "Literature, so for as it is Literature, is an 'apo calypse of Nature,' a revealing of the 'open secret.' It may well enough be named a 'continues revelation' of the Godlike in the Terrestrial and Common."

—Hero as Man of Letters—*Thomos Carlyle*. கஅ

புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

இவ் வள்ளலைக் காணும் முன்னர் யான் நின்னினும் வறுமையுடையேனாக இருந்தேன். ஆனால் அவனை அடுத்த பின்னர் அவ் வறுமை ஒழிந்து தற்போது நல்ல நிலையில் இருக்கின்றேன். மயிலுக்குப் போர்வை அளித்த எம் இறைவனாகிய பேகனது கொடைத்திறம் சாலவும் போற்றற்குரியது. அவனது கொடையின் நோக்கம் கொடுத்தல் நல்லதெனக் கொண்டு, மறுபிறப்பை நோக்கியதன்று; பிறரது வறுமையை நோக்கியதாகும்,' என்றார் பரணர்.

"..................கடும்பசி யிரவல
வெல்வே லண்ணற் காணு வூங்கே
நின்னினும் புல்லியேம்[1] மன்னே ; இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
..................கலிமான்[2] பேக
னெத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே"

(புறம்: கசுக)

இச் செய்யுளில் புலவர் தமது வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதைக் காண்க. உலகில் சிலர், இரப்போர்க்குக் கொடுத்தால் இம்மையிற் புகழுண்டு என்ற நோக்கத்தாலும், சிலர் மறுமைக்குப் பயன் உண்டு என்ற நோக்கத்தாலும் அறம் செய்வர். ஆனால் பேகனின் கைவண்மை அத்தகையதன்று. அறம் செய்தல் நல்லதென்றும், அது மறுமைக்குப் பயன்தரும் என்பதையும் அவன் கருதினானில்லை. பிறரது வறுமையைப் போக்குவதே அவனது குறிக்கோளாகும். புறநானூற்றில் இதே கருத்துடைய "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்" (புறம்: கங்ச) என்ற ஒரு செய்யுள் உள்ளது. இதில், 'கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆய் என்ற வள்ளல் இப் பிறப்பிற் செய்தது மறு பிறவிக்குப் பயன்படும் எனக் கருதி, பொருளை விலையாகக் கொடுத்து அறம் கொள்

---

1. புல்லியேம் - வறியேம்.
2. கலிமான் - மனஞ்செருக்கிய குதிரை.

ளும் வணிகன் அல்லன்; அவனது கைவண்மை சான்றோர் சென்ற நெறியைப் பின்பற்றியதாகும்,' எனக் கூறப்பட்டுள்ளது. இத்தகைய பாக்கள், மக்கள் தங்கள் வாழ்க்கையில் எத்தகைய குறிக்கோளுடன் அறம் செய்தல் வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

இலக்கியத்தின் மற்றோர் பண்பாகிய உள்ளதை உள்ளவாறே கிளத்தல்[1] என்பதற்குப் புறத்தில் பல உதாரணங்கள் உள்ளன, அவற்றுள் ஈண்டு ஒன்றினை மட்டும் குறிப்பிடுகின்றேன். பெருஞ்சித்திரனார் என்ற புலவர் தமது வறுமையைப் போக்கிக்கொள்வான் வேண்டி,

குமணன் என்ற வள்ளலிடம் சென்று தம் தாய், மனையாள் முதலியோர் வறுமைப் பிணியால் பீடிக்கப்பட்டு வருந்து வதை உள்ளது உள்ளவாறே தன்மை நவிற்சியணி ததும்

பும் வண்ணம் எடுத்துக் கூறுகின்றார். 'கூர்வேற் குமண! மிக்க வயது முதிர்ந்த என் தாய் தனது வாழ்நாள் முடிய வில்லை எனத் தன் வாழ்நாளுடன் வெறுத்துக்கொண்டு கையில் பிடித்த கோலினையே காலாகக் கொண்டு நடந்தும் கண்ணொளி மழுங்குதலான் முற்றத்தினின்று புறப்பட மாட்டாமையாகிய மூப்பினையுடையாள்; என் மனையாளோ வெனின் பசந்த மேனியுடன், மருங்கில் எடுத்த சிறு

பிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் உலர்ந்த மார்பினை

யுடையாளாய் வருந்தி, உணவில்லாமையால் குப்பையில் தானே முளைக்கும் கீரையின் தளிரைக் கொண்டுவந்து உப்பில்லாமையால் வெறும் நீரில் அதை வேகவைத்து, மோரும் சோறும் இன்மையான், அக் கீரையினையே உணவாக உண்டு அழுக்குப்படிந்த கிழிந்த ஆடையினை யுடையாளாய் அறக்கடவுளைப் பழித்து நிற்கின்றாள். எனவே, இத்தகைய என் தாயும், மனையாளும் பிற சுற்றத் தினரும் மகிழும் வண்ணம் நீ எனக்குப் பரிசில் தருவா யாக. தரும் பரிசு யானையைப்போன்று மிகச் சிறந்த தாயினும், நீ மனமகிழ்ச்சியின்றிக் கொடுப்பாயாயின் யான் அதனைப் பெற்றுக் கொள்ளேன். கொடுப்பது மிகச்

1. "The principle of sincerity"



சிறிதேயாயினும் நீ மனம் உவந்து கொடுப்பின் யான் அதனைப் பெற்றுக்கொள்வேன்' என்றார் (புறம்: ௧௫௯). இவ்வாறு புலவர் தம் வறுமையின் கொடுமையினை உள்ளது உள்ளவாறு கூறுகின்ற திறம் போற்றற்குரியதன்றோ? "களிறு பெறினுந் தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ, இன்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண" என்ற வரிகள் புலவரின் வறுமையிற் செம்மையாம் பண்பினைப் புலப்படுத்துகின்றன.

ஓர் இலக்கியம் சிறந்த கருத்துக்களைத் தன்னிடத்தே கொண்டு விளங்கவேண்டும் என்பது முன்னரே கூறப் பட்டது. புறத்தில் சிறந்த கருத்துக்கள் அடங்கிய பல பாக்கள் உள்ளன. கீழ்க்காணும் வரிகள் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

" நிலம் பெயரினும் நின்சொற் பெயரல் "
(புறம் : ௩)

" நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே "
(புறம்: ௧அ)

" புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி யெய்துப "
(புறம்: ௨எ)

" அறனும் பொருளு மின்பமு மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்ரு மைந்நிற் போற்ரு மையே " (புறம்: ௨அ)

" நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே " (புறம்: ௩௪)

" அறநெறி முதற்றே யரசின் கொற்றம் ". (புறம்: ௫௫)

"வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன் மெய்கூறுவல்" (புறம்:௧௩௯)

" நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம் " (புறம்: ௧அ௬)

" செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே " (புறம்: ௧அ௯)

"யாது மூரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா"

(புறம்: ககூஉ)

"ஈயென இரத்தல் இழிந்தன் றதனெதிர்
ஈயே னென்றல் அதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே
னென்றல் அதனினு முயர்ந்தன்று." (புறம்: உ0௪)

## ௪. இலக்கியத்தின் பயன்

இலக்கியம் மக்களுக்கு அறிவு கொளுத்துகின்றது என்பதனை விளக்கப் புறத்தில் பல செய்யுட்கள் உள. பொருண்மொழிக்காஞ்சி என்ற துறையில் நரிவெரூஉத் தலையார் பாடிய பாட்டினை நோக்குக. மக்களுக்கு இது ஒரு சிறந்த அறவுரையாக விளங்குகின்றது.

"நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமின் அதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்

நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே." (புறம்; ௧௯௫)

ஒருவன் தனது வாழ்க்கையில் இதனை மறத்தலாகாது.

மக்கள் இயற்கையன்னையின் எழில் நலத்தைக் கண்டு களிப்பதற்கும், இல்லறம் நடத்திப் பின்னர் நிலையாமை உணர்ந்து மெய்யுணர்ச்சி பெறுதற்கும் இலக்கியம் எவ்வாறு பயன்படுகின்றது என்பதை ஆராய்வோம். பழந் தமிழ் மக்கள் இயற்கையிலுள்ள அழகினைக் கண்டு இன்புற்று, பின்னர் அதனை உண்டாக்கிய கடவுள் ஒருவர் இருத்தல் வேண்டுமென்ற உணர்வுகொண்டு, யான் என்னும் அகப்பற்றினையும் எனது என்ற புறப்பற்றினையும் விட்டு, அப் பற்றற்றான் பற்றினைப் பற்ற விழைந்தனர் என்பதனை விளக்கச் சங்க இலக்கியங்களுள் பல சான்றுகள் உள்ளன. புறநானூற்றில் பல புலவர்கள் ஆறு, மலை, கடல், ஞாயிறு, திங்கள், மாரி முதலியவைகளைக் கூர்ந்து கண்டு அவைகளைச் செம்மையாக வருணித்துள்ளனர். பாரியின் பறம்பு மலையினையும் அவனது அரணின் சிறப்பையும் கபிலர்

வருணிப்பதைக் காண்க. கருவூர்க் கந்தப்பிள்ளை சாத்தனுர் என்ற புலவர் தம் செய்யுளில் (புறம்: கசுஅ) குதிரை மலையின் சிறப்பினையும் ஆண்டு வாழும் குறவர் இயல்பினையும் நன்கு வருணித்துள்ளார். ஒரு சில புலவர் இல்லறத்தினும் துறவறமே சிறந்தது எனக் கூறியுள்ளனர். தவத்தின் மாட்சியினை வான்மீகியார் என்ற புலவர் சிறப்பித்துப் பாடியது ஈண்டு நோக்கத்தக்கது.

“பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கின் தவத்துக்
கையவி யனைத்தும் மாற்று தாகலின்
கைவிட் டனரே காதல[1]ரதனல்
விட்டோரை[2] விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே” (புறம் : ௩௫அ)

'சூரியன் சூழ்ந்து வருதலான பயன்மிக்க இம் மாநிலம் ஒரே நாளில் ஏழு மன்னரைத் தனக்குத் தலைவராகப் பெற்றுள்ளது. ஏனெனில் ஒருநாள் கழிவதற்குள் அதே நாளில் ஏழு மன்னரும் ஒருவர்பின் ஒருவராக மாண்டனர். (இதனால் செல்வநிலையாமையினையும், யாக்கை நிலையாமையினையும் குறிப்பிட்டார்.) இத்தகைய நிலையாமையைத் தன்னிடத்தே கொண்டுள்ள இவ்வுலகினையும் வீட்டிற்கு வாயிலாக வுடைய தவத்தினையும் சீர்தூக்கிப் பார்க்கின், இவ்வுலகம் ஒரு சிறு கடுகு அளவுள்ள நிறைக்கும் தவத்திற்கு ஒப்பாகாது. இதுகாறும் உலகப் பற்றில் தோய்ந்த மக்கள் இந் நிலையாமையை அறிந்து அவ்வுலகப் பற்றினை விடுத்து, துறவற நெறியைக் கையாண்டனர். இவ்வுலகப் பற்றினை விட்டோர்பால் திருமகள் உறைவாள். அப் பற்றினை விடாதவரைத் தான் விட்டு நீங்குவாள்' என்பது இப் பாட்டின் பொருளாகும். துற

---

1. காதலர் - வீட்டில் விருப்பமுற்றோர்.

2. விட்டோரை – பற்று விட்டோரை.

புறநானூறும் இலக்கியமும்

கூசு வறத்தை நோக்க இவ்வுலக வாழ்க்கை கடுகத்தனையும் ஒப்பாகாது என்ற கருத்தினைத் திருத்தக்கதேவரும்,

"ஏமநீ ருலகமோ ரிம்மிப் பாலெ்ன

நாமவேல் நரபதி நீக்கி நன்கலந்

தாமமார் மாலையுந் துறக்கின் றனரே..... "[1]

என வற்புறுத்தியுள்ளனர். உலகப் பற்றினை விட்டவரைத் திருமகள் சார்வாள் என்ற கருத்தினைக் குலசேகராழ்வார்,

"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்

தன்னையே தான்வேண்டுஞ் செல்வம்போல்"[2]

எனக் கூறுவதைக் காண்க. எனவே, மக்கள் மெய் யுணர்வு பெறுதற்கு வாயிலாக உள்ளது என்பது போதரும்.

இலக்கியமாகும்

இலக்கியம் என்பதில், தனிநிலைச் செய்யுள், தொடர் நிலைச் செய்யுள், உரைநடை, நாடகம் முதலிய அனைத்தும் அடங்கப்பெறும். தமிழ் இலக்கியத்தில் மிகுதியாகச் செய்யுள் நடையில் அமைந்த நூல்களே உள்ளன. இதற்குக் காரணம் உரைநடைக்கு அமையாத சில சிறப்பு இயல்புகள் செய்யுளுக்கு உண்டு. சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச் செறித்து இனிது விளக்குவது செய்யுளாகும். மக்கள் எளிதாகத் தம் நினைவில் அமைத்துக்கொள்ளும் இயல்புடைமை, ஓசையோடு கூடிய இனிமை ஆகிய இவ்விரு பண்புகள் செய்யுளுக்கே சிறப்பாக அமைந்துள்ளன. இனி, செய்யுளின் தோற்றத்திற்கு யாது காரணம் என்பதை நோக்குவோம். ஒரு புலவன் தன் மனத்தில் தோன்றிய எண்ணங்களையும் மனோபாவங்களையும் செய்யுள்மூலம் எடுத்துக் கூறுகின்றான்.[3] ஓவியக்காரன் ஒருவன் தான் தீட்டும் ஓவியத்திற்குப் பலவகை

---

1. சீவகசிந்தாமணி - செய்யுள், கூ0உஎ.
2. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - பெருமாள் திருமொழி ௫:க.
3. "Poetry in a general sense may be defined as the expression of the imagination"—*Shelly.*

நிறங்கள் கொடுத்து அழகு செய்வதுபோல் ஒரு புலவனும் பல சொற்கள்மூலம் பாக்களைச் சித்திரித்துக் காட்டு கின்றான்.[1] ஒரு செய்யுளானது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய இவற்றால் ஆக்கப்படுவதால் நாம் அதில் ஓர் இசை இன்பத்தைக் காண்கின்றோம். இதனையே ஜான்சன்[2] என்ற ஆசிரியர் "Poetry is a metrical Composition" என்பர். கருத்துக்களை இசையுடன் எடுத்துக்கூறுவதே செய்யுளாகும் என்பர் கார்லைல்.[3] "Poetry is the rhythmic creation of beauty" என்பர் எட்கார் ஆலன் போ[4] என்ற ஆசிரியர். புறநானூற்றில் இவ்வித ஓசை இன்பம் பயக்கக்கூடிய செய்யுட்களும், எதுகை, மோனை முதலியவை நிறைந்த செய்யுட்களும் உள்ளன.

> " நிலனெளி[5] மருங்கின் நீர்நிலை பெருகத்
> தட்டோ[6] ரம்ம விவட்டட் டோரே
> தள்ளா தோரிவட் டள்ளா தோரே." (புறம் : கஅ)

இவ்வரிகளில் வந்துள்ள ஓசை இன்பத்தினை நோக்குக. பரணர் பாடிய ஒரு சில பாக்களுள் பல அடிகளுள் எதுகையினைக் காணலாம்.

"மடத்தகை[7]மாமயில் பனிக்கு[8]மென் றருளிப்
படாஅ[9]மீத்த கெடாஅ நல்லிசை
கடாஅ[10] யானைக் கலிமான் பேக." (புறம்: கசரு)

---

1. "By poetry we mean the art of employing words in such a manner as to produce an illusion on the imagination, the art of doing by means of words what the painter does by means of colours" —*Macaulay.*

2. Johnson.

3. "Poetry, therefore, we call Musical Thought" —*The Hero as poet—Carlyle.*

4. Edger Allan Poe. 5. செளிதல் - குழிதல்.

6. தட்டோர் - தளைத்தோர்.

7. மா - கரிய 8. பனிக்கும் - பனியால் நடுங்கும்.

9. படாம் - ஆடை. 10. கடாம் - மதம்.



புறநானூற்றிலுள்ள செய்யுட்கள் ஆசிரியப்பாவால் ஆக்கப்பட்டன. "அகவ லென்ப தாசிரி யம்மே"[1] என்ற நூற்பாவிற்கு உரை எழுதப்போந்த பேராசிரியர் அகவற் பாவின் இலக்கணம் இன்னதெனக் கூறுகின்றார். "அகவிக் கூறுதலான் 'அகவல்' எனக் கூறப்பட்டது; அஃதாவது கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப, அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங் கருதியவாறெல் லாம் வரையாது சொல்வதோராறும் உண்டு. அதனை

வழக்கினுள்ளார் அழைத்த லென்றுஞ் சொல்லுப ; அங்ஙனஞ் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாம் தொடர்ந்து கிடந்த ஓசை அகவலெனப்படும்; அவை : தச்சுவினைமாக்கள் கண்ணும், களம்பாடும் வினைஞர் கண்ணும், கட்டுங் கழங்குமிட்டு உரைப்பார்கண்ணும், தம்மில் உறழ்ந் துரைப்பார்கண்ணும், பூசலிசைப்பார்கண்ணும் ...படும்."

கேட்கப்

## ரு. செய்யுள் வகை

இனி, செய்யுள் வகையினை நோக்குவோம். மேனாட்டு ஆசிரியர், செய்யுள் இரண்டு வகைப்படும் என்பர். அவற்றுள் ஒன்று, ஒரு புலவன் தனது பாடலுள் தன் வாழ்க்கை வரலாற்றினையும் நிகழ்ச்சிகளையும் அனுபவங்களையும் எடுத்துக் கூறுதல். இதனை 'Subjective Poetry,' என்பர். மற்றொன்று, ஒரு புலவன் தன்னைப்பற்றி யல்லாமல் உலகத்துட் காணும் நிகழ்ச்சிகளையும் அவைகளின் தன்மைகளையும் எடுத்துக் கூறுதல். இதனை 'Objective Poetry' என்பர். இந்த இருவகைப் பிரிவுகளுக்கும் புறநானூற்றினின்று பல செய்யுட்களை மேற்கோளாக எடுத்துக் காட்டலாம். ஆனால் இந்த இரண்டு பிரிவுகளும் கடுமையாக வரையறுக்கப்பட்ட பிரிவுகள் எனக் கூற இயலாது. ஏனெனில், ஒரு புலவன் தான் பாடிய பாட்டில் தன்னைப்பற்றியும் உலகத்தைப்பற்றியும் ஒன்றுசேர்த்துப் பாடுதலுங் கூடும். புலவன் தன்னைக் குறித்துப் பாடும் தனிநிலைச் செய்யுட்களை Lyric Poetry

1. தொல். செய்யுளியல் – நூ. அக.

என்றும் கூறுவர். யாழுடன் சேர்த்துப் புலவன் பாடுதலின் Lyric Poetry எனக் கூறப்படுகின்றது, எனக் கூறுவர் சிலர்.[1] (Lyre = யாழ்). புறநானூற்றில் பாணாற்றுப்படை, புலவராற்றுப்படை முதலிய துறைகளில் வந்துள்ள பல பாக்கள் இவ்வகையுள் அடங்கப்பெறும். புலவன் ஒருவன் தத்துவ சம்பந்தமான கருத்துக்களைத் தனது பாட்டில் அமைத்துப் பாடுவதை Meditative and Philosophical Poetry என்பர். ஒரு சில ஆங்கில ஆசிரியர் செய்யுளில் தத்துவம் அமைத்துப் பாடுதல் இன்றியமையாததாகும் என்பதனை வற்புறுத்திக் கூறுவர்.[2] தனது பாடல் மூலம் மக்களுக்குப் புலவன் அறவுரை வழங்குவானெனின் அப் பாடலினை மேனாட்டார் Didactic Poetry என்பர். புலவன் பாடும் பாக்களில் தத்துவமும், அறவுரையும் நிறைந்திருக்கும் என்பதை விளக்கப் புறநானூற்றில் பல பாக்கள் உள. செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து முதலிய துறைகளுள் வரும் செய்யுட்கள் மேலே காட்டிய இருவகைப் பகுதிகளுள் அடங்கப்பெறும். தொல்காப்பியத்தில் 'வாயுறை வாழ்த்தை'ப் பற்றிய குறிப்பு, புறத்திணையியலிலும், செய்யுளியலிலும் காணக் கிடக்கின்றது. "கொடுப்போர் ஏத்தி"[3] என்ற சூத்திரத்தில் காணும் 'வாயுறை வாழ்த்து' என்ற மக்கட்பகுதியாகிய பாடாண்டிணைக் குரிய துறையினைக் கூறவந்த நச்சினார்க்கினியர் "இதற்கு ஒரு தலைவன் வேண்டாவாயினும் அவற்கு உறுதி பயத்தலைச் சான்றோர் வேண்டி வாய்மொழி மருங்கினான். அவனை வாழ்ச்சிப்படுத்தலின்........" எனக் கூறுவதால் வாயுறைவாழ்த் தென்பது

ஒரு தலைவன் வேண்டானாயினும் உறுதி பயக்கும் உண்மையினைச் சான்றோர் அவனுக்கு எடுத்துரைத்தல் என்பது பெறப்படுகின்றது.

---

1. "Lyric Poetry, in the original meaning of the term was Poetry composed to be sung to the accompaniment of lyre or harp" —*Hudson.*

2. "Philosophy first and poetry which is its highest outcome afterwards" —*Browning.*

3. தொல். புறத்திணையியல்: கூ.



" வாயுறை வாழ்த்தே வயங்க நாடின் "[1]

என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர் கூறும் உரையினைக் காண்க. "முற்பருவத்துக் கைத்தும் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்கும் எனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறைவாழ்த் தெனப்படும்." நரிவெரூஉத் தலையார் என்ற புலவர் ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும்பொறைக்குக் கூறிய வாயுறைவாழ்த்து ஈண்டு நோக்கத் தக்கது. 'பெரும! அருளும் அன்புமின்றிப் பாவம் செய்து, நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்ளும் பாவிகளோடு நீ சேருதல் கூடாது. ஒரு குழந்தையை வளர்ப்பதுபோல் நீ உனது நாட்டினைப் பாதுகாப்பாயாக' என்றார்.

"................................பெரும!
நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்

அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரோ(டு) ஒன்றாது காவல்

குழவி கொள்பவரி னோம்புமதி
[2]அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே."[3]
(புறம்: ©)

'இதனுள் நிரயங் கொள்வாரோ டொன்றாது காவலை

யோம்பென வேம்பும் கடுவும்போல வெய்தாகக் கூறி அவற்கு உறுதி பயத்தலின் வாயுறைவாழ்த் தாயிற்று' என்பர் நச்சினார்க்கினியர். "செவியுறைதானே பொங்குதலின்றி"[4] என்ற சூத்திரத்திற் கூறியபடி ஆடம்பரமின்றிப் பெரியோர் நடுவே அடங்கி வாழ்தல் ஒருவனது கடமையாகும் எனக் கூறிச், செவிக்கண் அறிவுறுத்துவது செவியறிவுறூஉவாம். புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் 'மாச்சரியமும் கெடுதலு மில்லாத பெரிய எண்

1. தொல். செய்யுளியல்: ககஉ.
2. அளிது - அளிக்கத்தக்கது.
3. அருங்குரைத்து - அரிது.
4. தொல் - செய்யுளியல்: கக௪.



ணத்தை அரசனுக்குச் சொல்லுதல்' செவியறிவுறூஉ என்பர். புறநானூற்றில் மதுரை மருதனிளநாகனார் என்ற புலவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்குக் கூறும் செவியறிவுறூஉவினைக் காண்க.

"வேந்துமேம் பட்ட பூந்தார் மாற!
... ... ... ... ... ... ... ... ... ...
அறநெறி முதற்றே யரசின் கொற்றம்[1]
அதனால் நமரெனக் கோல்கோ டாது

பிறரெனக் குணங் கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்[2]

வானத் தன்ன வண்மையு மூன்றும்

உடையை யாகி யில்லோர் கையற

நீ நீடு வாழிய நெடுந்தகை..........."

(புறம்: ௩௬)

இறந்த ஒருவரைக் குறித்து அவரது குணநலத்தை யெல்லாம் எடுத்துப் பாராட்டிப் பாடும் வகைக்கு ஆங்கிலத்தில் Elegy என்று பெயர். நந்தம் தமிழ்மொழியிலும் அதைப்போன்ற பாக்கள் உண்டு. காஞ்சித் திணையில் வரும் மன்னைக் காஞ்சி, [3]கையறுநிலை போன்ற துறைகளுள் பாடப்படும் செய்யுட்கள் ஆங்கிலத்திலுள்ள Elegy என்ற வகையினை ஒத்துள்ளன. "இன்னன் என்று இரங்கிய மன்னையானும்"[4] என்ற சூத்திரத்திற்கு உரை கூறப் போந்த நச்சினார்க்கினியர், "ஒருவன் இறந்துழி அவன் இத்தன்மையோனென்று ஏனையோர் இரங்கிய கழிவு பொருட்கண் வந்த மன்னைக் காஞ்சியானும்; இது பலவற்றின் நிலையாமை கூறி இரங்குதலின் மன்னைக் காஞ்சி யென வேறுபெயர் கொடுத்தார். இது பெரும் பான்மை மன் என்ற இடைச்சொற் பற்றியே வருமென்றற்கு மன் கூறினார்," எனக் கூறுவதைக் காண்க.

---

1. கொற்றம் - வெற்றி.
2. சாயல் - மென்மை.
3. கையறு - இல்லையாக.
4. தொல் - புறத்திணையியல்: ௨௪.

அதியமான் நெடுமானஞ்சியை ஒளவையார் பாடிய பாடல் இத் துறைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே......
... ... ... ... ... ... ... ...
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வை சோர
அஞ்சொ னுண் தேர்ச்சிப் புலவர் நாவிற்
சென் றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநருமில்லைப் பாடுநர்க்கொன் றீகுநருமில்லை...

(புறம் : உ௩௫)

"அதியமான் சிறிய அளவினையுடைய மதுவைப் பெற்றால் அதை எங்களுக்குத் தருவான்; அது கழிந்தது! பெரிய அளவினையுடைய மதுவைப் பெற்றாலும் அதனை முதலில் எங்களுக்கு அளித்து, பின்னர் எஞ்சியதைத் தான் நுகர்வான்; அது கழிந்தது! அவனது மார்பில் தைத்த வேல், அரிய தலைமையையுடைய பெரிய பாணர் தம் கையுள் வைத்துள்ள பாத்திரத்தின் துளையை யுருவி, இரப்பவர் கைகளையும் தைத்துருவித், தன்னால் புரக்கப் படும் சுற்றத்தாரது புல்லிய கண்ணிற் பாவை ஒளி மழுங்க, அழகிய சொல்லை ஆராயும் ஆராய்ச்சியை யுடைய அறிவினை யுடையோர் நாவின்கண்ணே போய் வீழ்ந்தது. எமக்குப் பற்றாகிய எம் இறைவன் எவ்விடத்துள்ளான் கொல்லோ? இனிப் பாடுவாருமில்லை; பாடுவார்க்கு ஒன்றீவாரு மில்லை," என்பது இதன் பொருள்.

மேனாட்டு ஆசிரியர் தனிநிலைச் செய்யுள் வகையுள் 14 வரிகளுள் அடங்கப் பெறும் செய்யுளினை Sonnet என்பர். எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல் ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய இவைகளின் அடிப்

பெருமையும் சிறுமையும் குறிப்பிட்டப்பட்டுள்ளன. ஆனால், புறநானூற்றில் வந்துள்ள செய்யுட்களின் அடியின் சிற்றெல்லையும் பேரெல்லையும் புலப்படவில்லை. புறநானூற்றைப் பதிப்பித்த, மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் அந்நூல் முன்னுரையில் "இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமை பெருமையும் தெரியவில்லை" எனக் கூறுவதைக் காண்க. ஆங்கிலத்திலுள்ள Sonnets என்ற வகையைப் போலவே திரு. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் அவர்கள் தனிப்பாசுரத் தொகை" என்ற 14 அடிகளுள்ள செய்யுட்களைக்கொண்ட ஒரு நூல் இயற்றியுள்ளனர். இதனை டாக்டர் போப் [1] என்பவர் ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்துள்ளனர்.

பாக்களிற் காணும் சுவைகளை மேனாட்டு ஆசிரியர் Satire, Humour, Pathos எனப் பல வகையாகப் பிரித்துள்ளனர். தமிழில் Satire என்பதனை 'அங்கதம்' என்றும், Humour என்பதனை 'நகைச்சுவை' என்றும், Pathos என்பதனை 'அவலச்சுவை,' யென்றும் வழங்குவர். ஆங்கிலத்தில் கூறும் Satire என்ற சுவையினைத் தொல்காப்பியர் கூறும் அங்கதம் என்பதனோடு ஒப்பிடலாம். இதனை எமது ஆசிரியப்பெருந்தகை மகாமகோபாத்தியாய, பண்டித மணி. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் "சங்க காலத்து அங்கதம்" என்ற கட்டுரையில் அழகாக விளக்கியுள்ளனர். அங்கதம் என்பது வசை. அதாவது ஒருவருடைய குற்றத்தினைக் குறிப்பினாலாவது வெளிப்படையாலாவது எடுத்துக் கூறுதல். அவ்வாறு கூறுங்கால் நகைச்சுவை தோன்றக் கூறுதல் இன்பம் பயப்பதாகும். "வசையொடும் நசையொடும் புணர்ந்தன்றாயின் அங்கதச் செய்யுளென்மனார் புலவர்"[2] என்ற நூற்பாவின் விசேடவுரையில் பேராசிரியர் "இல்லாதன சொல்லி நகைப் பொருட்டாகச் செய்யினும் அங்கதச் செய்யுள் எனப்படும்," என்பர். மாங்குடிகிழார் என்ற புலவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றிப் பாடும்போது

1. Dr. Pope. 2. தொல்-செய்யுளியல்: கடுக.

அவனது பகைவர்களின் வன்மையற்ற நிலையாகிய வசை யினை எடுத்துக் கூறுகின்றார்: "வேந்தே! செருக்கு மிக்க நின் பகைவர் உன்னோடு போர்செய்வதற்கு இயலாதவரா யினும், உனக்குப் பகைவர் என்ற பெயரினைப் பெற்றதா லும், நின்பால் போரில் தோற்றுத் தேவலோகம் சென்ற தாலும் அவர்கள் மிக்க தவஞ் செய்தவராவர்" எனப் புல வர் கூறுவதைக் காண்க.

"நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்ற ரென்னும் பெயர்பெற்
றாற்ற ராயினு மாண்டு[1]வாழ் வோரே."

(புறம் : உசு)

ஈண்டு, செருக்குற்றுப் போருக்கு வந்த பகைவரின் வன்மை யற்ற நிலையாகிய வசையினைக் கூறவந்த புலவர் "நோற்றோர் மன்ற" எனப் புகழ்வதுபோலப் பழித்தமை காண்க. புறநானூற்றில் "நீயே அமர்காணின்" (புறம்: கசுஎ), "இவ்வே, பீலியணிந்து" (புறம் : கூரு) என்ற இவ் விரு பாக்களும் அங்கதத்தினை விளக்கச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

நாவான் நுகரப்படும் அறுவகைச் சுவையினும் செவியான் நுகரப்படும் சொற்சுவை பொருட்சுவைகளே என்றும் இன்பம் பயப்பனவாய் விளங்குகின்றன. "நகையே அழுகை"[2] என்ற நூற்பாவில் ஆசிரியர் தொல்காப்பியனார் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை எனப் பொருட்சுவை எட்டுவகையாகும் என்பர். இவைகளை முறையே ஹாஸ்யம், சோகம், ஜுகுப்ஸை, விஸ்மயம், பயம், வீரம், ரௌத்ரம், சிருங்காரம் எனக் கூறுவர் வடநூலார். நாடக நூலாசிரியர் இந்த எட்டுவகைச் சுவையுடன் சமநிலை ஒன்றுகூட்டிச் சுவை ஒன்பதென்பர். சமநிலையினைத் தொல்காப்பியர் இந்த எட்டுடன் சேர்த்துக் கூறாமைக்குப் பேராசிரியர் கீழ்க்கண்ட காரணம் கூறுவர். "அதற்கு ஓர் விகார மின்மையின் ஈண்டுக் கூறியதிலன் என்பது; அதற்கு விகார

1. ஆண்டு - துறக்கம். 2. தொல் - மெய்ப்பாட்டியல் : ௩.

ழுண்டெனின் முன்னை எட்டனுள்ளுஞ் சார்த்திக் கொள்ளப்படும்; அல்லதூஉம், அஃதுலகியல் நீங்கினர் பெற்றியாகலின், ஈண்டு உலக வழக்கினுட் சொல்லிய தில னென்பது"[1]. ஆதலால் முதலில் கூறிய எட்டுவகைச் சுவையே காப்பியங்களில் பயின்று வருவனவாகும். இச் சுவைகளுக்கு எடுத்துக்காட்டாக, புறநானூற்றிலுள்ள ஒரு சில செய்யுட்களைக் காண்போம். கிணைப்பொருநன் ஒருவன் தன் சுற்றத்தாரோடு ஒரு வள்ளலிடம் செல்ல, அவ் வள்ளல் அவர்களுக்குச் சிறந்த அணிகலன்களை அளிக்க, அவர்கள் அவைகளை அணிந்துகொள்ளும் முறை தெரியாது, விரலில் அணிதற்குரிய அணிகலன்களைக் காதிலும், காதில் செறித்தற்குரியவைகளை விரலிலும் செறித்துக்கொண்டனர். இச் செய்கையினைப் புலவர், சீதையின் அணிகலன்களைக் கண்டெடுத்த குரங்குகள் அவைகளை அணிந்துகொள்ளும் முறை தெரியாது அணிந்துகொண்டமைக்கு ஒப்பிடுகின்றார்.

"விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
கடுந்தெறல் இராம னுடன்புணர் சீதையை

வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதர்[2]அணி கண்ட குரங்கின்

செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே." (புறம்:

ௗ.எஅ)

இச் செய்யுளில் பிறர் பேதைமை காரணமாகத் தோன்றும் நகைச்சுவை வந்துள்ளதைக் காண்க. முன்பு பிறிதோர் இடத்தில் காட்டிய மன்னைக்காஞ்சித் துறையில் வந்துள்ள "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே" என்ற செய்யுளினை இழவு காரணமாகத் தோன்றிய அழுகைச் சுவைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்க.

---

1. தொல். உரை. 2. மதர் - கதிர்த்த. மெய்ப் - ௬.



கௐகூ.

" கோல்கா லாகக் குறும்பல்[1] லொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பி[2]னள் கண்டுயின்று[3]
முன்றிற்[4] போகா முதிர்வினள் யாயும்." (புறம்: கருகூ)

இதில் மூப்புக்காரணமாகப் பிறந்த இளிவரல் சுவையினைக் காணலாம்.

" கிண்கிணி[5] களைந்தகால் ஒண்கழல் தொட்டு
..................................................
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி " (புறம்

: எஎ) என்பது சிறுமை காரணமாகப் உதாரணமாகும்.

பிறந்த மருட்கைக்கு

“அணங்குடை நெடுங்கோட்[6] டளையகம் முனைஇ
முணங்குநிமிர்[7] வயமான்”

என்ற வரிகளில் அணங்கும் விலங்கும் பிறத்தலைக் காண்கிறோம்.

பொருளாக அச்சம்

“தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி[8]கண் டஞ்சிச் சீரை[9] புக்க
வரையா ஈகை உரவோன் மருக” (புறம்: சக)

என்பதும்,

“உறுதுப்[10] பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை”
(புறம்: எஉ)

என்பதும் முறையே கொடையான் வந்த பெருமிதத்திற்கும், கொலையான் வந்த வெகுளிக்கும் உதாரணங்களாகும்.

---

1. குறும்பல – குறுகிய பல அடியிட்டு.
2. கதுப்பு – கூந்தல்.

3. துயின்று - மறைந்து.

4. முன்றில் - முற்றம். 5. கிண்கிணி - சதங்கை.

6. கோடு - உச்சி.

7. முணங்கு நிமிர்தல் - சோம்பல் முறித்தல்.

8. தீப்புதி - அழிவு. 9. சீரை - துலாம்.

10. துப்பு - வலிமை.

கக0 புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

புணர்ச்சிப் பொருளாகவும் விளையாட்டுப் பொருளாகவும் பிறக்கும் உவகைச் சுவைக்கு அடியிற் காணும் வரிகள் சிறந்த சான்றுகளாம் :

"கைம்மான்"[1] வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்

பார்வை[2] மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர்த்தொழிற் றனிக்கலை திளைத்துவிளை யாட
இன்புறு புணர்நிலை "[3] (புறம் : க உ0)

தமிழ் இலக்கியத்தில் அகப்பொருள்

நூல்களில்

காணக்கிடக்கும் உள்ளுறையுவமம் மிக்க இன்பம் பயப்ப தாகும். அகப்பொருள் நூல்களின் உரையாசிரியர், பாக் களிற ப்றபல ஓட்டஙகளிற காணும் தினையும் இறைச்சிப் பொருளினையும் இவைகள் வடமொழியாளர் கூறும்

உளளுறையுவமத விளக்கிச்செல்வர். 'தொனி' என்ப

தனை ஒத்துள்ளன என்பர்.[4] இவ் வுள்ளுறையுவமம் பெரும்பாலும் அகப்பொருளுக்கே உரியதாயினும் சிற்சில இடங்களில் இது புறப்பொருளினும் வரும். "தோழியும் செவிலியும்"[5] என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் விசேடவுரையில் "மற்றிவையெல்லாம் அகப்பொருட்கே உரியவாக விதந்தோதிய தென்னை? புறப்பொருட்கு வாரா தன போல வெனின், ஆண்டு வருதல் அரிதாகலின் இவ் வாறு அகத்திற்கே கூறினு னென்பது" எனப் பேரா சிரியர் கூறுதல் காண்க. புறநானூற்றின் முதல் 266

1. கைம்மான் - யானை.

2. பார்வை - பார்வை விலங்கு.

3. புணர்நிலை - புணர்ச்சி.

4. "இத் தொனிவகைக ளெல்லாம் அகப்பாட்டும் புறப் பாட்டுமாகிய சங்கமருவிய நூல்களிலும் பிற சான்றோர் செய்யுட் களிலும் இடையிடையே விரவிவரப்பெறுவன. இவை பெரும் பாலும் இறைச்சிப் பொருள்பற்றியும், திருப்பாவை, திருவிருத் தம், திருவாய்மொழி முதலிய திவ்வியப் பிரபந்தங்களில் ஸ்வாப தேசப் பொருள்பற்றியும் மற்றும் கவி கருதிய வேறு பல உள் ளுறை பொருள்ப்பற்றியும் வருவன" (செந்தமிழ் - தொகுதி 10, பக்கம் 266.)

5. தொல் - உவமவியல் : கூக.



செய்யுட்கே உரை கிடைத்துள்ளது. இதன் உரையாசிரி யர் இன்னார் எனத் தெரியவில்லை. இந் நூலின் உரையா சிரியர் பாக்களின் பொழிப்புரை, வினைமுடிபு, இலக் கணக் குறிப்பு முதலியன கூறுவதுடன் ஒருசில பாக் களின் மிக அருமையாகத் தோன்றும் குறிப்புப்பொருளை யும் எடுத்துக்காட்டி யுள்ளனர். பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை, கல்லாடனார் பாடிய பாட்டுள் இக் குறிப்புப்பொருள் காணக்கிடக் கின்றது.

" ஞால நெளிய ஈண்டிய வியன்படை
ஆலங் கானத் தமர்கடந் தட்ட

கால முன்பநிற் கண்டனென் வருவல்
அறுமருப் பெழிற்கலை[1] புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி[2] தழீஇய தெறிநடை மடப்பிணை

பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளி லத்த மாகிய காடே." (புறம்: உங)

"தலையாலங்கானத்தில் போர் வென்ற, காலன்போலும் வலியை யுடையோய்! யான் நின்னைக் கண்டேனாய் வந்தேன். ஆண்மான் புலியால் கொல்லப்பட, பெண்மான் தன்னுடைய குட்டியை அணைத்துக்கொண்டு வேளை என்ற பூவைத் தின்னும் அள்வற்ற அருஞ்சுரமாகிய காட்டுவழி," என்பது இதன் பொருள். இவ் வரிகளில் "கலை புலிப்பாற் பட்டெனச் சிறுமறி தழீஇய மடப்பிணை, பறந்தலை வேளை வெண்பூக் கறிக்கு மென்பது, அவன் பகைவரைக் கொன்ற வழி, அவர் பெண்டிர் தம் இளம் புதல்வரை ஓம்புதற் பொருட்டு இறந்துபடாது அடகுதின்று உயிர் வாழ்கின்ரு ரென்பதோர் பொருள் தோன்ற நின்றது," என உரையாசிரியர் கூறுவதைக் காண்க.

இதுகாறும் கூறியவற்ருல், இலக்கியத்தின் இலக்கணம் இன்னதென்பதும், அதனுள் அடங்கப்பெறும்

1. கலை - கலைமான். 2. மறி - குட்டி.

நூல்கள் யாவை என்பதும், இலக்கியப் பண்புகள் எவை என்பதும், புறநானூற்றில் காணும் செய்யுட்கள் அவ்வித இலக்கியப் பண்புகளுக்கு எம்முறையில் சான்றாக விளங்குகின்றன என்பதும், செய்யுளின் இலக்கணம் இன்னதென்பதும், ஆங்கில இலக்கியத்திற் காணும் செய்யுள் வகைக்கும் நந்தம் தமிழிலக்கியத்திற் காணும் செய்யுள் வகைக்கும் உள்ள ஒப்புமை இன்னதென்பதும், தொல்காப்பியங் கூறும் எண்வகைச் சுவைக்கும் புறநானூற்றில் எடுத்துக்காட்டுகள் உள்ளன என்பதும், புறநானூற்று உரையாசிரியர் சிற்சில பாக்களில் மிக அரிதாகக் காணும் குறிப்புப்பொருளை விளக்கியுள்ளனர் என்பதும் ஒருவாறு சுருக்கமாக விளக்கப்பட்டன. மேனாட்டு இலக்கியத்தில் செய்யுள், உரைநடை, நாடகம் ஆகிய ஒவ்வொரு பகுதிக்கும் பல ஆராய்ச்சி நூல்கள்[1] வெளிவந்துள்ளன. நந்தம் தமிழ் மொழியிலோவெனில் அத்தகைய நூல்கள் மிகச் சிலவே உள்ளன. ஆங்கில இலக்கியத்தின் பொதுத் தன்மையினையும் சிறப்புத் தன்மையினையும் விளக்க "An Introduction to Study of Literature" என்ற ஒரு நூல் W. H. Hudson என்பவரால் எழுதப்பட்டுள்ளது. Moultn என்பவர் "The modern study of Literature"

என்ற ஒரு நூல் வெளியிட்டுள்ளனர். இதுபோன்ற இலக்கியத்தின் சிறப்புத் தன்மையினை விளக்கும் ஆராய்ச்சி நூல் பல ஆங்கில மொழியில் எழுதப்பட்டுள்ளன. இனி, தமிழ் மொழியில் தமிழ் இலக்கியத்தின் ஆராய்ச்சியைப்பற்றிய நூல்கள் பல வெளிவருதல் வேண்டும். தமிழ் இலக்கியத்தின் சிறப்பினைப் பற்றி ஆங்கிலத்திலும் நூல்கள் வெளியிடல் வேண்டும். மேனாட்டார் பலர் தமிழிலுள்ள இலக்கியச் சுவையினை அறியாதிருக்கின்றனர். எனவே, தமிழ் நலம் அவாவிய தமிழ்ப் பேரறிஞர் தமிழ் இலக்கியத்தின் சிறப்பினைப் பற்றித் தமிழ்மொழியிலும் பிறமொழியிலும் நூல்கள் இயற்றித் தமிழன்னைக்குப் பல புதிய அணிகலன்கள் சூட்டி மகிழ்வாராக.

---

1. Literary Criticism.

# ரு. புறநானூறும் கல்வெட்டுக்களும்

[திருவாளர், டி. வி. சதாசிவ பண்டாரத்தார்]

## க. தோற்றுவாய்

புறநானூறு என்பது சங்கத்துச் சான்றோர் பலரால் இயற்றப்பெற்றுக் கடைச் சங்கத் திறுதிக் காலத்தில் தொகுக்கப்பட்ட எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகும். இஃது அறமும் பொருளும் நுதலிய புறத்திணைகளுக்குரிய துறைப்பொருள் அமைந்த நானூறு பாடல்களைத் தன்னகத்துக்கொண்டுள்ளமையின், 'புறநானூறு' என்னும் பெயர் எய்திற்று. இதனைப் 'புறப்பாட்டு' எனவும் 'புறம்' எனவும் வழங்குவதுண்டு. இந்நூலின் கடவுள் வாழ்த்து, பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பட்டது. மற்றப் பாடல்கள் முரஞ்சியூர் முடிநாகராயர் முதல் கோவூர் கிழார் இறுதியாகவுள்ள புலவர் பலரால் பாடப்பெற்றவை. இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் யாவர் என்பது தெரியவில்லை. இந்நூலிலுள்ள பாடல்கள் எல்லாம் அகவற்பாக்கள் ஆகும்.

மதுரைமா நகரிலிருந்த கடைச் சங்கத்தின் இறுதிக் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்பது அறிஞர்கள் ஆராய்ந்து கண்ட உண்மையாதலின், அக்காலப் பகுதியில் தொகுக்கப்பெற்ற புறநானூற்றிலுள்ள பாடல்களும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னர் இயற்றப் பெற்றவை என்பதில் ஐயமில்லை. இத்துணைத் தொன்மை வாய்ந்த இவ்வரிய நூல் நம் முன்னோர் வரலாறுகளையும் வழக்க ஒழுக்கங்களையும் நம்மனோர்க்கு நன்குணர்த்தும் ஒப்பற்ற கருவூலமாக அமைந்திருப்பது பெறற்கரும் பேறேயாம்.

பு. சொ.—8

பண்டைக் காலத்தில் இத் தமிழகத்தில் செங்கோ
லோச்சிய சேர
கள், குறுநில

சோழ பாண்டியராகிய முடியுடைவேந்தர்
மன்னர்கள், அமைச்சர், படைத்தலைவர்,

கடையெழுவள்ளல்கள், சங்கப் புலவர்கள்
வரலாறுகளையும், பண்டைத் தமிழ்

முதலானோர்
மக்களுடைய

கொள்கை, நாகரிகம், கல்வி, வீரம் முதலானவற்றையும் உணர்ந்துகொள்வதற்குப் புறநானூறு என்னும் இச் சீரிய நூல் ஒன்றே போதும் எனலாம். உண்மைத் தமிழராக வுள்ள ஒவ்வொருவரும் இந்நூல் ஒன்றையாவது கற்றல் வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

இனி, கல்வெட்டுக்கள் என்பன, கோயிற் சுவர்கள், கற்பாறைகள், மலைக்குகைகள், வெற்றித் தூண்கள், மண்டபங்கள், படிமங்கள், நடுகற்கள் முதலானவற்றில் வரையப் பெற்றிருக்கும் கல்லெழுத்துக்களேயாம். செப்பேடுகள் எல்லாம் கல்வெட்டுக்களின் படிகளே யாதலின் அவற்றையும் கல்வெட்டுக்கள் என்ற தலைப்பின்கீழ் ஈண்டு அடக்கிக் கொள்வது பொருந்தும். நம் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்கள் எல்லாம் நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியிலேயே உள்ளன. சிற்சில வடமொழிக் கல்வெட்டுக்களும் நம் நாட்டில் உண்டு. கல்வெட்டுக்களில் காணப்படுஞ் செய்திகள் எல்லாம் வெறுங் கற்பனைச் செய்திகள் அல்ல; பயனற்ற செய்திகளும் அல்ல. அவையனைத்தும் நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகளை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே. சேர சோழ பாண்டியராகிய முடியுடைத் தமிழ் வேந்தரும், பல்லவரும், குறுநில மன்னரும், பிற தலைவர்களும் புரிந்த அறச் செயல்களும், வீரச்செயல்களும், அன்னோர் செய்துகொண்ட உடன்படிக்கைகளும், அக்கால அரசியல் முறைகளும், போர் நிகழ்ச்சிகளும், பழைய புலவர்களைப் பற்றிய செய்திகளும், மண்டலம், வளநாடு, கோட்டம், நாடு, கூற்றம் என்பவற்றின் வரலாறுகளும், பல ஊர்களின் உண்மைப் பெயர்களும், முற்கால வழக்கங்களும், சமயநிலையும், மற்றும் பல அரிய நிகழ்ச்சிகளும் நம் நாட்டுக் கல்வெட்டுக்களாலும் செப்பேடுக

ளாலும் நன்கறியக் கிடக்கின்றன.

சுருங்கச் சொல்லு

மிடத்து, நம் நாட்டின் பழைய சரிதங்களை உள்ளவாறு உணர்ந்துகொள்வதற்குத் தக்க கருவிகளா யிருப்பன, கல்வெட்டுக்களும் செப்பேடுகளுமேயாம். ஆகவே, புறநானூறும் கல்வெட்டுக்களும் உணர்த்துவன, நம் தமிழகத்தின் பண்டை வரலாறுகளே என்பது இனிது விளங்குதல் காண்க.

இவற்றுள், புறநானூறு, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்னர் நிகழ்ந்த வரலாறுகளையே கூறும். நம் தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களோ கி. பி. ஆறும் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவை. எனவே, புறநானூறும் கல்வெட்டுக்களும் தம்முள் எங்ஙனம் இயையுடையனவாதல் கூடும் என்ற ஐயப்பாடு எவர்க்கும் நிகழ்தல் இயல்பே. ஆதலால், இதுபற்றிச் சில கூறி விளக்குவேன்.

இலக்கியச் செய்திகள் எல்லாம்

புனைந்துரை சிறிது

கலந்த நூல் வழக்கில் அமைந்தவை.

கல்வெட்டுச் செய்தி

கள் எல்லாம் புனைந்துரை கலவா உலக வழக்கில் அமைந்தவை. ஆதலால், வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கல்

வெட்டுக்களையே தக்க சான்றுகளாகக் கொண்டு ஆராய்ந்து உண்மை காண்பாராயினர். அன்னோர் இலக்கியங்களைச் சிறந்த சான்றுகளாக மதித்து ஏற்றுக்கொள்வதில்லை. இலக்கியச் செய்திகளுள் சில, புனைந்துரையாக இருத்தல் ஒப்புக்கொள்ளத் தக்கதேயாயினும், அவற்றை அத்துணை எளியனவாகக் கருதித் தள்ளிவிடுதல் எவ்வாற்றானும் ஏற்புடையதன்று. கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டனவாய்ப் புறநானூற்றில் காணப்படும் செய்திகள் செப்பேடுகளாலும் கல்வெட்டுக்களாலும் தாங்கப்பட்டு உறுதியெய்துகின்றன. அவற்றை ஏற்றுக்கொள்ளாமல் நாம் எங்ஙனம் தள்ளுதல் கூடும்? ஆகவே, செப்பேடுகளாலும் கல்வெட்டுக்களாலும் தாங்கப்படும் உண்மைச் செய்திகளைத் தன்னகத்துக்கொண்டு சங்க நூல்களின் சிறப்பிற்கும் மாசற்ற தன்மைக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவது புறநானூறு எனலாம்.



## உ. உறுதிப்பாடு

### புறநானூற்றுச் செய்திகளுள் கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் உறுதிப்படுவன :

1. புறநானூற்றில் காணப்படும் கடைச்சங்க காலத்துச் சோழ மன்னர்களான பெருநற்கிள்ளி, சோழன் கரிகாலன், சோழன் செங்கணான் என்போர், கி. பி. பதினொன்றும் நூற்றாண்டில் வரையப்பட்ட ஆனைமங்கலச் செப்பேடுகள்,[1] திருவாலங்காட்டுச் செப்பேடுகள்,[2] கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள்[3] என்பவற்றில் மிகச் சிறப்புடன் குறிக்கப்பட்டுள்ளனர்.

2. காரிகிழார், நெட்டிமையார், நெடும்பல்லியத்தனார் என்ற புலவர் பெருமக்களால் புறநானூற்றில் பாடப்பெற்றவனும், பல பகைஞர்களையும் வென்று மறக்கள வேள்விகள் புரிந்தவனும், வேண்டிய வேண்டியாங்கு புலவர்களுக்கும் இரவலர்களுக்கும் ஈந்த பெருங்கொடைவள்ளலும், சிவபெருமானிடத்தில் பெரிதும் ஈடுபாடுடையவனுமாகிய பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பான், கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வரையப்பெற்ற வேள்விக்குடிச் செப்பேடுகளில்,

"கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யெனும்பாண்டியாதிராசன்"

என்று பாராட்டப்பட்டிருப்பது உணரற்பாலது.

3. இம் முதுகுடுமி அரசர்க்குரிய பல வேள்விகள் செய்து சிறப்புற்றவன் என்பது, இவன் இயற்பெயருக்கு முன்னருள்ள 'பல் யாகசாலை' என்ற அடைமொழிகளாலும்,

1. Epigraphia Indica Vol. XXII, No. 84.
2. South Indian Inscriptions Vol. III, No. 205.
3. Travancore Archaeological Series Vol. III, Ins. No. 34.

புறநானூறும் கல்வெட்டுக்களும்

ககள

"அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்

ஏ

வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபநட்ட வியன்களம் பலகொல்"

என்ற கரு-ஆம் புறப்பாட்டடிகளாலும் நன்கறியக்கின்றது. இச் செய்தி,

கிடக்

"பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும்

பாண்டியாதி ராசனால் நாகமா மலைச்சோலை
நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்றமென்னும்
பழனக்கிடக்கை நீர்நாட்டுச் சொற்கணாளர்
சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாது கொற்கைகிழான்
நற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக் கேள்வியந்த

ளுர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து வேள்விச்சாலை
முன்புநின்று வேள்விக்குடியென் றப்பதியைச் சீரோடு
திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே நீரோட்டிக்
கொடுத்தமையால் நீடுபுக்தி துய்த்தபின்'

என்ற வேள்விக்குடிச் செப்பேட்டுப் பகுதியினல் வலி யுறுதல் காண்க.

4. இனி, கடைச்சங்க நாளில் விளங்கிய பாண்டியன் நெடுஞ்செழியன் என்பவன், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்ற பேரரசர் இருவரையும் குறுநில மன்னர் ஐவரையும் தலையாலங்கானத்தில் வென்ற செய்தி, புறப்பாட்டுக்களால் உணரப்படுகின்றது.[1] இப் போர் நிகழ்ச்சி கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வரையப்பட்ட சின்னமனூர்ச் செப்பேட்டில்,[2]

"தலையாலங் கானத்திற் றன்னொக்கு மிருவேந்தரைக்
கொலைவாளிற் றலைதுமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்"

என்று சொல்லப்பட்டிருத்தல் காண்க.

---

1. புறம். ௧௯, ௨௩.
2. South Indian Inscriptions Vol. III. No. 206.

5. மேற்குறித்த சின்னமனூர்ச் செப்பேடுகளில் காணப்படும் 'மாபாரதந் தமிழ்ப் படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்ற தொடர்களில் பாண்டியரின் அருஞ்செயல்கள் இரண்டு கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள், பாண்டியன் ஒருவன், கடைச்சங்க நாளில் மாபாரதத்தை நம் தமிழ்மொழியில் செய்யுட்களாகப் பாடுவித்தமை ஒன்று. அப் பாண்டியன் வேண்டுகோளின்படி மாபாரதத்தைத் தமிழில் பாடியவர் புறநானூற்றின் முதற் பாடலான கடவுள் வாழ்த்து இயற்றிய பெருந்தேவனார் ஆவர். அதுபற்றி அவ் வாசிரியர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று அந்நாளில் வழங்கப்பெற்றனர் என்பது பலரும் அறிந்ததே.

மற்றொன்று, பாண்டியர்கள் மதுரைமாநகரில் தமிழ்ச் சங்கம் நிறுவிப் புலவர்களைப் போற்றி வந்தமையேயாம். இச் செய்தியைப் புறநானூறு முதலான தொகைநூல்களால் நன்குணரலாம்.

6.

" வடதிசை யதுவே வான்றோய் இமயம்
தென்றிசை ஆஅய் குடியின் றாயிற்
பிறழ்வது
மன்னோவிம் மலர்தலை யுலகே " (புறம்: ௧௩௨)

என்று புறப்பாட்டில் புகழப்பட்டவனும் கடையெழு வள்ளல்களுள் ஒருவனும் ஆகிய வேள் ஆய் என்பான் பொதியில் மலையைச் சார்ந்த வேணாட்டை ஆட்சிபுரிந்த குறுநில மன்னன் என்பதைப் புறநானூற்றுப் பாடல்களால் அறியலாம். பாண்டிநாட்டிற்குத் தென்மேற்கில் பேரியாற்றுக்கும் குமரி முனைக்கும் இடைப்பட்ட திருவாங்கூர் இராச்சியத்தின் தென்பகுதிக்கு முற்காலத்தில் 'வேணாடு' என்ற பெயர் இருந்தது என்பது பல கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது. வேள் ஆயின் மரபினர் கி. பி. ஏழு எட்டாம் நூற்றாண்டுகளிலும் அங்கு அரசாண்டனர் என்பதும் அன்னோர் கோச்சடையன் ரணதீரன் அவன் பேரன் நெடுஞ்சடையன் பராந்தகன் என்ற பாண்டி வேந்தர்களால் வென்று அடக்கப்பட்டனர் என்பதும்





வேள்விக்குடிச்
செய்திகளை,

செப்பேடுகளால் அறியப்படுகின்றன. இச்

"பொருதாருங் கடற்றானையை மருதாருள்

மாண்பழித்து
ஆய்வேளை யகப்படவே யென்னுமை யெறிந்தழித்து"
எனவும்,

"தீவாய அயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையும் அடலமருள்
அழித்தோட்டி"

எனவும் போதரும் வேள்விக்குடிச்
களால் உணர்க.

செப்பேட்டுப் பகுதி

7. கடையெழுவள்ளல்களுள் ஒருவனும், உண்டோர் நெடுங்காலம் உயிர்வாழ்ந்திருப்பதற்கு ஏதுவான கருநெல்லிப்பழம் ஒன்றை ஔவையாருக்கு அளித்தவனும்,

"ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்

பலநாள் பயின்று பலரொடு செல்லினும்

தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ" (புறம் : க0க)

என்று ஔவையாரால் மனமுருகிப் பாராட்டப் பெற்றவனும் ஆகிய அதியமான் நெடுமானஞ்சி என்பான் கொங்கு மண்டலத்தில் தகடூரிலிருந்து அரசாண்ட ஒரு குறுநில மன்னன் என்பது புறநானூற்றால் அறியப்படுவதொன்று.

வடஆர்க்காடு கோட்டத்(சில்லா)தில் போளூருக் கணித்தாகவுள்ள திருமலையில் காணப்படும் கல்வெட்டொன்று அதியமான் நெடுமானஞ்சியைக் குறிப்பிடுகின்றது. செய்யுள் வடிவத்தில் உள்ள அக் கல்வெட்டு,

"வஞ்சியர் குலபதி யெழினி வகுத்த வியக்க ரியக்கியரோ

டெஞ்சியவழிவு திருத்தி யெண்குண விறைவனை
மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவரு மவன்முத லிகலதிகன் வகனநூல் (?)

விஞ்சயர் தகைமையர் காவலன் விடுகாதழகிய பெருமாளே
”

என்பது.

இதில் புறநானூற்றில் வந்துள்ள எழினி, அஞ்சி என்ற அரசர் பெயர்கள் பயின்று வருவதோடு அன்னோர்



வஞ்சியர் குலபதி என்று குறிப்பிடப்பட்டிருப்பதும் அறியற்பாலதாகும். இதில் கூறப்படும் விடுகாதழகிய பெருமாள் என்பவன் அதியமான் நெடுமானஞ்சியின் வழித்தோன்றல் என்பதும் கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டிலிருந்த ஒரு குறுநில மன்னன் என்பதும் ஈண்டு உணரத் தக்கன. வஞ்சியர் குலபதி என்பது வஞ்சிமா நகரத்தில் வீற்றிருந்து அரசாண்ட சேரமன்னனைக் குறிக்கும் தொடராகும்.

8. 'அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்' என்று தொடங்கும் ௯௯-ஆம் புறப்பாட்டில் அதியமான் நெடுமானஞ்சிக்குரிய அடையாள மாலையாகப் பனந்தார் கூறப்பட்டுளது. அப் பாடலின் விசேடவுரையில் 'இவனுக்குப் பனந்தார் கூறியது உதியவேந்தாதலின்' என்று உரையாசிரியர் விளக்கியுள்ளனர். இச் செய்தி, திருமலையிலுள்ள 'சேரவம்சத்து அதிகமான் எழினி செய்த தர்மம்'[1] என்ற மற்றொரு கல்வெட்டால் வலியுறுகின்றது. எனவே மழவர் தலைவர்களான அதியமான், எழினி என்போர் சேரரின் மற்றொரு கிளையினர் என்பது பெறப்படுதல் காண்க.

9. இனி, கடைச்சங்க நாளில் வேள் நன்னன் என்ற குறுநில மன்னன் ஒருவன் இருந்தனன் என்பது ௧௫௪-ஆம் புறப்பாட்டால் அறியப்படுகின்றது. இவன் பல்குன்றக் கோட்டத்திலுள்ள செங்கைமா[2]விலிருந்து அரசாண்டவன்; இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்ற புலவர் பெருமானால் பாடப்பட்ட மலைபடுகடாம் என்ற நூல்கொண்டு புகழ் கொண்டவன். திருவண்ணமலைக்கு மேற்றிசையிலுள்ள செங்கைமா என்பது இவன் தலைநகர். இஃது இந்நாளில் செங்கம் எனவும் செங்கமா எனவும் வழங்குகின்றது. இந்நகர்க்கு அண்மையில் தான் இவனது நவிரமலை உளது.

---

1. South Indian Inscriptions Vol. I. No. 75.
2. இவ் ஊரின் பெயர் செங்கைமா என்பது கல்வெட்டுக்களால் புலப்படுகிறது. (S. I. I. Vol. VII. Nos. 11, 126) செங்கண்மா என்று கூறுவது தவறு.

திருவண்ணமலையி லுள்ளதும் அகவற்பா வடிவத்தில் அமைந்ததும் கி. பி. பதின்மூன்றும் நூற்றண்டில் வரையப்பெற்றதுமாகிய கல்வெட்டொன்று[1],

"நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பில்
வெல்புக ழனைத்தும் மேம்படத் தங்கோன்
வாகையுங் குரங்கும் விசையமுந் தீட்டிய
அடல்புனை நெடுவேல் ஆட்கொண்ட தேவன்" என்று கூறுகின்றது.

இக் கல்வெட்டிலுள்ள 'நல்லிசைக் கடாம்புனை நன்னன் வெற்பு' என்ற பகுதி, புறநானூற்றில் வந்துள்ள நன்னனையும் அவன்மீது பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனரால் பாடப்பட்ட மலைபடுகடாம் என்ற நூலையும் அவனது வெற்பினையும் குறிப்பிடுதல் காண்க.

10. "பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த"

(புறம்: உ00)

பெருங்கொடை வள்ளலாகிய வேள்பாரியின் வரலாற்றை யுணர்த்தும் பாடல்களைப் புறநானூற்றில் காணலாம். பாண்டி மண்டலத்தில் திருப்புத்தூர்ப் பக்கத்தில் பாரீச்சுரம் என்ற கோயில் ஒன்று இருந்தது என்பது பிரான்மலையிலுள்ள மங்கைபாகரது கோயிலில் காணப்படும் 'சுரபிநாட்டு அறுநூற்றவனேரிப்பற்றில் பாரீசுவரமும்'[2] என்ற கல்வெட்டுப் பகுதியினால் அறியக் கிடக்கின்றது. பாரி எடுப்பித்து வழிபாடு புரிந்த கோயில் பாரீசுவரம் ஆகும். அக் கோயிலைத் தன்னகத்துக்கொண்ட ஊரும் பிரான்மலையே என்பது ஈண்டு உணரற்பாலது. இப் பாரீசுவரம், பிரான்மலையின் அடிவாரத்திலுள்ள மற்றொரு கோயிலாகும். எனவே, பெருங்கொடை வள்ள

1. South Indian Inscriptions Vol. VIII, No. 69.
2. South Indian Inscriptions Vol. VIII, Nos. 427, 423 and 435.



லாகிய வேள்பாரி அமைத்த கோயிலொன்று கல்வெட்டுக்
களால் புலப்படுதல் காண்க,

11.
பாரியும்

இனி, கடைச்சங்கப் புலவராகிய கபிலரும் வேள் இன்னுயிர்த் தோழர்களாக வாழ்ந்து வந்தனர் என்பது புறநானூற்றால் அறியப்படுகின்றது. கபிலர் பிறந்த ஊர், மணிவாசகப் பெருமான் தோன்றியருளிய பாண்டிநாட்டுத் திருவாதவூரேயாம் என்பது பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்தால் உணரப்படுகின்றது. 'தென்பரம்பு நாட்டுத் திருவாதவூர்" என்று ஒரு கல்வெட்டு கூறுவதால் இத் திருவாதவூர் வேள்பாரியின் ஆட்சிக்குட்பட்ட பறம்புநாட்டில் இருந்தது என்பது வெளியாகின்றது. எனவே, புலவராகிய கபிலரும் புரவலராகிய வேள்பாரியும் ஒரே நாட்டினர் ஆவர். ஆகவே, அன்னோர் இருவரும் ஒரே தேயத்தினராகவும் ஒத்த உணர்ச்சியுடையவராகவும் இருந்தமையின் நட்பிற் சிறந்து விளங்கினர் என்பது தெள்ளிது.

12. மூவேந்தர் சூழ்ச்சியினால் பாரி இறந்த பின்னர் அவன் மகளிரைத் தக்கார்க்கு மணஞ்செய்விக்க விரும்பி அழைத்துச் சென்ற புலவர் பெருமானாகிய கபிலர், விச்சிக்கோன், இருங்கோவேள் என்பவர்களை மணம் புரிந்து கொள்ளுமாறு வேண்ட, அவர்கள் மறுக்கவே, அம்மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து, பிறகு பாரியின் பிரிவுக் காற்றாது வடக்கிருந்து உயிர்நீத்தனர் என்பது புறநானூற்றில் கண்ட வரலாறாகும். இச் செய்திகளைத் திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலிலுள்ள கல்வெட்டொன்று[2] சிறிது வேறுபடக் கூறுகின்றது. முதல் இராசராச சோழன் ஆட்சியில் கி. பி. 1012-ல் வரையப்பெற்றதும், அகவற்பாவில் அமைந்ததுமாகிய அக் கல்வெட்டில் பாரி மகளிரையும் கபிலரையும் பற்றிக் கூறும் பகுதி அடியில் வருமாறு :—

1. South Indian Inscriptions Vol. VIII, No. 423.
2. Do VII, No. 863.



‘ வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரிதன் னடைக்கலப்

பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை

அலைபுனலழுவத் தந்தரிட் சஞ்செல

மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்

கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர்

பேரெட்டான வீரட்டானம்

அனைத்தினு மநாதி யானது'

இதனால், முத்தமிழ்ப் புலவராகிய கபிலர், பாரிமகளிருள் ஒரு பெண்ணைத் திருக்கோவலூர் மலையமானுக்கு மணஞ் செய்து கொடுத்தனர் என்பதும் பிறகு அந்நகரில் பெண்ணை யாற்றங்கரையில் தீப்பாய்ந்து உயிர் துறந்தனர் என்பதும் அவரை நினைவுகூர்தற்கு அங்கு ஒரு கல் நடப்பெற்றது என்பதும் அது 'கபிலக் கல்' என்று வழங்கப்பட்டு வந்தது என்பதும் நன்கு வெளியாதல் காண்க. கடைச்சங்ககாளில் நிகழ்ந்த இவ்வரலாறு கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டொன்றில் இவ்வாறு குறிக்கப்பட்டிருப்பது அறியற்பாலதாகும். கபிலர், பாரிமகளிர் இருவருள் ஒரு பெண்ணை மலையமானுக்குத் தாமே வாழ்க்கைப் படுத்திய பிறகு மற்றொரு பெண்ணைத் தமக்கு வேண்டிய பார்ப்பாரது பாதுகாவலில் வைத்துவிட்டு உயிர் துறந்திருத்தல் வேண்டும் என்பது புறநானூற்றையும் இக்கல்வெட்டையுங் கொண்டு உய்த்துணரப்படுகின்றது.

புறநானூற்றுச் செய்திகளுள் கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் உறுதி யெய்துவன இதுகாறும் விளக்கப்பட்டன.

 புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

## ௩. பழந்தமிழ் நாடுகள்

### புறநானூற்றில் காணப்படும் நாடுகளைப்பற்றிக் கல்வெட்டுக்களால் அறியப்பெறுவன:

1. கோநாடு: இது புறநானூற்றிலுள்ள ருச, சுக, கசுள முதலான பாடல்களைப் பாடிய மாடலன் மதுரைக் குமரனரது நாடாகும். இது பாண்டிமண்டலத்திற்கும் சோழமண்டலத்திற்கும் நடுவில் அமைந்திருந்த சிறுநாடு. 'இக்கோனாடு இருபத்து நாற்காத வட்டகையும்'[1] என்று கூறும் கல்வெட்டொன்றால் இந்நாட்டின் சுற்றளவை ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம். சோழமன்னர் ஆட்சிக் காலங்களில் இந்நாடு 'கடலடையா திலங்கை கொண்ட சோழவளநாடு' என்று வழங்கிவந்தது என்பது கல்வெட்டுக்களால் புலப்படுகின்றது[2]. இந்நாட்டில் ஒல்லையூர்க் கூற்றம், அண்ணல்வாயில் கூற்றம், உறத்தூர்க் கூற்றம், கூடலூர் நாடு என்ற உள்நாடுகள் இருந்தன என்று சில கல்வெட்டுக்கள்[3] உணர்த்துகின்றன. கொடும்பாளூர் என்பது இந்நாட்டின் தலைநகரமாகும். புதுக்கோட்டை இராச்சியத்திலுள்ள திருமெய்யம் குளத்தூர்த் தாலூகாக்களில் இக்கோனாடு இருத்தல் அறியத்தக்கது.

2. ஒல்லையூர் நாடு:

'ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே' (புறம்: உசஉ)

என்ற புறப்பாட்டில் இந்நாடு கூறப்படுகின்றது. திரு மெய்யந் தாலுகாவிலுள்ள ஒலியமங்கலம் என்ற ஊர் முற்காலத்தில் ஒல்லையூர் மங்கலம் என்ற பெயருடையதா யிருந்தது என்பது அவ் வூரிலுள்ள வரகுணீசுவரர் கோயிற் கல்வெட்டால் தெரிகிறது; அக் கல்வெட்டு, 'கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழவளநாட்டு ஒல்லை

1. Inscriptions of the Pudukkottai State, No. 285.
2. Do Nos. 166, 169 and 185.
3. Do Nos. 301, 342, 358 & 382.



யூர்க் கூற்றத்து ஒல்லையூர் மங்கலத்து உடையார் வரகு ணீசுவர முடைய நாயனார் கோயில்[1]' என்று கூறுகின்றது. எனவே, ஒல்லையூர் மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டது ஒல்லையூர்க் கூற்றமாகும். இக் கூற்றமே சங்கநாளில் ஒல்லை யூர் நாடென்று வழங்கியதாகும். கோனாட்டிலிருந்த இவ் வுள்நாடு திருமெய்யந் தாலுகாவில் உளது.

3. பறம்பு நாடு :—இது வேள்பாரி அரசாண்ட நாடு. 'முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு'[2] என்ற புறப்பாட் டடி யொன்றால் இது முந்நூறு ஊர்களைத் தன்னகத்துக் கொண்ட நாடு என்று தெரிகிறது. இது, தென்பறம்பு நாடு வடபறம்பு நாடு என்ற இரு பிரிவுகளை யுடையதாக அந்நாளில் இருந்தது என்பது கல்வெட்டுக்களால் புலப்

படுகிறது.[3] இதன் தலைநகர், பறம்பு எனப்படும். இஃது இந்நாளில் பிரான்மலை என்று வழங்குகின்றது. இதன் பழைய பெயர் கொடுங்குன்றம் என்பது. பறம்பு என்னும் மொழி, மலை என்று பொருள்படுதலால் பிற்காலத்தில் பறம்புநாடு திருமலைநாடு எனவும் வழங்கப்பெற்றுளது. இதனைத் 'திருமலை நாட்டுத் திருக்கொடுங் குன்றத்து நாயனார் நல்ல மங்கை பாகற்கு'[4] என்னும் பிரான்மலைக் கல்வெட்டுப் பகுதியினால் நன்கறியலாம். வேள் பாரியின் தலைநகராகிய பறம்பு இந்நாளில் பிரான்மலை என்ற பெயருடன், இராமநாதபுரம் ஜில்லாவில் திருப்புத்தூர்த் தாலூகாவிலும், தென்பறம்பு நாட்டுத் திருவாதவூர் மதுரை ஜில்லாவில் மேலூர்த் தாலூகாவிலும் இருத்தலால் பறம்பு நாடு அவ்விரு தாலூகாக்களிலும் இருந்திருத்தல் வேண்டும் என்பது திண்ணம்.

**4. மிழலைக் கூற்றம் :** இது வேள் எவ்விக்குரிய தாய்க் கடற்கரையைச் சார்ந்திருந்த நாடு என்பது உசு-ஆம்

---

1. Inscriptions of the Pudukkottai State, No. 345.
2. *புறம்* 110.

3. South Indian Inscriptions Vol. VIII, No. 423; ns. No. 17 of 1931-32.

4. Epigraphia Indica Vol. XXI No. 19.

புறப்பாட்டால் அறியப்படுகிறது. 'பாண்டிமண்டலத்து மிழலைக் கூற்றத்து ஒக்கூர்'[1] எனவும், 'மிழலைக் கூற்றத்து மணமேற்குடி'[2] எனவும், 'மிழலைக் கூற்றத்துக் கீழ்க் கூற்றுப் பொன்பற்றி'[3] எனவும், 'மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றுப் புல்லுக்குடி'[4] எனவும் கல்வெட்டுக்களில் வரும் தொடர்களால் இக் கூற்றம் பாண்டிமண்டலத்தில் இருந்தது என்பதும் இதில் கீழ்க்கூறு, நடுவிற்கூறு, மேற் கூறு என்ற மூன்று உட்பிரிவுகள் இருந்தன என்பதும் நன்கறியக் கிடக்கின்றன. இக் கூற்றத்திலுள்ள மணமேற் குடி பொன்பற்றி முதலான ஊர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் அறந்தாங்கித் தாலுகாவிலும், பராந்தக நல்லூர் வாளவர் மாணிக்கம் முதலான ஊர்கள் புதுக்கோட்டை இராச்சி யத்தில் திருமெய்யந் தாலுகாவிலும் இருத்தலால் இம் மிழலைக் கூற்றம் அத் தாலுகாக்களில் இருந்தது என்பது தேற்றம்.

இனி, சிவனடியார் அறுபத்துமூவருள் ஒருவரும் நெல்வேலி வென்ற நின்ற சீர்நெடுமாறனார்க்கு அமைச்சரும் ஆகிய குலச்சிறை நாயனாரது மணமேற்குடியும் வீர சோழியத்தின் ஆசிரியராகிய புத்தமித்திரனாரது பொன் பற்றியும் மேற்கூறிய மிழலைக் கூற்றத்தூர்களேயாம்.

**5. முத்தூற்றுக் கூற்றம்:** இது முத்தூர்க் கூற்றம் என்றும் வழங்கப்படுவதுண்டு. உ௪-ஆம் புறப்பாட்டால் இது பழைய வேளிர்க்குரிய தென்பதும் நெல்விளைவிற் சிறந்தது என்பதும் இனிது புலப்படுகின்றன. 'பாண்டி மண்டலத்து முத்தூற்றுக் கூற்றம்'[5] என்றும், 'முத்தூற் றுக் கூற்றத்துப் பொய்கைநல்லூர்'[6] என்றும், 'முத்தூற்

1. South Indian Inscriptions Vol. VIII. No. 247.

2. ,, ,, ,,
448.
3. ,, ,, ,,
IV. No. 372.
4. ,, ,, ,,

5. ,, ,, ,,
VII. No. 429.
6.

,, ,, ,, No. 1042.



றுக் கூற்றத்துத் திருப்புனவாயில்'[1] என்றும், 'முத்தூற்றுக் கூற்றத்துத் தித்தானம்'[2] என்றும் கல்வெட்டுக்கள் கூறுவதால், முத்தூற்றுக் கூற்றம் அவ் வூர்களைத் தன்னகத்துக்கொண்டு பாண்டிமண்டலத்திலிருந்த ஓர் உள் நாடு என்பது பெறப்படுகின்றது. அவ் வூர்களுள் திருப்புனவாயிலும் பொய்கைநல்லூரும் தஞ்சாவூர் ஜில்லாவில் அறந்தாங்கித் தாலூகாவிலும், தித்தாண்டதானபுரம் வழங்கும் தித்தானம் இராமநாதபுரம் ஜில்லாவில்

என்று
திருவா

டானைத் தாலூகாவிலும் இருத்தலால் இக் கூற்றம் அறந்தாங்கி திருவாடானை தாலூகாக்களில் இருந்திருத்தல் வேண்டும் என்பது ஒருதலை.

## ௬.

# பழந்தமிழ் ஊர்கள் சில

## புறநானூற்றில் காணப்படும் ஊர்களுள் கல்வெட்டுக்களால் விளக்கமுறுவன:

இனி, புறநானூற்றில் காணப்படும் ஊர்களுள் தெரியாதனவும் வேறு பெயர்களால் வழங்குவனவும் உள. அவற்றுள், கல்வெட்டுக்களின் துணைகொண்டு அறியப்பெறும் ஊர்களுள் சிலவற்றை விளக்குவேன்.

1. ஒல்லையூர்: (புறம்: எக) இது புதுக்கோட்டை இராச்சியத்தில் திருமெய்யம் தாலூகாவில் ஒலியமங்கலம் என்ற பெயருடன் இக்காலத்தில் உளது என்பது ஒல்லையூர்க் கூற்றம் என்ற பகுதியில் முன்னர் விளக்கப்பட்டது.

2. அழும்பில்: (புறம்: உ அ௩) இது புதுக்கோட்டை இராச்சியத்தில் ஆலங்குடி தாலூகாவில் அம்பு கோவில் என்ற பெயருடன் இந்நாளில் உளது. இச் செய்தி, அவ்வூர்க் கோயிலிலுள்ள 'ராஜராஜ வளநாட்டுப் பன்றியூர் நாட்டு அழிம்பில் நாயனார் வீரராஜேந்திர சோழீசுவர

1. South Indian Inscriptions Vol. VIII. No. 210, 213.

2.

Ins. No. 599 of 1826-27.



ஸ்ரீடைய நாயனார்க்கு'[1]
அறியப்படுகின்றது.
என்ற கல்வெட்டுப் பகுதியினால்

3. பிடவூர்: (புறம்: ௩௯௫) 'நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்'[2] என்று புறப்பாட்டில் குறிப்பிடப் பெற்ற இவ்வூர், சோழநாட்டு வைப்புத் தலங்களுள் ஒன்று. சேரமான் பெருமாள் நாயனார் பாடிய திருக்கயிலாய ஞான உலா என்னும் நூல் இவ்வூரில் மாசாத்தனால் முதலில் வெளியிடப்பட்டது என்பர் சேக்கிழாரடிகள். திருச்சிராப் பள்ளி ஜில்லாவில் முசிறி தாலூகாவிலுள்ள திருப்பட்டூர் என்பது முற்காலத்தில் திருப்பிடவூர் என்ற பெயருடையதா யிருந்தது என்பது இவ்வூர்க் கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டால் புலப்படுகிறது.[3] எனவே இத் திருப் பட்டூரே சங்ககாலத்துப் பிடவூராதல் வேண்டும் என்பது நன்கு துணியப்படும்.

4. மாறோக்கம்: இது, நப்பசலையார் என்ற நல்லிசைப் புலமை நங்கையரின் ஊராகும். இவருடைய பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. தொல்காப்பியச் சொல்லதிகாரத்துப் பெயரியல் கo-ஆம் சூத்திரத்தின் விசேடவுரையில் ஆசிரியர் சேனாவரையர் "புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளை மாறோக்கத்தார் இக்காலத்துப் பெண்மகன் என்று வழங்குப" என்று கூறியுள்ளனர். மாறோக்கம் என்பது கொற்கையைச் சூழ்ந்த நாடு என்பர் அதன் பதிப்பாசிரியர். எனவே, மாறோக்கம், என்றது மாறோக்கம் என்னும் நாட்டின் தலைநகராய்த் தென்பாண்டி நாட்டில் கொற்கைப் பக்கத்தில் இருந்ததோர் ஊராதல் வேண்டும். ஆனால் மாறோக்கம் என்ற நாடு ஒன்றிருந்தது என்பதைக் கல்வெட்டுக்களின் துணைகொண்டு அறிய இயலவில்லை. கொற்கையைச் சூழ்ந்த நாட்டைக் குட நாடு என்றே கல்வெட்டுக்கள் குறிப்பிடு

1. Inscriptions of the Pudukkottai State Nos. 369 and 458.
2. புறம். 395.
3. Ins. No. 591 of 1907-08.



சின்

கின்றன. குடநாடே முற்காலத்தில் மாறோக்க நாடு என்று வழங்கியதோ என்ற ஐயம் நிகழ்கின்றது.

**5. பூங்குன்றம்:** படிக்குந்தோறும் மிக்க இன்பத்தை விளைவிக்கும் இயல்புவாய்ந்த 'யாதுமூரே யாவருங் கேளிர்' என்ற கசுஉ-ஆம் புறப்பாட்டை இயற்றிய புலவர்பெருமான் இவ்வூரினர் ஆவர். இது பாண்டிமண்டலத்தின் உள்நாடுகளில் ஒன்றாகிய பூங்குன்ற நாட்டிற்குத் தலைநகர் என்பது 'பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமும்'[1] என்ற கல்வெட்டுப் பகுதியினால் பெறப்படுகிறது. இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூர் தாலூகாவிலுள்ளதும் இருபெருமொழியினும் நுண்மாணுழைபுலம் படைத்த புலவர் பெருமானாகிய மகாமகோபாத்தியாய - பண்டிதமணி அவர்கள் தோன்றியதுமாகிய மகிபாலன் பட்டியே இப்பூங்குன்றம் என்பது அங்குள்ள குகைக் கோயிலில் காணப்படும் கல்வெட்டொன்றால் புலப்படுகிறது. அது,

'ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடைய வர்மரான திரிபுவனச் சக்ரவர்த்திகள் எம்மண்டலமுங் கொண்டருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு கO-ஆவது சிங்க நாயிற்று அமரபக்ஷமும் துதியையும் திங்கட்கிழமையும் பெற்ற பூரட்டாதி நாள் உடையார் குலசேகர ஈஸ்வரமுடைய நாயனார் தேவதானம் பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றத் துடையார் திருப்பூங்குன்றமுடைய நாயனார் ஆதி சண்டேசுவர நாயனார்க்கு இந் நாட்டு நாட்டவரோம் பிரமாணம் பண்ணிக் கொடுத்த பரிசாவது' என்பதாம்.[2]

**6. வஞ்சிமாநகர்:** இது சேரர் தலைநகர்; சேர நாட்

டில் தண்பொருநை ஆற்றங்கரையில் உள்ளது. தாரா
புரத்திற்கும் கொங்கு நாட்டுக் கருவூர்க்கும் வஞ்சி என்ற
பெயருண்டு என்பது [3]கல்வெட்டுக்களால் தெரிகிறது.
திருவனந்தபுரத்துக்கு அண்மையிலும் ஒரு வஞ்சியூர்
உளது என்பது அப்பக்கத்துக் கல்வெட்டால் அறியப்

1. Inscriptions of the Pudukkottai State No. 588.
2. கலைமகள்-தொகுதி 3, பக்கங்கள்: 226-27.
3. S.I.I. Vol, VIII, No. 441; Ep. Indi, Vol. XVII, p. 298.





படுகிறது. சேரநாட்டுக் கொடுங்கோளூரே வஞ்சி என்று
வழங்கிற்று என்பது சேக்கிழாரடிகளும் அடியார்க்கு நல்லாரும் கூறுவனவற்றால் புலனாகின்றது. எனவே, வஞ்சி என்ற பெயருடன் நான்கு ஊர்கள் இருந்தமை அறியத் தக்கது. இச் செய்தி, 'வஞ்சிநகர் நாலும் வளமையா ஆண்டருளும்,
'நாலு வஞ்சி

கஞ்சமலர்க் கையுடையான் காண்' எனவும்
சேரப்படைத்த சேரமான் பெருமாள்'

எனவும் போதரும் செப்பேட்டுப் பகுதிகளாலும் யெய்துகின்றது (தமிழ்ப் பொழில், துணர் எ,

உறுதி

பக்கம்:
(ருஎசு). இவற்றுள், புறநானூற்றிலுள்ள வஞ்சி
யாதென

ஆராய்தல் வேண்டும். செங்குட்டுவன் முதலான கடைச் சங்க காலத்துச் சேரர்கள் வீற்றிருந்து அரசாண்டதும் தண்பொருநை ஆற்றங்கரையிலுள்ளதும் ஆகிய வஞ்சியே புறநானூற்றில் காணப்படுவது. வஞ்சி என்று பிற்காலத்தில் வழங்கிய கொங்குநாட்டுக் கருவூர் ஆன்பொருநை ஆற்றங்கரையில் உள்ளது. தண்பொருநையும் ஆன்பொருநையும் இருவேறு ஆறுகளாகும். இவ் வுண்மையை, 'யாறுங் குளனும்' என்று தொடங்கும் தொல்காப்பியம் கற்பியற் சூத்திரத்திற்குக் 'காவிரியும் தண்பொருநையும் ஆன்பொருநையும் வையையும் போலும் யாற்றிலும்' என்று நச்சினர்க்கினியர் எழுதியுள்ள உரைப்பகுதியால் நன்குணரலாம். புறநானூற்றுரையாசிரியர் இவ்விரண்டு ஆறுகளையும் ஒன்றெனமயங்கி உரைகண்டமையின், கொங்கு நாட்டுக் கருவூரே சங்ககாலத்து வஞ்சி என்று சிலர் கூறுவாராயினர். வஞ்சி குடமலைநாட்டில் உள்ளது; கருவூர் கொங்குநாட்டில் உள்ளது. வஞ்சி தண்பொருநை யாற்றங்கரையில் உள்ளது; (புறம்: கக, நஅஎ) கருவூர் ஆன்பொருநை யாற்றங்கரையில் உள்ளது. (அகம். கூங) வஞ்சி கடற்கரைப் பட்டினம் (சிலப்பதிகாரம், கால்கோட்காதை அ௦, அக); கருவூர் உள்நாட்டிலுள்ளதோர் ஊர். எனவே, கருவூர் சங்க காலத்து வஞ்சி எனல் பொருந்தாது. கொங்குநாடு, குடமலை நாட்டுச் சேரன் ஆட்சிக்குட்பட்டிருந்ததாயினும், அவன் தலைநகர் குடமலை நாட்டில்தானே இருந்திருத்தல் வேண்டும்; கொங்கு

நாட்டில் இருந்தது எனக் கோடல் எங்ஙனம் பொருந்தும்? இங்கிலாந்து மன்னரின் தலைநகரமாகிய 'இலண்டன்' மாநகர் இங்கிலாந்திலேதான் இருக்கின்றது; அவரது ஆட்சிக்குட்பட்ட ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் இல்லை. ஆகவே, குடமலை நாட்டிலுள்ள திருவஞ்சைக் களத்தைத் தன்னகத்துக் கொண்ட கொடுங்கோளூரே சங்ககாலத்து வஞ்சி என்பது திண்ணம்.

7. **தகடூர்:** கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய அதியமான் நெடுமானஞ்சி என்பான் வீற்றிருந்து அரசாண்ட நகரம் தகடூர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. சேலம் ஜில்லாவிலுள்ள தர்மபுரித் தாலூகாவின் தலைநகராகிய தர்மபுரியிலே முற்காலத்தில் தகடூர் என்ற பெயருடன் விளங்கியது என்பது அவ்வூரிலுள்ள மல்லிகார்ச்சுனரது கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டால் புலப்படுகிறது. இதனை, 'ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு பன்னிரண்டாவது நிகரிலி சோழ மண்டலத்துக் கங்நாட்டுத் தகடூர் நாட்டுத் தகடூரில்' என்ற ஒரு கல்வெட்டுப் பகுதியினால் நன்குணரலாம்.[1]

## ரு. சில வழக்கங்கள்

### புறநானூற்றிலும் கல்வெட்டுக்களிலும்

பொதுவாகக்

பண்டைத் தமிழ் வேந்தருள் சிலர், சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோவாழியாதன், கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி, குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய

1. South Indian Inscriptions Vol. VII. No. 534.



நன்மாறன், கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதி, சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்று புறநானூற்றில்[1] குறிப்பிடப் பட்டுள்ளனர். இதனால், அரசர்கள் இறந்த பின்னர் அவர்கள் இறந்த இடங்களை அன்னோர் பெயர்களுக்கு முன்னர்ச் சேர்த்து வழங்குவது பண்டை வழக்கு என்பது புலப்படுகின்றது. கல்வெட்டுக்களில் காணப்படும் 'தொண்டைமானாற்றூர்த் துஞ்சிய உடையார்'[2] 'ஆற்றூர்த் துஞ்சிய உடையார் அரிஞ்சய தேவர்'[3] 'பொன் மாளிகைத் துஞ்சிய சுந்தரசோழ தேவர்' என்ற தொடர்களால் இவ் வழக்கம் கி. பி. ௧௦, ௧௧-ம் நூற்றாண்டுகளிலும் சோழ மண்டலத்தில் இருந்தது என்பது நன்கு வெளியாகின்றது.

இனி, கற்புடை மகளிர் தம் கணவர் இறந்தபின், தீப் பாய்ந் துயிர்நீத்தல், வீரங்காட்டிப் பொருது போர்க்களத் தில் உயிர்துறந்த வீரர்களை நினைவுகூர்தற் பொருட்டுக் கல் நடுதல் ஆகிய செயல்கள் முற்காலத்தில் இருந்தன என்பது புறநானூற்றால் புலனாகின்றது. இவை கி. பி. க௦, கக, க௨-ஆம் நூற்றாண்டுகளிலும் நம் தமிழகத்தில் வழக்கில் இருந்தன என்பது பல கல்வெட்டுக்களாலும் செப்பேடு களாலும் அறியப்படுகின்றது. இவற்றை எடுத்துக்காட்டு களால் விளக்கப்புகின் இக் கட்டுரை மிக விரியுமாதலின் இந்த அளவில் நிறுத்திக்கொண்டேன்.

## கள. சில குறிப்புக்கள்

## புறநானூற்றில் காணப்படும் சில சொற்றொடர்களையும் சொற்களையும் பற்றிய குறிப்புக்கள்

1. முதுகண்: உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர் பாடிய பாடல்கள் புறநானூற்றில் காணப் படுகின்றன. உறையூர் என்பது அப் புலவரது ஊர்.

---

1. புறம்: 337, 245, 41, 61, 58, 47, 196, 51, 59.
2. S. I. I. Vol. III, No. 142.
3. do Nos. 15, 16.

சாத்தனார் என்பது அவரது இயற்பெயர்.
எனவே முது
கண்ணன் என்பது எதனை உணர்த்தும்
என்று ஈண்டு
ஆராய்வது இன்றியமையாததாகும்.
தமது நெருங்கிய கிளைஞராயுள்ள

முதுகண் என்பது
இளைஞர்க்கும் பெண்
டிர்க்கும் அவர்கள் பொருள்களுக்கும் பாதுகாவலராக நிலவிய ஆண்டில் முதிர்ந்த ஆண்மக்கட்குரிய பெயராக முற்காலத்தில் வழங்கியுள்ளது என்பது கல்வெட்டுக்களால் தெரிகிறது. இதனை, 'இச் சுந்தரபட்டனையே முதுகண்ணாகவுடைய இப் பொன்னார் மேனி பட்டன் மாதா உமையாண்டாளும்'[1] எனவும், 'இவனையே முதுகண்ணாகவுடைய இவன் பேரன் சொக்கன் ஆராவமுதும்'[2] எனவும் போதரும் கல்வெட்டுத் தொடர்களால் உணரலாம். இந்நாளில் அத்தகையார் 'கார்டியன்' என்றும் 'போஷகர்' என்றும் வழங்கப்படுகின்றனர். அவற்றுள் 'கார்டியன்' என்பது ஆங்கில மொழியிலிருந்து வந்து வழங்கும் திசைச் சொல். 'போஷகர்' என்பது வடசொல். ஆகவே இச் சொற்களின் பொருளை யுணர்த்துவதாய் முற்காலத்தில் நம் நாட்டில் வழங்கி வந்தது முதுகண் ஆகும். எனவே, பிறர்க்கு முதுகண்ணாக இருப்பவன் முதுகண்ணன் என்பது வெளிப்படை.

2. மண்டை: சங்க காலத்தில் பாணர்களிடத்தி லிருந்த ஒருவகை உண்கலம் மண்டை என்ற பெயருடையதா யிருந்தது என்பது புறநானூற்றிலுள்ள பல செய்யுட் களால் அறியப்படுகின்றது.[3] தஞ்சைமா நகரில் இராச ராசேச்சுரம் என்ற பெருங்கோயிலை எடுப்பித்த முதல் இராசராச சோழனும் அவன் உரிமைச் சுற்றத்தினரும் அக் கோயிலுக்குப் பொன்னாலும் வெள்ளியாலும் செய் தளித்த கலங்களுள் மண்டைகளும் உள்ளன என்பது, 'நாளதினாலே கொடுத்த பொன்னின் மண்டை ஒன்று, மேற்படி கல்லால் நிறை முந்நூற்றுத் தொண்ணூற்

1. S. I. I. Vol. V, No. 649.
2. do VI, No. 34.
3. புறம்: 103, 115, 384, 393.



றொன்பதின் கழஞ்சே முக்கால்'[1] 'மண்டை ஒன்று வெள்ளி இருநூற்றிருபத்தெழு கழஞ்சு'[2] என்ற அக் கோயிற் கல் வெட்டுப் பகுதிகளால் புலனாகின்றது. எனவே, கி. பி. கக-ஆம் நூற்றாண்டிலும் இப் பெயருடைய கலங்கள் நம் தமிழ்நாட்டுக் கோயில்களில் இருந்தமை அறியத்தக்கது. வடமொழியாளர் மண்டையைக் கபாலம் என்று கூறுவர்.

3. முடிநாகராயர்: சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனைப் பாடிய புலவர் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பது புறநானூற்றால் அறியப்படுவது. இப் பெய ருடைய தலைச்சங்கப் புலவர் ஒருவர் இருந்தனர் என்று

இறையனார் அகப்பொருள் உரை கூறுகின்றது. பிற்காலச் சோழர் காலத்துக் கல்வெட்டுக்களில் காணப்படும் கச்சி ராயர், காலிங்கராயர், சம்புவராயர், காடவராயர், சேதி ராயர் போன்ற தொடர்கள் சங்கநாளில் வழக்கில் இல்லை.

அன்றியும், ரகரத்தை மொழி முதலாகக்கொண்ட 'ராயர்' என்ற சொல் சங்ககாலத்தில் வழங்கவில்லை என்பது கற்றோர் அறிந்ததே. ஆகவே, முடிநாகராயர் என்பது முடி நாகனார் என்றிருந்திருக்குமோ என்ற ஐயப்பாடு உண்டா கின்றது. இதனை அறிஞர்கள் ஆராய்ந்து விளக்குவார்க ளாக.

கழஞ்சு:
பெற்றிசினே'

'ஏருடைய விழுக்கழஞ்சிற்-சீருடைய இழை
என்னும் புறப்பாட்டடிகளில் கழஞ்சு

பயின்று வருகிறது.
உயர்ந்த பொருள்கள்

மணி, பொன், வெள்ளி முதலான
கழஞ்சு, மஞ்சாடி, குன்றி என்பவற்
றாலும்; செம்பு, பித்தளை, வெண்கலம் முதலான தாழ்ந்த பொருள்கள் பலம், கஃசு என்னும் நிறை கற்களாலும் முற்காலத்தில் நிறுக்கப்பட்டு வந்தன என்பது பல கல்

வெட்டுக்களால் புலப்படுகிறது. இரண்டு குன்றி கொண்டது ஒரு மஞ்சாடியாகும்; 20 மஞ்சாடி கொண்டது ஒரு கழஞ்சு. எனவே, 40 குன்றி கொண்டது ஒரு கழஞ்சு என்பது வெளிப்படை. ஆகவே, ஒன்றேகால் வராக

1. S. I. I. Vol. II, No. 2.
2. S. I. I. Vol. II, No. 91.



னெடை கொண்டது ஒரு கழஞ்சு என்பது நன்கு படும்.

துணியிப்

இதுகாறும் கூறியவாற்றால் புறநானூற்றுச் செய்திகளுள் கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் உறுதி எய்துவனவும், அந் நூலில் கூறப்படும் நாடுகளையும் ஊர்களையும் பற்றிக் கல்வெட்டுக்களால் புலப்படுவனவும், புறநானூறு, கல்வெட்டுக்கள் இவற்றுள் பொதுவாகக் காணப்படும் சில வழக்கங்களும், சில சொற்களையும் சொற்றொடர்களையும் பற்றிய செய்திகளும் நன்கு விளங்குதல் காண்க.

இம் மாநாட்டில் யான் கலந்துகொண்டு ஒரு சிறு தொண்டாற்றுமாறு அரியதொரு வாய்ப்பை அன்புடன் அளித்த திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் முகவர் திருவாளர் வ. சுப்பையாபிள்ளை அவர்கட்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

---

# சூ. புறநானூறும் வரலாற்றுச் சிறப்பும் -

[வித்துவான், மா. இராசமாணிக்கம் பிள்ளை, பி. ஓ. எல்.]

## க. முன்னுரை

வரலாறு என்பது எல்லா நாடுகளிலும் முதன்முதல் பாக்கள், கதைகள் வாயிலாகவே

தோன்றின. அவை

காலஞ்சென்ற வீரர், அரசர், நல்லோர், தீயோர், இவர்தம் வரலாறுகளையோ, வரலாறுகளிற் காணத்தக்க சிறப்பான நிகழ்ச்சிகளையோ பற்றியனவாக இருந்தன. இங்ஙனம் முதன்முதலில் வரையப்பட்ட தனிப்பாடல்களும் தனிக் கதைகளும் பிற்கால அறிஞர்க்கு வரலாறு காட்டும் அடிப் படையாக விளங்கலாயின. மேல்நாட்டில் முதன்முதல் இனிய முறையில் வரலாறு எழுதத் தொடங்கிய ஆசிரியர் ஹெரடோட்டஸ் என்பவர். அவர் காலம் கி. மு. ரு-ஆம் நூற்றாண்டாகும்.[1] பின்னர்ப் படிப்பினை பயக்கத்தக்க முறையில் வரலாறுகள் எழுந்தன. அங்ஙனம் வரைந்தா ருள் முதல்வர் துசிடிட்ஸ் என்பவர். இம்முறையில் எழுதப்பட்ட வரலாறே சிலப்பதிகாரம் என்னும் முத்தமிழ்க் காவியம். ஆயின், முற்கூறியவை அரசர், அலுவலாளர், தலைவர் முதலியோர்களைப் பற்றிய அரிய நிகழ்ச்சிகளைக் கொண்ட வரலாறுகள் ஆகும்; அவை இனிய செய்யுள் நடையினும், உரைநடையினும் யாக்கப் பெற்றவை. அத் தகைய வரலாற்று நூல்களை ஓரளவு ஒத்துக் காண்பன புறநானூற்றுப் பாக்கள் என்னலாம். என்னை? சேர, சோழ, பாண்டியர், பாரி போன்ற குறுநில மன்னர், கோவூர்கிழார் போன்ற புலவர் இவர்தம் வரலாறுகளைப்

1. F. G. Teggart's 'Theory of History', pp. 18—22.

புறநானூற்றுப் பாடல்களைக் கொண்டே வரைந்து முடிக்கலாம் ஆதலின் என்க.
ஏறத்தாழ

புறநானூற்றுப் பாடல்கள், பழங்கால நிகழ்ச்சிகளைப் பிற்காலத்தார் பாடி வைத்தவை போன்றவை அல்ல. அவை புலவர் பலரால் தத்தம் கால அரசர், வள்ளல்கள் முதலியோரைப் பற்றிப் பாடப்பெற்றவை; அக்காலப் போர்களைப் பற்றியவை; அறம், பொருள், வீடு என்னும் மூன்றையும் பற்றியவை. ஆதலின், அவற்றுள் 'நம்பத் தகாதன' என்று ஒதுக்கித் தள்ளத்தக்க செய்தி இருத்தல் அருமையினும் அருமை!

சுருங்கக் கூறின், புறநானூறு மிகப் பழைய காலத் தமிழ் மக்கள் - சிற்றரசர் - பேரரசர் - கொடையாளிகள் - புலவர் இவர்தம் வரலாறுகளையும் நாகரிகப் பண்புகளையும் நன்கு விளக்கும் வரலாற்று நூலாகும். அதனை நன்கு ஆராய்ந்து முறைப்பட வைத்து எழுதப்புகின், 'பண்டைத் தமிழக வரலாறு' என்னும் ஒப்புயர்வற்ற 'வரலாற்று நூல்' ஒருவாறு எழுதி முடிக்கலாம் என்பதை அழுத்தமாக அறையலாம். இது நிற்க,

## உ. சங்க நூல்களின் இறுதிக்காலம்

ஆராய்ச்சி அறிவும் நடுவு நிலைமையும் வாய்ந்த வர லாற்று ஆசிரியர் மணிமேகலை, சிலப்பதிகாரம் இவற்றைப் பலதுறையினும் ஆராய்ந்து, இவை கி. பி. உ-ஆம் நூற்றாண் டின எனப் பல சான்றுகள் கொண்டு நிறுவியுள்ளனர்.[1] கி. பி. ந-ஆம் நூற்றாண்டில் தமிழகத்துக்கே புதியவரும் பிராக்ருத - வடமொழி வல்லுநருமாகிய பல்லவர் காஞ்சி யைக் கைப்பற்றித் தொண்டை நாட்டை ஆளலாயினர் என்பது ஆராய்ச்சியாற் போந்த உண்மையாகும்.[2] பல்ல வரால் தெற்குநோக்கி உந்தப்பட்ட களப்பிரர் முறையே

---

1. Dr. S. K. Aiyangar's 'Manimekalai in its Historical setting.'

2. R. Gopalan's 'Pallavas of Kanchi,' chapter 3.



தொண்டை, சோழ, பாண்டிய நாடுகளைக் கைப்பற்றி ஆள லாயினர். அவர்கள்; கி. பி. ருஎரு வரை சோழ பாண்டிய நாடுகளை ஆண்டனர்; பின்னர் முறையே பல்லவர்க்கும் பாண்டியர்க்கும் அடங்கிய குறுநில மன்னராயினர் என் பனவும் வரலாறு கண்ட உண்மையே ஆகும்.[1] ஏறத் தாழக் கி. பி. ருஎரு-முதல் பாண்டிநாடு பாண்டியராலும்

கிருஷ்ணையாறு முதல் காவிரியாறு வரையிலுள்ள பெரு நாடு சிம்மவிஷ்ணு முதலிய பல்லவராலும் ஆளப்பட்டு வந்ததும் ஆராய்ச்சியாற் போந்த செய்தியாகும். தமிழ கத்திற் பன்னெடுங்காலமாக இருந்து ஆண்டுவந்த சோழ - பாண்டியர் இங்ஙனம் தம் நாட்டைக் களப்பிரர்க்கும் பல்ல வர்க்கும் விடவேண்டிய துன்பநிலை உண்டான கி. பி. ந-ஆம் நூற்றாண்டாகும்.

காலம்

ஏறத்தாழக்

பாண்டிய நாடு

கி. பி. உ௱ முதல் கி. பி. ரு௱ வரை களப்பிரர் ஆட்சியில் இருந்ததென்னல்

தவறாகாது.

கானத்துச்

புறநானூற்றிற் காணப்படும் 'தலையாலங் செருவென்ற நெடுஞ்செழியன்' செயலே களப்பிரர் ஆக்கிரமிப்புக்கு முற்பட்ட செயலாகச் மனூர்ச் செப்பேடு செப்புகிறது:

சின்ன "தலையாலங் கானத்தில் தன்னொக்கும்

இருவேந்தரைக் கொலைவாளில் தலைதுமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்— மாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரி சங்கம் வைத்தும் மாராசரும்

சார்வபௌமரும் மகீமண்டலம் காத்திகந்தபின்..."

ஆயின், வேள்விக்குடிச் செப்பேடு, 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வேள்விக்குடி என்னும் ஊரைக் கொற்கை கிழான் நற்கொற்றன் என்பாற்கு நீரோடு அட்டித் தந் தான். நற்கொற்றன் அதை நீடு புக்தி துய்த்தபின், அளவரிய அதிராசரை அகல நீக்கி அகலிடத்தைக் களப்பிரன் என்னும் கலியரசன் கைக்கொண்டான்' என்பதை அறிவிக்கிறது.

---

1. M. S. Ramasamy Iyangar's 'Studies in S. I. Jainism,' pp. 52-54 and Dr. S. K. Aiyangar's valuable to the 'Pallavas of Kanchi' by R. Gopalan.

Introduction



" இவ்விரு செப்பேட்டுச் செய்திகளால், (1) களப்பிரர் பாண்டிய நாட்டைக் கைப்பற்றுமுன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் பாண்டி மன்னராக இருந்தனர்; (2) மதுரையிற் சங்கம் இருந்தது; (3) மாபாரதம் தமிழ்ப் படுத்தப்பெற்றது என்பன நன்கு புலனாகின்றது.

இதுகாறும் கண்ட முடிபுகளை நோக்க, கி. பி. ௨௫௰ முதல் கி. பி. ௬௫௦ வரை மதுரை களப்பிரர் ஆட்சியில் இருந்தமையால், தமிழ்ச் சங்கம் இருந்து செயலாற்றி யிருத்தல் இயலாதென்பதை நன்குணரலாம். இனிக் கி. பி. ௬௭௫ முதல் பாண்டி நாட்டை ஆளத்தொடங்கிய கடுங்கோன் முதலிய பாண்டி மன்னருடைய செப்பேடுகளை யும் கல்வெட்டுக்களையும் நோக்குழி அவர்தாமும் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தமை தெரியவில்லை. மேலும் கி. பி. எ-ஆம் நூற்றாண்டினரான சைவ சமயக்குரவரும் தமக்கு முற்பட்ட காலத்தில் சங்கம் இருந்ததாகவே தெரிவித்துள்ளனர். இவை அனைத்தையும் நோக்கி, வர லாற்றுக் கண்கொண்டு காணின், இன்றுள்ள தொல் காப்பியம் முதல் சிலப்பதிகாரம் ஈறாகவுள்ள பழைய நூல்கள் கி. பி. ௨௫௦-க்கு முற்பட்டவை எனத் துணிந்து கூறலாம். இத் துணிபிற்குப் பிற சான்றுகள் பல காட்டல் கூடுமெனினும், விரிவஞ்சி விடுக்கப் பெற்றன. சங்க நூல் களின் இறுதிக்காலம் கி. பி. ௨௫௦ எனின், அவற்றுள் ஒன்றாய புறநானூற்றின் இறுதிக்காலமும் அஃதே எனல் பொருந்துமன்றோ ?

## ௩. புறநானூறு

அறம், பொருள், வீடு என்னும் புற ஒழுக்கம்பற்றிய ௪௦௦ பாக்களின் தொகுதியே புற-நானூறு என்பது. இதில் உள்ள பாடல்களைப் பாடிய அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் முதலிய புலவர் பலவேறு காலங்களில் வாழ்ந்தவர் ஆவர். இந்நூல் தொகுக்கப் பெற்ற காலத் தில் இப்புலவர் பலருடைய பெயர்கள் புலனாகவில்லை.

ஆதலின், தொகுத்தவர் பாவடிகளிற் பயின்றுவரும் தொடர்களையும், பாக்களிற் காணப்படும் சிறப்பியல்பு களையும் கொண்டு தம் மனம் போனவாறு அடிக்குறிப்பில் புலவர் பெயர்களை ஆக்கியிருத்தல் அறிவுடையார் அறிந் ததே ஆகும். சான்றாக ஒரூஉத்தனார், ஒரு சிறைப் பெரிய னார், ஓரேர் உழவர், கூகைக்கோழியார், தொடித்தலை விழுத்தண்டினார், தும்பி சொகினனார், வெள்ளெருக் கிலையார், வெள்ளைமாளர் முதலிய பெயர்களைக் காண்க. மொழி ஆராய்ச்சியிற் புகினும், பல பாக்களின் நடை வேறுபட்டிருத்தலை நன்குணரலாம். செய்யுட்களிற் கூறப் பட்டுள்ள செய்திகளை நோக்கினும் இஃது உண்மை யாகிறது. தமிழர்க்கே உரிய தனிப்பட்ட நாகரிகப் பண்பு களும் அவருடன் பிற்காலத்தே கலந்த வடமொழி யாளர்க்கே உரிய பண்புகளும் இந்நூற்கண் இடம்பெற் றுள்ளன. வேள்வி அந்தணர் முத்தீ, இதிகாசக் கதைகள், இந்திரன், பிரமன், பலராமன் முதலியோர் வழிபாடுகள், அங்க நூல் - அருத்த நூல் - தரும நூல் - வேத நூல் முதலியனவும், இன்ன பிறவுமாம்.

இனிப் புறப்பாட்டின் காலப் பேரெல்லையையும் வர

லாற்றுச் சிறப்புடையார் குறிப்புகளையும் காண்போம் :

## 1. தருமபுத்திரன் (கி. மு. க000)

'அறவோர் மகனே, மறவோர் செம்மால்' என்று புறப்பாட்டில் (ந கூகூ) கோதமனாரால் பாடப்பெற்ற தரும புத்திரன் தமிழ் நாட்டு அரசனாகக் காண்கிலன். 'இவன் யமதருமன் மகன், பாண்டவருள் மூத்தவன்' என்பதே பொருத்தமாகத் தெரிகிறது. பாரத - இராமாயண காலம் ஏறத்தாழக் கி. மு. கச00-கி. மு. அ00 என்பர் ரா. சி. டட.[1] ஆரியர் இந்தியாவிற்கு வந்த காலம் கி. மு. கச00 ஆகலாம் என்று மக்கே[2] போன்ற ஆசிரியர் பலரும்[3] கூறுகின்றனர். இதுவே இன்று ஆராய்ச்சி உலகில் வற்புறுத்

1. Vide his 'Ancient India', pp. 15-20.
2. Mackay,
3. Prof. N. K. Dutt's

'Aryanisation of India,' pp. 39-65.



தப்படுவதாகும். இம்முடிபு கோடற்பாலதாயின், பாரத வரலாறு ஏறத்தாழக் கி. மு. க000-ல் நடைபெற்றதாகக் கொள்ளலாம். இங்ஙனம் கொள்ளின், இப் புறப்பாட்டிற் கண்ட தருமபுத்திரன், அவனைப் பாடிய கோதமனார் இவர் தம் காலம் ஏறத்தாழக் கி. மு. க000 என்னல்

தவறாகாது. "...............இவற்றால் வடநாட்டுப் பாண்டவர் ஐவருக்கும் தமிழரசர்க்கும் தெளியலாம்.

பல்வகையினும் தொடர்புண்மை நன்கு இத் தொடர்புண்மையால், கோதமனார்

தரும புத்திரற்கு அறிவுறுத்தியதென்று நந் தமிழ்ப் பெருமக்கள் துணிந்த இச் செய்யுளின் பழமை நன்கு துணியலாம்"[1] என்று பெரும்புலவர் ரா. குறித்திருத்தல் காண்க.
இராகவையங்கார்

2. பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் (கி. மு. க000)

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது
கொடுத்தோய்!"

(புறம்: உ)

என்று பாராட்டப் பெற்ற இச் சேரர்

பெருந்தகை பாரத
காலத்தவன் என்பது மேற்சொன்ன அடிகளால் நன்கு விளங்கும். இச் செய்யுள் பாடினவர் 'முதற்சங்கப் புலவர்' என்று களவியல் உரை கூறும் முரஞ்சியூர் முடிநாகனர்[2] ஆவர். "........உதியஞ் சேரலாதன் இறந்த வீரரைப் பேணி அவர் பொருட்டுப் பெரும்பலி கொடுத்தனன்............இச் சேரன் பாரத காலத்தவன் ஆவன்" எனப் பெரும்புலவர் ரா. இராகவையங்கார் வற்புறுத்தல் இங்கு கவனித்தற் குரியது.[3]

---

1. Vide his 'Tamil Varalaru,' pp. 239-245.

2. 'முடிநாக ராயர்' என்ற பெயர் தவறு. 'முடிநாகனர்' என்றிருத்தலே பழைமைக்குப் பொருந்துவதாகும். 'ராயர்' என்பது மிகப் பிற்பட்ட கால வழக்காதல் காண்க.

3. Vide his 'Tamil varalaru,' pp. 226-238.



## 3. வான்மீகியார் (கி. மு. ருoo)

பது

பாரத நிகழ்ச்சிகட்குப் பிற்பட்டது இராமகாதை என் அறிஞர் கருத்து. [1]இராமகதையை வடமொழியிற்

பாடிய பெரியார் வான்மீகியார். புறப்பாட்டில் ருடுஅ-ஆம் பாடலைப் பாடியவர் வான்மீகியார் என்பவர். 'இவ்விருவரும் ஒருவரே' என்று 'செந்தமிழ்' இதழாசிரியராகிய பெரும் புலவர் திரு. நாராயணையங்கார் அவர்கள் ஏறத்தாழ அ0 பக்கங்களில் விரிவான ஆராய்ச்சிக் கட்டுரை[2] வெளியிட்

டுள்ளார். இஃது கொள்ளற்பாலதாயின், கண்ட வான்மீகியார் காலம் ஏறக்குறையக் என்னலாம்.[3]

புறப்பாட்டிற்
கி. மு. சுOO

4. வடிம்பலம்ப நின்ற பாண்டியன் (கி. மு. ருOO)

இவனைப்பற்றிய குறிப்பும் புறம் வந்துள்ளது. அது பின்வருமாறு :

கூ-ஆம் செய்யுளில்

"எங்கோ வாழிய குடுமி, தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே."

இவனைப்பற்றிச் சிலப்பதிகாரம்,[4] முல்லைக்கலி,[5] மதுரைக் காஞ்சி[6] முதலிய நூல்களிலும் குறிப்புகள் பலவாகக் காண்கின்றன. இவனே சயமாகீர்த்தி எனப்பட்ட

1. Dr, S. K. Aiyangar's 'Ancient India,' pp. 1-5.
2. Vide 'Sentamil' Vol. for the year 1939-1940.
3. T. R. Sesha Iyangar's 'Ancient Dravidians,' p. 12.

பண்டர்க்கர் இராமாயண காலம் கி. மு. 7-ம் நூற்றூண்டிற்கு முற்பட்ட தென்பர்; விண்டெர்னிட்ஸ் பண்டர்க்கர் கூற்றை நன்கு ஆராய்ந்த பிறகும் இராமாயண காலம் கி. மு. 3-ஆம் நூற்றூண்டிற்குப் பிற்படாதென்பர். History of the Sanskrit Literature

4. சிலப். 11, வரி 17-22; அழற்படுகாதை, வரி 56-61.

5. முல்லைக்கலி-4.

6. மதுரைக்காஞ்சி, வரி 763-781; 75-88.



வன். இவன் பாக்கள் நற்றிணையில் இரண்டுண்டு.[1] இவன் 'கவியரங்கேறிய பாண்டியன்' எனக் களவியல் உரை கூறல் காண்க. சயமாகீர்த்தி அல்லது ஜயமாகீர்த்தி என்பதில் உள்ள 'ஜய'[2] என்பது யவத் (ஜாவா) தீவத்தின் பெயராதல் கல்வெட்டு வல்லார் அறிந்தது. அங்குள்ள பிற்காலத்துக் கல்வெட்டு ஒன்று மீன் இலச்சினையுடன் கிடைத்துள்ளது. இதனால், 'சயமாகீர்த்தி' என்பது 'ஜயஸ் தானத்து மகாகீர்த்தியன்' என்னும் பொருளுடையதேயாகும்....இவன் "அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி" எனச் சிலப்பதிகாரத்துக் குறிக்கப்பெறல்—நெடுந்தூரம் கடலிற் சென்று நிலங் கண்டு, அந்நிலத்துத் தன் அடிகளை வைத்து, ஆண்டுள்ள கடல் அலம்பும்படி நின்றதேயாம்.........பேரரசன் தன் அடிகளைப் பாறைகளிற் பொறித்து அவற்றை நீர் அலம்பும்படி வைக்கும்

செய்தி ஜாவாவில் ஸ்ரீபூர்ணவர்மன் கல்வெட்டுகளிற் கேட்கப்படுவது.

"ஸ்ரீமானும் பூர்ணவர்மனும் அவனிக்குப் பதியும் அடிவைத்தவனுமாகிய தருமாநகரத் தலைவனுடைய விஷ்ணு (அடிகளை) ஒத்த இணையடிகள்" (Ind. Ant. III. ௩௫௫-௩௫௮). இது யவத்வீபத்துச் சீர்அவருடன் யாற்று நடுவிலுள்ள பெரும் பாறையில் நீர் அலம்பு நிலையில் உள்ளது......இங்ஙனம் அடிபொறிக்கும் வழக்கம் நெடியோன் காலமுதல் அங்கு உண்டாயிற்று என்று உய்த்துணரலாகும்....இங்ஙனம் நெடியோன் பெருங்கடலகத்து நிலங்கொண்ட செய்தி மதுரைக்காஞ்சியுள்,

"வானியைந்த இருமுந்நீர்ப்
பேஎ நிலையிய இரும்பவ்வத்துக்
கொடும்புணரி விலங்குபோழ
...................................
சீர்சான்ற வுயர்நெல்லின்

ஊர்கொண்ட வுயர்கொற்றவ"

(எ௫—அஅ)

---

1. நற்றிணை, செ. 105, 228.

2. G. E. Gerini's 'Further India,' p. 646.

என்று குறிக்கப்படல் காண்க. நெல் - சாலி ; நெல்லின் ஊர் - சாலியூர் : இன்றைய சாரியூர் (Sarhi). இது ஜாவாத் தீவில் மதுரை என்ற தலைநகர்க்கு நான்கு கல் தொலைவில் உள்ள கடற்றுறைப் பட்டினம்.[1]

ஈண்டு மிகப் பிற்பட்ட காலத்தும் இந்நாட்டை வென்றுகொண்ட மாறன் பெயரும் அவன் மதுரையும் (சுமதுரா) பாண்டியர் நூலிற் குறித்த சாலியூரும் சேர வருதலான், இந்நாடு முதலில் தென்னாட்டுப் பாண்டியராலே கொள்ளப்பட்டதாக நன்கு தெரியலாம்....இவன் பொன்படு தீவங்கொண்ட சிறப்பையே போற்றி இவன் 'சயமா கீர்த்தி' எனவும், 'நெடியோன்' எனவும் புகழப் பெற்றனன்....இவன் வென்றுகொண்ட பிற நாடு மலயம் என இன்றுவரை வழங்குதலும் இவனுடைய பொதியப் பொருப்பாகிய 'மலயம்' பற்றியதாகும். மதுரை என்பது கீழ்க்கடலகத்து யவத்தீவத்தை அடுத்து இப்போதுள்ள தீவாகும். இது முன்னர் ஒன்ருக இருந்ததென்ப. இச் சாவகத்தீவுடன் சங்க காலத்தில் வாணிகம் சிறக்க நடந்தது என்பதை மணிமேகலையால் அறியலாம். ....சாவகத் தீவில் பல படியாகப் பகுப்புண்ட பெருநிலப் பெயர்கள் இன்றைக்கும் 'பாண்டியன், மதியன், புகார், பாண்டிய வாசம், மலையன்கோ, கந்தளி, செம்பூட்சேஎய்' என வழங்குதல் காணலாம். 'குறிஞ்சி, செங்கரை' என்பன ஆண்டுள்ள குளங்களின் பெயர்கள். .......நெடியோன் எனப்

பட்ட பாண்டியன், அக்கரையில் உள்ள ஆழி, தன் பாதத்தை அலம்பும்படி நின்றவன் என வுணர்தலே பொருந்தியதென்க. இக்காரணத்தானே, மூவுலகும் ஈரடியால் அளந்தவனாகிய நெடியோனை ஒப்ப நின்றான் என்பதுபற்றி, 'நெடியோன்' என்றார். இத்தகைய சிறந்த நெடியோன் வழித்தோன்றலாதல் பற்றியே, தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்,

---

1. இதனை 'ஸ்ரீ விஜய நாடு' என்று பிற்காலச்சோழர் கல்வெட்டுகள் கூறும்.

பு. சொ.—10



“முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன்ஞாலம்

தாவில் தந்து தம்புகழ் நிறீஇ
ஒருதா மாகிய வுரவோ ரும்பல்” (புறம்

: கஅ) எனக் குடபுலவியனாரால் ஏத்தெடுக்கப் பெற்றான் என்க.[1]

இந் நெடியோன் தொல்காப்பியர் காலத்தவன் என்பது பனம்பாரனார் பாயிரத்தால் அறியலாம். தொல்காப்பியர் காலம் ஏறக்குறைய கி. மு. ரு00 எனக் கூறலாம்.[2] எனவே, இந்நிலந்தரு திருவின் நெடியோன் காலமும் அஃதே என்க.

**மோரியர் படையெடுப்பு (கி. மு. ந00-உஎஉ)**

சந்திரகுப்த மோரியனது அமைச்சன் வரைந்த பொருள்நூலில், பாண்டிய நாட்டு முத்துக்களும் மெல்லிய ஆடைகளும் சேரநாட்டுப் பொருள்களும் குறிக்கப்பெற்றுள. சந்திரகுப்தன் மகனை பிந்துசாரன் உ௫-ஆண்டுகள் பேரரசனாக இருந்தான். அவன் தமிழகம் ஒழிந்த டெக்கான் முழுவதையும் கைப்பற்றி ஆண்டான். அவன் காலத்திற்றான் (கி. மு. ௩௦௦-௨௭௨) மோரியப் படைவீரர் வடுகர்படை, கோசர் படை என்றவற்றுடன் தமிழகத்தினுள் நுழைந்து, பலவாறு திரிந்து, பல இடங்களில் தோல்வியும் வெற்றியும் பெற்று, இறுதியில் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி என்பவனால் முற்றிலும் முறியடிக்கப்பட்டுத் திரும்பினர் என்பது புறப்பாட்டுகளாலும் (௧௭௫, ௩௭௮) அகப்பாக்களாலும் (௬௯, ௨௫௧, ௨௮௧) அறியப்படும் செய்தியாகும்.[3]

---

1. இப் புதிய - அரிய செய்தியை விளக்கிய பெருமை பெரும்புலவர் ரா. இராகவையங்கார் அவர்கட்கே உரியது.—Vide his 'Tamil Varalaru' pp. 322—343.

2. Vide Tamil Polil, for the year 1939—'40

3. இதனை விளக்கமாக அறிய விரும்புவோர் 'செந்தமிழ்ச் செல்வி' 16-ஆம் சிலம்பில் 'மோரியர் படையெடுப்பு' என்ற கட்டுரை காண்க. See also Dr. S. K. Aiyangar's 'Beginnings of S. I. History'; (Banerji's 'Prehistoric Hindu India')



## ௧௪௭ 5. முதற் கரிகாலன் (கி. மு. ௬௦—கி. மு. ௧௦)

இவனைப் பற்றிய புறப்பாட்டு சுடு, சுசு-ஆம் எண் பெற்றனவாகும்; அகத்தில் கூசு, கஉடு, உசகூ முதலிய எண்ணுடைய பாடல்களாகும். இவன் கரிகாற் பெருவளத் தானுக்குப் பாட்டனுவன். இவனைப்பற்றிய விரிவான ஆராய்ச்சியைச் சிவராசப் பிள்ளை அவர்கள் நூல்கொண்டு உணர்க.[1] இக்கரிகாலன் பெருஞ் சேரலாதனுடன் வெண்ணிப்பறந்தலையிற் பொருதான்; புறப்புண்பட்ட சேரலாதன் நாணி வடக்கிருந்தான்.

## 6. இரண்டாம் கரிகாலன் (கி. மு. சுo—கி. மு. கo)

இவனே சிலப்பதிகாரம் கூறுமாறு, இமயம் சென்று மீண்ட பேரரசன். இவனே தொண்டை நாட்டை வளப் படுத்திச் சோணாட்டைப் பெருக்கிய பெருவீரன். இவன் மரபினர் என்று பிற்காலக் கருநாடக-ஆந்திர அரசர்களும் தாம் விடுத்த செப்புப் பட்டயங்களிலும் கல்வெட்டுகளிலும் கூறிக்கொண்டனர்[2] எனின், இவன் பெருமையை என்னென்பது! இவன் காலத்திற் சோழப் பெருநாடு வட பெண்ணையாறு முதல் குமரி முனைவரை பரவி யிருந்த தென்னலாம். இவன் காலத்திற் பூம்புகார் சிறந்த துறைமுகப் பட்டினமாக விளங்கியது.

## 7. பிற்பட்ட சோழர் (கி. மு. கo—கி. பி. கடுo)

இவனுக்குப்பின் (க) நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாளவத்தான், (உ) கிள்ளிவளவன், (ந) கோப்பெருஞ் சோழன், (ச) இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, போரவைக்[3] கோப்பெருநற்கிள்ளி, வேல்பல் தடக்கைப் பெருவிறற் கிள்ளி, முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, (ரு) சோழன் நல் உருத்திரன் முதலியோர் சோணாட்டை ஆண்டனர் என்பது புறப்பாக்களால் தெரிகிறது.

---

1. Vide his 'Chronlogy of the Early Tamils.'
2. K. A. N. Sastry's 'Cholas,' Vol. I, pp. 121. 122.
3. 'போரவை' என்றிருத்தலே தக்கதென்பர் வையங்கார்.—Vide his 'Tamil Varalaru' p. 60.



## 8. நெடுமுடிக் கிள்ளி (கி. பி. கரு௦ - உ௦௦)

இவன் மணிமேகலை காலத்தவன். மணிமேகலை செய்த சாத்தனுர் புறப்பாட்டில் ருகூ-ஆம் பாடல் பாடிய வர். இவர் காலத்தில் நெடுமுடிக்கிள்ளி சோழப் பெரு நாட்டை ஆண்டுவந்தான். அப்பொழுது சேரநாட்டைச் செங்குட்டுவன் புரந்துவந்தான். பாண்டிநாட்டை ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் ஆண்டுவந்தான்; அவனுக்குப்பின் மதுரை அழிந்தது. இந் நெடுமுடிக் கிள்ளியோடு பூம்புகாரின் ஒரு பகுதி அழிந்தது.

பெரிப்ளூஸ் - பிளைநி - தாலமி (கி. பி. க - உ௦௦)

கி. மு. ௬-ஆம் நூற்றாண்டிலிருந்து தென் இந்தியா - சிறப்பாகத் தமிழகம் மேல்நாடுகளுடன் வாணிபம் நடத்தி வந்ததை அவ்வக்கால மேனாட்டு ஆசிரியன்மார் குறிப்பிட்டுளர்.[1] கி. பி. முதல் நூற்றாண்டின் கடைப் பகுதியில் (கி. பி. ௭௦-௯௦) இருந்த அலெக்ஸாண்டரிய வாணிபர் ஒருவர் வரைந்துள்ள பெரிப்ளூஸ் என்னும் நூலில் தமிழ் நாட்டுத் துறைமுகப் பட்டினங்கள், தமிழ்நாட்டுப் பிரிவுகள், ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள் முதலியன குறிப்பிடப்பெற்றுள்ளன. அக்காலத்தில் சோணாடு இரண்டு சோழ மரபினரால் ஆளப்பட்டு வந்தது. ஒரு பகுதி புகாரைத் தலைநகரமாகக் கொண்டது; மற்றது உறையூரைக் கோநகரமாகப் பெற்றிருந்தது. இக்கூற்று உண்மை என்பதை 'உறையூர்ச் சோழர்', 'புகார்ச் சோழர்' என வரும் புறப்பாட்டு அடிகளாலும், நலங்கிள்ளி நெடுங்கிள்ளி முதலியோர் போராட்டங்களாலும் நன்கறியலாம். பெரிப்ளூஸ் நூலில் புகார், உறையூர், மரக்காணம் இவை குறிக்கப்பட்டுள.[2]

ஏறத்தாழக் கி. பி. ௮௦-ல் வாழ்ந்த பிளினி என்பார் குறித்துள்ள குறிப்புகளும் புறநானூற்றுச் செய்திகட்கு

1. Vide Kennedy's article in J. R. A. S. 1898, pp. 248-287.

2. Rawlinson's 'Intercourse between India and the Western World', pp. 120-130.

ஒத்தேயுள்ளன. அவர் குறித்த பொருள்கள் புகாரி லிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டனவாகக் காண்கின்றன.[1] புகார் நகரம், நாகப்பட்டினம் ஆகிய இரண்டும் சோழர் துறைமுக நகரங்களாக இருந்தன என்று கி. பி. கசுo-ல்
வாழ்ந்த தாலமி குறித்துள்ளனர்.
காடு இவற்றையும் குறித்துளர்.[2]

அவர் உறையூர், ஆர்க்

இங்ஙனம் அயல்நாட்டார் குறித்துள்ள செய்திகள் யாவும் உண்மை என்பதைப்
புறநானூற்றுப் பாக்க
ளாலும் கரிகாலனைப்பற்றிய பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை என்னும் பாடல்களாலும் நன்கறியக் கிடத்தல் காண்க.

## 9. கோச்செங்கட் சோழன் (கி. பி. உoo - உருo)

இவன் ஏறத்தாழ இக்காலத்துக்கு உட்பட்டவன் ஆவன். இவன் காலத்திற் சோழநாடு பழம் பெருமையோ டிருந்தது; இவன் சேரனைப் புறங்கண்ட பெருவீரன் என்பன இவனைப் பற்றிய எச-ஆம் புறப்பாடல் அடிக் குறிப்பால் நன்கறியலாம். இவன் காலமுதலே தில்லை பெருஞ் சிறப்புப் பெறலாயிற்று. இவன் ஏறத்தாழ எழுபதுக்கு மேற்பட்ட சிவன் கோவில்கள் (மாடக் கோவில்கள்) கட்டிய சிவபக்தன். இவன் சோழ மர

பினனே என்பதைப் பிற்காலத்துச் சுந்தரசோழன் அன்பில் பட்டயத்தாலும் இராசேந்திரன் விடுத்த ஆலங்காட்டுப் பட்டயத்தாலும் அறியலாம்.[3] இவனது சிவப்பணியைச் சேக்கிழார் பெருமான் பாடியுள்ள பெரிய புராணத்துள் பரக்கக் காணலாம். இவனைத் 'தென்னவனாய் உலகாண்ட செங்கணான்' என்று சுந்தரர் சிறப்பித்தமையும் சம்பந்தர் அப்பர் முதலியோர் பாராட்டியுள்ளமையும் இவ

1. Kanakasabai Pillai's Tamils 1800 years ago, pp. 30-40.
2. Caldwell's 'Comparative Grammar of pp. 92-100.
D. L.' 3. Anbil plates
of Sundara Chola, -Ep. Indica Vol. 15, p. 60.



னுடைய
குப் பின்
சிவப்பற்றை நன்கு விளக்குவனவாம். இவனுக்
கி. பி. உ௫o-ல் தொண்டை நாடு பல்லவர் வயப்
பட்டுவிட்டது. அதன்பின் களப்பிரர்
நுழைவால் பாண்டி
நாடு அடிமைப்பட்டது. இதுகாறும் கண்ட
செய்திகளால்
புறநானூற்றின் பேரெல்லை ஏறத்தாழக்
என்னலாம் என்பது ஒருவாறு புலப்படும்.

கி. மு. க000

# ங. தமிழக எல்லை

தமிழகம் ஒரு காலத்தில் தெற்கே மிக விரிந்திருந்த தென்பது சங்கநூற் குறிப்புகளால் நன்கறியப்பட்டதே யாம். அத் தெற்கெல்லை கடல்கோள்களால் வரவர எல்லையிற் சுருங்கி, இன்றுள்ள குமரி தென்னலாம்.

முனையளவு நின்ற

## 1. முதற் கடல்கோளால் உண்டான இழப்பு:

" பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்

குமரிக் கோடும் கொடுங்கடல் "

கொண்டது தொல்காப்பியம் செய்யப்படுதற்கு ராம். அக் கடல்கோளுக்குப் பின்,

முன்ன

" வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்

தமிழ் கூறும் நல்லுலகம் "

எனப் பனம்பாரனர் பாயிரம் குமரியாற்றைத் தெற்கெல்லை யாகக் கூறலால், தொல்காப்பியம் செய்யப்பட்ட காலத்தில்—சயமாகீர்த்தியின் காலத்தில்—தமிழகத்தின் தெற்கெல்லை குமரியாறே என்பது தெளிவு. பாண்டியர் தலைநகரான கவாடபுரத்தில் தொல்காப்பியம் செய்யப்பெற்றதென்பது களவியல் கூற்று. பின்னர்க் கவாடபுரமும் கடல் கோளில் அழிய, இன்றைய மதுரை பாண்டியர் கோநகரம் ஆயிற்று. இங்ஙனம் உண்டாய இரண்டு கடல் கோள்களும் இலங்கையில் உண்டான கடல்கோள்களுக்கு நெருங்கிய தொடர்பு கொண்டவை என்பது கூறாதே அமையும். என்னை? பாண்டிய நாட்டிற்கும் இலங்கைக்கும் உள்ள

அணிமை காரணமாதலின் என்க. இலங்கை வரலாறு திங்குண்டாய் கடல்கோள்களின் காலம் முறையே கி. மு. உருஅ, கி. மு. ருoச, கி. மு. ௨oகூ என்று கூறுகின்றது.[1] இவற்றுள் முன்னது இலங்கையை இந்தியாவினின்றும் பிரித்தது என்றும், இடையது இலங்கைக்குச் சிறிதளவே இழப்புண்டாக்கிய தென்றும், கடையது இலங்கைக்குப் பேரிழப்பு உண்டாக்கிய தென்றும் அவ் வரலாறு கூறுகிறது. இவ்விழப்புகளை நந் தமிழ் நூற் குறிப்புகளோடு ஒப்பு நோக்கின், 'பஃறுளியாற்றுடன் ........குமரிக்கோடும் கொடுங்கடல் கொண்டது' கி. மு. ருoச-ல் எனல் ஒருவாறு பொருந்தும். இக் கடல்கோளுக்குப் பிறகே கவாடபுரம் பாண்டியர் கோநகரமாயிற்று. ஏறத்தாழக் கி. மு. கூ-ஆம் நூற்றாண்டினரான வான்மீகியாரால் கவாடபுரம் பாண்டியர் தலைநகரெனக் குறிக்கப்பட்டுள்ளது. கி. பி. எ-ஆம் நூற்றாண்டினர் எனக் கோல்ஸ்டகராற் குறிக்கப் பெற்ற பாணினி இலக்கணம் தமிழகத்திற் பரவாது ஐந்திரம் பரவியிருந்த காலம்—தொல்காப்பியர் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' எனப் பனம்பாரனாராற் பாராட்டப்பெற்ற காலம் அதுவேயாம்.[2] இவ்விரண்டாம் கடல்கோளே அடியார்க்கு நல்லார் விரிவாகக் சகூ-நாடுகளை அழித்தது போலும்!

குறிப்பிட்ட

கவாடபுரமும் குமரியாறும் அதனைச் சார்ந்த குமரி முனை வரையிலிருந்த நிலப்பகுதியும் அழிந்தகாலம் இலங்கை வரலாறு கூறும் கி. மு. ௨oகூ ஆகலாம்.

இங்ஙனம் தமிழ் நூற்கள் கூறும் கடல்கோள்களையும் இலங்கை வரலாறு கூறும் கடல்கோள்களையும் ஒப்பிட்டுப் பிற சான்றுகளையும் (ஆரியர் இந்தியா வந்தது கி. மு.

1. Tennant's 'History of Ceylon', pp. 5—10.

2. தொல்காப்பியர் காலம்
பதை நன்கறிய 1939—'40-ல்
மடலம் காண்க.

இதுவாக இருக்கலாம் என்
வெளியான தமிழ்ப்பொழில்



கசுOO—அவர் தென்னாடு போந்த காலம் ஏறத்தாழக் கி. மு. கOOO-அOO, பாணினி காலம் கி. மு. எOO-கூOO, தொல்காப்பியர் 'ஐந்திரம் நிறைந்தவர்'—வடசொல் தமிழிற் கலத்தல்—புத்தர்காலப் பிராக்ருதச் சொற்கள் தமிழிற் கலத்தல், தொல்காப்பியர் கூறும் அறுவகைப்பட்ட பார்ப்

பனப் பக்கம், வான்மீகி காலம் ஏறக்குறைய கி. மு. சு-ஆம் நூற்றாண்டு என்பன) துணைக்கொண்டு காணின், தொல்காப்பியர் காலம் ஏறத்தாழக் கி. மு. ௫௦௦ என்னலாம்.[1] ஸ்ரீ விஜயநாட்டை வென்ற நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையில் தொல்காப்பியம் அரங்கேற்றம் ஆனதால் அவனது காலமும் அதுவே ஆகும். (தமிழகத்துத் தெற்கெல்லைகளைப் படங்கள் கொண்டு காண்க.)

(க) ஆகவே, தொல்காப்பியர்க்கு முன் தமிழகம், தெற்கே பஃறுளியாறு கொண்ட பெருநாடு முடியப் பரந்து இருந்தது; அவர் நூல் செய்தபொழுது அப் பெருநாடு (கடல் கோளால் அழிந்து) தெற்கே குமரியாறு வரை சுருங்கி இருந்தது என்பன அறியலாம்.

## 3. குமரிமுனை

(உ) குமரியாறு தமிழகத்தின் தென் எல்லையாகக் கி. மு. ௩௦சு வரை இருந்தது. அப்பொழுது பாண்டியர் தலைநகரம் கவாடபுரமாகும். கி. மு. ச-ஆம் நூற்றாண்டினனான சாணக்கியன் தனது பொருள் நூலில், முத்துகளின் பெயர்கள் கூறுமிடத்துப் **பாண்டிய கவாடகம்** என ஒரு முத்தின் வகையைக் குறித்தல் காண்க.[2] காணவே, சந்திரகுப்த மோரியன் காலத்தில் கவாடபுரம் பெற்றிருந்த சிறப்பு விளங்கும். கி. மு. ௩௦சு-ல் நடந்த இறுதிக் கடல் கோளால் இன்றுள்ள குமரிமுனையே தெற்கெல்லையாயிற்று; கவாடபுரமும் அழிந்து, பாண்டியர் தலைநகரம்

1. மூன்றும் கடல்கோள் நடந்த காலம் தொல்காப்பியர் காலமாகலாம் என்பர் பெரும்புலவர் ரா. இராகவையங்கார்,—Vide his 'Tamil Varalaru' pp. 37-41.

2. Vide his 'Artha sastra', Bk. II. chap. 76.



மதுரைக்கு மாற்றப்பட்டது. ஆதலின், ஏறத்தாழக் கி. மு. ௫00 முதல் கி. மு. ந00 வரை குமரியாறு தமிழகத்தின் தெற்கெல்லையாக இருந்தது எனலாம். கி. மு. ந00 முதல் இன்றளவும் குமரிமுனை
இருந்துவருகிறது.
தெற்கெல்லையாக

## ச. அரசியல்

1. பேரரசர்

புறப்பாடல்களை நன்கு ஆராயின், நெடுங்காலந் தொட்டே தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் முடியுடை நெடுநில மன்னராக இருந்தமை தெளிவாகிறது. ஆயின், ஒவ்வொரு மரபிலும் கிளைகள் இருந்தன. உறையூர்ச் சோழர், புகார்ச் சோழர் - தொண்டி, தகடூர் இவற்றையாண்ட சேரமரபினர் - மதுரை, கொற்கை இவற்றை யாண்ட பாண்டிய மரபினர் இவர்கள் புறப்பாடல்களில் இடம் பெற்றுளர். அக்கிளையினர் நாட்டைப் பிரித்து ஆண்டனர். ஏறத்தாழ இரண்டாம் கரிகாலன் காலம் வரை இந்நிலைமை தமிழகத்திருந்து வந்தது.[1] கரிகாலன் நெடுஞ்சேரலாதன் இவர்களைப்போன்ற பேரரசர் முழுநாட்டையும்—சிலகாலம் முழுத் தமிழ் நாட்டையும் வென்று ஆண்டனராவர். வட இந்தியாவை அடிப்படுத்த வரலாற்றுச் சிறப்புடைய பேரரசன் - மோரிய சந்திர குப்தன் ஆவன். அங்ஙனம் பாண்டியருள் சயமாகீர்த்தி விளங்கினான்; சோழருள் இரண்டாம் கரிகாலன் தோன்றினான். சேரருள் செங்குட்டுவன் விளக்கமுற்றான். அதனால், சயமாகீர்த்தி சாவகம் முதலிய கடல் கடந்த நாடுகளை வெல்ல முடிந்தது; கரிகாலன் இமயம் வரை செல்ல முடிந்தது. சேரன் ஆரிய அரசரை வென்று பெருஞ்சிறப்போடு இமயத்தினின்றும் பத்தினிக்குக் 'கல்' கொணர முடிந்தது.

---

1. Vide K. N. Sivaraja Pillai's 'Chronology of the Early Tamils.'

2. சிற்றரசர்

சேர, சோழ, பாண்டிய நாடுகளில் குறுநில மன்னர் பலர் இருந்தனர். அவர்கள் பாரி, ஓரி, காரி, மலையன், அதியமான், முதலியோர் ஆவர். இவர்கள் பேரரசனை ஒரோவழி எதிர்த்துத் தோல்வியுறலும் உண்டு. இவர்கள் மரபினர் கி. பி. கங-ஆம் நூற்றாண்டு முடியச் சிற்றரசராக இருந்துவந்தனர் என்பதைப் பிற்காலச் சோழ—பாண்டியர் கல்வெட்டுகளால் நன்கறியலாம். பேரரசன் பிறிதொரு பேரரசனை எதிர்க்க விரும்பின் தன் சிற்றரசருடன் வந்து எதிர்த்தல் மரபு. இதனைத் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனை இரு பெரு வேந்தரும் வேளிர் ஐவரும் எதிர்த்தது கொண்டு உணரலாம்.

## ரு. முடிவுரை

இதுகாறும் கூறிப் போந்த உண்மைகளால் புற நானூற்றுப் புலவர் காலம் ஏறத்தாழ கி. மு. க000 முதல் கி. பி. உரு0 வரைப்பட்டதாகும் என்பது இனிதுணரக் கிடத்தல் காண்க. இங்ஙனமே அகநானூறு முதலிய

நூல்களின் காலமும் பரந்துபட்டதாகும். இந்நூற் பாக்களையும் பாடினோர் பெயர்களையும் நன்கு ஆராயாது, களவியல் உரைகாரர் கூறிய செய்தியையே மறையெனக்

கொண்டு, 'இப்பொழுதுள்ள பாக்கள் அனைத்தும் கடைச் சங்கப் பாக்களே' என அறிவுடையோரும் கூறிவருதல் வியப்புக்குரியதே ஆகும். சுருங்கக் கூறின்,

தொகை நூலகள பரநதுபடட காலததன; அவற றுள பல பழைய

பாக்கள் தனித் தமிழர் மணம், வாழ்வு, இன்ன பிறவும் குறிப்பன. ஆதலின் அவை கி. மு. ௫00-க்கு முற்பட்டன வாகும் எனத் துணிந்து கூறலாம். மாபாரதச் செய்தி கள் பங்காளிகள் போராட்டங்களையும் சிறு சிறு அரசப் போர்களையும் (tribal wars) குறித்தலால், மாபாரத காலம்

கி. மு. க௫00-க000 என

கருதுகின்றனர் எனின்,

டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார்

அங்நிகழ்ச்சிகளையே தம்மகத்துப்

புறநானூறும் வரலாற்றுச் சிறப்பும்

க௫௫

பெரிதும் கொண்டுள்ள புறநானூறு, அகநானூறு றின் காலம் யாதென்று அறைவது?

இவற்

புறம், அகம், பதிற்றுப்பத்து முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்து - வரலாறு, மொழி முதலிய பலதிறத் துறைகளிலும் நின்று சாத்திரிய முறையில்[1] ஆராய்ந்து புலவர், அரசர் முதலியோர் காலங்களை உறுதிப்படுத்துதல்வேண்டும். இதற்கு இலங்கை வரலாற்று நூல்களையும், கிழக்கிந்தியத் தீவுகள் மலேயா இவைபற்றிய வரலாற்று நூல்களையும் நன்கு ஆராய்தல் வேண்டும்.

இம் முயற்சியே தமிழ்ப் பெரும் புலவர் பலரும் விரைந்து மேற்கொள்ளத் தக்கதாகும். தமிழர் வரலாறு ஆகிய கட்டடம், இம்முயற்சியால் வெளிவரும் பயனாகிய அடிப்படை மீதே கட்டப்படுதல் வேண்டும். அந்நாள் எந்நாள்?

---

1. Scientific Research.

# புறநானூற்றின் பரந்துபட்ட காலம்

## [கி. மு. 1000—கி. பி. 250]

| | |
|---|---|
| கி. மு. 1000 | —கி. மு. 1000 பாரத காலம்.<br>1. கோதமனார்.<br>2. உதியன் சேரலாதன். |
| கி. மு. 750 | —கி. மு. 600 வான்மீகியார். |
| கி. மு. 500 | —கி. மு. 500 வடிம்பலம்பநின்ற பாண்டியன் |
| கி. மு. 250 | -கி. மு. 300 மோரியர் படையெடுப்பு. |
| கி. பி. 1 | -கி. மு. 120—90 கரிகாலன் I<br>-கி. மு. 60—10 கரிகாலன் II<br>-கி. பி. 150—200 நெடுமுடிக் கிள்ளி, செங்குட்டுவன்.<br>-கி பி. 200—250 கோச்செங்கட் சோழன். |
| கி. பி. 250 | —சங்கத்து இறுதிக்காலம் (பல்லவர் வருகை) |

அளவு $\frac{3}{4}$ அங்.—250 ஆண்டுகள்

# ஏ. புறநானூறும் மன்னர்களும்

[வித்துவான் மு. இராசாக்கண்ணனார், பீ. ஓ. எல்.]

## க. தோற்றுவாய்

தலைமை சான்ற தலைவரவர்களே! தமிழ் நாட்டுப் பெரியோர்களே!

பிறந்த

வணக்கம். இதுகாறும் இன்பநெறி மேவிய அகநெறி வழியே மாநாடுகளைக் கூட்டி நம்மை மகிழ்வித்து வந்த நம் சென்னைச் சைவ சித்தாந்தக் கழகத்தார் போர்ப்புணர்ப்பு மிகும் இஞ்ஞான்று புறநெறிப் பெருமையையும் நாமெல்லோரும் கூட்டுண்டு களிக்க இப்புறநானூறு மாநாட்டையும் கூட்டியுள்ளார்கள். அவர் தமக்கு நம் நன்றி.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சென்னைக் கிளை முகவராய்த் தொண்டாற்றும் திரு. சுப்பையா அவர்கள் 'புறநானூறும் மன்னர்களும்' எனும் தலைப்பினைப் பின்பற்றி யான் சொற்பொழிவு ஆற்றவேண்டும் என்று விரும்பினர். அவர் வழியே யான் பேச மேற்கொண்ட பொருள், மிக விரிந்த அறிவு படைத்தோரே கைக் கொள்ளுதற்குரிய தொன்றாயினும், பண்டைத் தமிழ்ப் பெருமன்னரைப்பற்றி அழுத்தமுற எண்ணுதற்கும் ஏதேனும் சில சொல்லுதற்கும் வாய்ப்புத்தரும் நெறியதாக இஃதமைந்தமையின் தமிழன்னையை நினைந்தும் தமிழன்னையின் தவப்பெருஞ் செல்வராய்த் திகழ்ந்த சிவத்திரு ஞானியாரடிகளை உள்ளத்திருத்தியும் சில கூற முற்படுவல்.

புறநானூற்றின்கண் பேசப்பட்டுள்ள முடியுடை மன்னர் பலர்; குறுநில மன்னரும் கூறப்பெற்றுள்ளனர். மூவேந்தருள் சேரர் இருபதின்மருக்கு மேலும், சோழர் பதினைவருக்கு மேலும், பாண்டியர் பதினைவருக்கு மேலும் காணப்படுகின்றனர். இவர்தமைப் பற்றிய குறிப்புக்கள் பல உள; எனினும் கால வரையறைக்குட்படுத்தி இம் மூவகை மன்னரையும் பேசுவதென்பது இயலாததா யிருக்கின்றது. சில அறிஞர்கள் இவர்கள் வாழ்ந்த காலத்தை ஒழுங்கு செய்தற்கு முற்பட்டும் குறைபட்ட குறிப்பைக் குறித்தனர் என்னும் குற்றத்துட்பட்டனரே அன்றி ஒழுங்குற்ற நெறியை வகுத்தாரல்லர்.

காலத்தின் வழி வரலாற்றை ஒழுங்கு செய்தல் எனும் வழக்கம் மேல் நாட்டில் சென்ற நூற்றாண்டு தொடங்கி வளர்ந்து வருகின்றது. வரலாற்றிற் குரிய செய்தித் திரட்டுகளை நிரலே பெற்றுச் சிறக்கும் மேல் நாட்டார், உண்மை ஊக்கத்துடன் தாய்மொழி வழியே தாய்நாட்டில் வைத்த நன்மதிப்பினைச் சீர்பெறப் பெற்ற சீரியோராதலின் சிக்கற எழுதித் தருகின்றார்கள். நம் நாட்டிலோ செய்தித் திரட்டு இருளொளி பெற்றுத் திகழ் கின்றது; ஆய்ந்தெழுத முற்படுவோருக்குச் செந்தமி ழறிவும் வடமொழிப் போக்கும் தமிழ்மொழியின் வழி மொழிகளாக விளங்கும் தெலுங்கு முதலிய மொழிப் பயிற்சியும் இன்றியமையாதன ஆகின்றன. இவற்றை மறந்து முன்னேறி எழுதத் தலைப்படுவோர் உண்மை யுடன் இன்மையினையும் உடன்கலந்த உயர்ந்தோராவர்; ஆயின் வரலாற்றை வகைபெற யாம் காண்பது எப்போது?

மோகஞ்சதாரோ வெளிப்பாட்டின் பின்னர், இது வரை எழுதப்பட்டுப் படிப்பிக்கப்பட்டு வந்த திராவிட நாகரிக ஒழுங்குடன் பிணைந்த தமிழ்நாட்டுப் பண்டைய வரலாறு மாற்றி எழுதப்பட வேண்டிய அமைதியைப் பெறுகின்றது. வேத காலத்தில் வாழ்ந்த திராவிட மக்களின் வரலாறு முதலியவற்றை அவ் வேதங்களையே



சான்றாகக்கொண்டு துருவி உண்மை காணவேண்டியிருக்கின்றது! இத்தகைய பொறுப்புற்ற ஆக்க வேலைகளைப் பண்டைத் தமிழகமாய் இன்று வழங்கும் தமிழ் நாட்டில் வளர்ச்சியுறும் மூன்று பல்கலைக் கழகங்களும் ஏற்குமோ? அத்தகைய முயற்சியின் பெருக்கத்தினை இந் நாள்வரை கண்டிலோம். காணும் நாளும் உளதோ?

ஆதலின் தமிழ் நாட்டில் அன்புவைத்துள்ள தமிழர் அனைவரும் இம் முயற்சியில் ஈடுபட்டு முன்னேற வேண்டும் என்று ஒவ்வொருவரையும் வேண்டிக்கொண்டு என் தொண்டினை ஆற்ற முற்படுகின்றேன்.

மேற்கொண்ட தலைப்பிற்கிணங்க, அரசனின் இன்றியமையாமை, அரசுரிமை எனும் இரு பிரிவுகளையும் முகவுரையாகக்கொண்டு பேசப்புகும் யான் அரசரைப்பற்றிய மற்றவற்றை இரண்டு கூறுகளாகக் கொண்டுள்ளேன்.

முன்னது தன்னாட்டு வாழ்க்கை; பின்னது பகைமுக வாழ்க்கை. தன்னாட்டு வாழ்க்கையினை, தனிப் பண்புகள் குடிகளைப் புரத்தல், அரசியற் பொறை, அறநெறி, அறத் தவை, நாளோலக்கம் இறைபெறு நெறி, நீர்வளம் பெருக் கல், சுற்றம், நாட்டின் நலம், கொடைப்பண்பு, புலவ ரொடு பொதிதல், அடையாளங்கள், கடவுட்கொள்கை, வடக்கிருத்தலும் துறவறமும் எனும் சிற்றமைப்புகள் வழிப் பேச விழைகின்றேன்: அரசர்களே புலவர்களாய்ச் சிறந்து பாடிய பாடல்கள் பல காணப்படுதலின் அவை அரசரின் உறுதி கூறும் உயர்வு, அரசியற் பண்பு, இல் லற மாண்பு, கல்விப் பெருக்கம், புலவரோடு கலத்தல், நண்பரொடு நகுதல் எனும் பகுப்பின்வழிச் சிறிது நினைக்கப்படும். அடுத்துப் பகைமுகவாழ்க்கை, போர்க் காரணம், மன்னரின் வீர உணர்ச்சி, போர்க்கலப்பு, போர் இயன்ற நெறி, வீரரின் சிறப்பியல்புகள், பாசறை விளக் கம், போரில் தூது, பகைவர் நாட்டை நடத்தும் முறை எனும் பிரிவுபற்றிச் சிந்திக்கப்படும்.



## உ. மூகவுரை

### 1. அரசனின் இன்றியமையாமை:

பண்டைத் தமிழ் நாட்டில் ஐந்திணை மருவி வாழ்ந்த அருந்தமிழ் மக்கள் பயிரிடும் தொழிலைச் செவ்வனே அறிந்திருந்தனர். உடல் உண்டி முதற்று என ஓர்ந்திருந்தனர். நிலத்தை வளம்படுத்தி நிறைந்த பயிர்வளர்ச்சியைத் தருவது நீர் என்று தெளிந்திருந்தனர். இன்றியமையா நீரினால் மிகுதியும் இன்றியமையா நெல் முதலிய உணவுப் பொருள்களைச் சீருற வளர்த்துக்கொள்ளுங்கால் அவர்கள் பலவகை இடையூறுகளை அடைந்தனர். பகைவரும் தம்முள்ளே வலி மிக்க விலங்குணர்ச்சியாளரும், களவுத்துறை பயின்றோரும், கொடிய விலங்குக்கூட்டமும் உணவுக்காயவற்றைக் கெடுத்தும், சூறையாடியும், திருடியும், அழித்தும் துன்புறுத்துவதை நீக்கிக்கொள்ள வேண்டிய நிலைமை அவர்கட்கு வந்தது. நீள நினைந்து, துணிந்து, அதன் வழி உறுதியுற நிற்கும் அவ்வறிஞர், வரும் இடையூறுகளுக்கு இடையூறு செய்து தடையாய் நிற்கும் தனித் தலைவன் ஒருவன் வேண்டும் என்று கருதினர். அவ்வண்ணம் உடலாற்றல் அறிவாற்றல் காத்தற்பண்பு முதலிய மேம்பட்டு நிற்கும் வீர வினைஞனை வேண்டினர். அத்தகுதிகள் அமைந்தோனையே காவலன் எனக் கண்டனர். இக்காவலன் என்ற சொல்லொன்றே அவர் தம் கருத்தினை அறிவுறுத்தி நிற்கும். இங்ஙனம் அரசனின் இன்றியமையாமையை உணர்ந்தனர் நம் பண்டைய மூதாதையர் என்பது மோசிகீரனார் முழுமுதற்பாட்டால் (புறம் : ககூ) அறியக்கிடக்கின்றது.

## 2. அரசுரிமை

அரசுரிமை தலைமுறை தலைமுறையாக

அரசனின்
மூத்த மகனுக்கு வந்துகொண்டிருந்தது என்பது,

"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால்[1]தர வந்த பழவிறல் தாயம்"
(புறம்: எ௫)

என்னும் வரிகளால் விளங்கக் கிடக்கின்றது.

---

1. பால் - விதி.



## ௩. தன்னாட்டு வாழ்க்கை

### 1. தனிப் பண்புகள் :

எவர் எத்துணை துன்பம் தனக்கிழைப்பினும் அதனை ஏற்றுக்கொண்டு கலங்கா நிலையுடன் நிற்பது நலம்; அத்

தகைய
தனர்.

பொறுமைக் குணத்தினை அரசர்கள் பெற்றிருந்
பகை மன்னரின் அறிவிலாப் பிழைகளையும்
தம்மைச் சார்ந்தோரின் தவறுகளையும் பொறுத்தல் மன்னனின் மாண்பாகும். தாமப்பல் கண்ணனூர் எனும் புலவரும் சோழன் மாவளத்தானும் வட்டாடிய போழ்து பின்னவன்

வட்டுக் கொண்டெறியப் புலவர், 'நீ சோழன் மகன் அல்லன்; நின் பிறப்பில் ஐயமுடையேன்' எனக் கடுஞ் சொல்லும் சுடு சொல்லும் கூறியவிடத்தும், சோழன் தான் தவறிழைத்தாற்போன்று நனி நாணி பொறுமைப் 'பண்பின் பேரெல்லையாய்த் திகழ்ந்து அரசர் மரபில் பிறந்தோர்க்குப் பொறுக்கும் இயல்புண்டு என்பதை விளக்கி

னமை காண்க. மிக்க வலியுடையது வளி; அவ்வாறே மனவலி, படைவலி, 'தோல் பெயரிய எறுழ் முன்பு' ஆகியவற்றைப் பெற்றிருந்தனர். தொட்டன அனைத்தையும் சுட்டெரிக்கும் தொழிலினது தீ; அங்ஙனமே அடங்காப் பகைவரை அவரடங்கத் தலைச்சென்று அழித்தொழித்த மாண்பினர் அவர். நீரினும் தண்ணியது ஒன்றில்லை; காவலரின் கண்ணோட்டமும், அன்பும், குடி மக்களிடத்தே காட்டும் அருளும் நீரின் நீர்மையைப் பெற்றுத் திகழ்ந்தன.

அரையன் தன்னை வழிபட்டுத் தன்முன் நிற்போர் தன்மையைத் தக்கவாறு அறிந்து அவர்களுக்கு அருள் செய்தான். பிறரைப்பற்றிக் கோள் சொல்லுவோருடைய இழிந்த அறிவை வெறுத்தான். தான் செய்த செயல்கள் எல்லாவற்றையும் சீர்தூக்கித் துணிந்து செய்தான்.

"நாம் பெற்ற அரசுரிமையாகிய தாயம் நமக்குப் போதும் என்று அடங்கியிருந்தால் அழகிதோ? பெற்ற இடம் சிறிது. இச் சிறிய இடத்தில் என் குடிமக்கள்

அடங்கி ஒடுங்கி நசுக்குண்டு வளர்ச்சியற்றுச் சாதலேயோ யாம் கண்டுகொண்டிருப்பது? மேலும் புதிய புதிய இடங்களில் இக் குடிமக்களைக் குடியேறுமாறு செய்து இவர்களைச் செழிப்புற வாழ வைத்தல் வேண்டும். ஆகவே, அவர்களுக்கு வேண்டும் நலன்களைத் தரும் நிலங்களைத் தருதல் வேண்டும். இதுவே யாம் செய்ய வேண்டிய செயல்" (புறம்: எரு) என்பன போன்ற உணர்ச்சி அவர்களின் உள்ளத்தை ஊக்கி வீரத்தை ஒளிரவிட்டு அழியாப் புகழை ஈந்தது. கபிலரின் பொன்னன்ன மெய்யுரையும் (புறம்: அ) இக் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றது. இவ்வுணர்ச்சிகளே, இம் மன்னரைத் தென்னாட்டுள் அடங்கி, விரிந்த அரசெல்லையைக் குறுக்கிக் கொள்ளுமாறு செய்த வடவரொடு அடிக்கடி போரிட்டு முன்னேறும் வண்ணம் தூண்டின போலும்!

## 2. குடிகளைப்புரத்தல்:

தாய்ப்புலி தான் உயிரோடு வாழும்வரை தன் குட்டியைப் பிறர் கொண்டுபோக விடாது; தன் உயிரை இழந்த பின்னரே தன் குட்டியை இழக்கும். இவ்வாறே அரசரும் தாம் உயிருடன் வாழும்வரை தம் குடிமக்களைப் பிறருக்கு அடிமையாக வாழ விடார். (புறம்: சஉ)

இக்காலத்திலே மக்களின் உரிமை அரசியல் (ஜன நாயகம்) சிறப்புறப் பேசப்படுகின்றது. அதன் நிலைத் துக்காகப் பெரிய நாடுகள் முற்படுகின்றன. ஒருவனின் தனியாட்சி, கொடுங்கோலாட்சி எனக் கருதப்படுகின்றது உண்மையே. பழந் தமிழகத்தில் அரசியலே சிறந்த தாயினும் தனியொரு அரசனின் விருப்பு வெறுப்புகட்கு மக்கள் அத்துணை பேரும் கட்டுப்பட்டு வாழ்ந்தார்களல்லர். அத்தகைய கொடிய நிலைமை பெரும்பாலும் எழவில்லை. ஏன்? காவல், 'குழவி கொள்பவரின்' கொள்ளப்பட்டு வந்தது. இளங் குழவியின் உடல்நிலை அறிந்து ஏற்ப வளர்க்கும் அறிவுடைய தாயாரைப் போன்று அரசன் சிறந்தான். முறை வேண்டியோர்கு அரசன் எளிமையாக

வெளிப்பட்டமையின் காலத்தில் பெய்த மழையை யுண்டு மகிழும் பயிரினம் போன்று மக்கள் மகிழ்ந்திருந்தனர். 'எண் பதத்தனுய்' அரசனிருந்தான். ஆதலின் அரசனேக் கண்டு தம் குறையைக் கூறுதற்குக் குடிமக்கள் பலநாள் காத்துக் கிடக்கவில்லே. 'அரசர் யாம்' என்ற தலேவீக்க மும் 'குடிகள் பிறர்' என்ற இழிவு நோக்கமும் எங்கும் தலேகாட்டவில்லே. குறையுடன் வந்தார்க்கு இன்சொல் வழங்கும் இயல்பினனுய் இருந்தனன் மன்னன். அவன் தன் திருமுகம் கோடு கூடும் முழுமதியம் போன்று அருள் நிலவை வழிந்தோடச் செய்து தண்ணளி செய்தது. **அந்தோ! தமிழ்நாடே! நீ மீளவும் இந்நிலைய வீறுறு வேந்தரைப் பெறுவைகொல்!**

வரலாற்று வல்லுநர் எனப் பெயர் பெறும் அறிஞர், "மனுவெனும் மன்னன் கறவைக்கும் முறை வழங்கினனே? சிபி எனும் சீரியோன் புறவுக்கும் அறநெறி காட்டினனே? இவை புலவர் தம் பொய்யெனும் அளறில் பூத்த நறுந்தாமரை மலர்களே! இவை வரலாற்றுக்கு ஒவ்வா" என ஒருபுறத் தொதுக்குகின்றனர். "கரிகாலன், இமயவரம்பன், செங்குட்டுவன் முதலிய திண்ணிய வேந்தரின் வடநாட்டுப் படை எழுச்சியிலும் தம் ஐயத்தை வீறுற எழுப்பும் இம் மேதையோர் இவ்வண்ணம் கூறுதலில் குற்றம் என்ன இருக்கின்றது?" என்று தங்களுக்குள் பெரும்பாலோர் எண்ணலாம். நிற்க, முதற் கூற்றினை ஆழ எண்ணுவோமாயின் மக்களினும் வேறுபட்ட அறிவு குறைந்த பிறவற்றின் மாட்டும் அரசர் தம் கண்ணேட்டத்தையும் அன்பின் பெருக்கையும் காட்டிப் போதந்தனர் எனும் உண்மை வெளிப்படாமல்

போகாது. அதனாலன்றே குறுங்கோழியூர்கிழார் இரும்பொறையை நோக்கிப் பாடுங்காலத்தில் 'உலகத்தின்கண்ணே நிலைபெற்று வாழ்கின்ற உயிர்களெல்லாம் தாம் தாம் அரசனிடத்து வைத்த காதலால் அவனுக்கு ஏதேனும் துன்பம் வருமோ என்று அஞ்சுகின்றன' எனக் கூறுவாராய், "மன்னுயிரெல்லாம் நின்னஞ்சுமே" என்கின்றார்.



3. அரசியற் பொறை:

கடற்கரையிடத்து உப்பங்கழியின் நீரான் உப்பு விளைகின்றது. வன்மை அமைந்த பகடுகள் பூட்டப்பெற்ற சகடை அவ்வுப்பினை முகந்து செல்கின்றது. அச் சகடையோ மலைநாட்டை நோக்கிச் செலுத்தப்படுகின்றது. செல்லுங்கால் சகடையின் ஆரைகள் மண்ணுள் குழி பாய்ந்து பகடுகளின் செலவுக்குத் தொல்லையை விளைக்கின்றது. மேலும் ஈர்த்துச் செல்லகில்லேம் எனப்பகடுகள் எண்ணி வாளாநில்லாது தம் உடல்வன்மை முழுவதினையும் பயன்படுத்தி முன்னேறிச் செல்கின்றன. பகடுகளை ஒத்தனர் அரசர். அவர், அரசியலாகிய சகடை அதன் இயல் நெறியில் தம்மை அழுத்தி நசுக்கினும் அஞ்சாது அவலம் மேற்கொள்ளாது ஆக்கத்துடன் முன்னேறுகின்றனர். இக்கருத்து உறையூர் மருத்துவன் தாமோதரனால் (புறம்: சுO) விளக்கப்படுகின்றது.

4. அறநெறி:

களிற்றுப்படை, கதழ்பரிய கலிமாப்படை, நெடுங் கொடிய நிமிர் தேர்ப்படை, நெஞ்சுடைய புகல் மறவர்ப் படை ஆகியவற்றைப் பெற்றோரேனும் மாட்சிமையுற்ற அற நெறியின்றேல் அவர் உண்மை வெற்றியை எய்தியோராகார். அறநூலறிவும் முந்தையோர் அந்நெறிவழி ஒழுகிக் காட் டிய பெருவழி ஒழுகும் பண்பும் அமைந்தோரே அரசராதற் குச் சிறந்தோராயினர். நெஞ்சு நேர்ந்த நல்லன்பராயினும் குற்றம் செய்யின் கோல் கோடாது குற்றத்திற் கேற்பத் தண்டித்தனர். அயலாராயினும் அவர்பால் குணம் உண் டென்று ஓர்ந்த ஞான்று அத் தகுதியை மதித்தனர். கதிரோனைப் போன்ற வெய்யதிறலையும் வீரத்தையும் திங் களைப் போன்ற குளிர்ந்த பெரிய மேன்மையினையும் மழை யைப் போன்ற வண்மையையும் பெற்று வாழ்ந்தனர்.

**5. அறவோர் அவை :**

அரசர்களே

களையும் கேட்டு

மக்களிடை உண்டாகும் எல்லா வழக்கு

நீதி வழங்கப் போதுமான காலத்தைப்

பெறமாட்டார். ஆதலின் அறத்தவைகளும் தொழிற்பட்டு வந்தன. இவ் வவையில் அறநூல் வல்லார் குழு விளங்கிற்று. இக் குழுவினர் ஞெமன்கோ லன்ன நடுநிலைமை பெற்றுச் சிறந்தனர். அவர் கூடிய இவ்வவை "அறமறக் கண்ட நெறிமாண் அவையம்" என்று பேசப்படுகின்றது.

'அறம் துஞ்சு உறந்தைப்'[1] 'பொருநன்'
'மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து

அறம் நின்று நிலையிற்றாகலின்'
என்பனவற்றால் உறையூரில் சோழர்
புலனாகும்.

அறத்தவை இருந்தது

இக்குழுவினர் அரசனால் தேர்ந்தெடுக்கப் படுவோர் என்பதும், அவர் நீதியினின்றும் வழுவின் அவ்வழுவினால் வரும் பழி அரசனையே சாரும் என்பதும் அத்தகைய சார்ச்சி மன்னனின் செங்கோலைக் கொடுங்கோலாக்கும் என்பதும்

'அறநிலை திரியா அன்பின் அவையத்து
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக'

எனும் தலையாலங்கானத்துச் செருவென்ற
கூற்றால் அறியப்படும்.

நெடுஞ்செழியன் 6. நாலோலக்கம் :

அரசர் ஒவ்வொரு நாளினையும் பங்கீடு செய்து அதற்கேற்ப ஒழுகி வந்தனர் என்பது புலப்படுகின்றது! ஒரு நாளில் முதற்பத்து நாழிகைகள் கல்வி, வழிபாடு முதலிய அற நிலைகளில் ஒழுகினர். அடுத்த பத்து நாழிகையில் முறை புரிந்தனர்; அன்றியும், எளியோர்க்கும் இரவலர்க்கும் புலவர்க்கும் பிறர்க்கும் தான் செய்த பொருளையும் பகைவேந்தர் பணிந்து தந்த திறைப்பொருளையும் ஓம்பாதீவர். இது கடும் பகல் தேர்வீசிருக்கை, நாளவை, பாண்மகிழிருக்கை எனப் பேசப்படுகின்றது.

1. உறந்தை - உறையூர்.





## 7. இறை பெறும்நெறி :

அரசரின் கடமை குடிமக்களைப் புரத்தல். குடிமக்களின் நலம் கருதிப் படை முதலியவற்றை வைத்திருக்க வேண்டியவராகின்றார் மன்னராதலின், ஆகும் செலவிற்குத் தம் குடிமக்களை எதிர்பார்க்க நேர்கின்றனர். இத்தகைய செலவிற்கென வரிக்கப்பட்டு அரசனுக்குத் தரப்பட்டது வரி. அது குடிமக்களைப் புரத்தல் காரணமாய் எழுந்தமையின் புரவு எனப்பட்டது. அரசனிடத்துக் குறித்த காலத்தில் இறுக்கப்படவேண்டிய தானமையின் இறை எனப்பட்டது. அரசர் தம் கடமைகளைச் செவ்வனே செய்தற்கு முழுத் துணைபுரிந்தமையின் கடமை என்றியம்பப் பெற்றது. அரசர்கள் இறைபெறு நெறி யறிந்து பெற்றனர். ஆண்மை நிறைந்த மன்னன் கொடுவரியைக் கொள்ளான்; பெறின் அவனது ஆண்மை கூர்மையை இழக்கும் என்பதைக் "குடிபுரவு இரக்கும் கூரி லாண்மை" என்னும் தொடர் அழகாக விளக்கிக் காட்டுகின்றது. பிசிராந்தையார் அறிவுடை நம்பியாகிய பாண்டியனிடம் சென்று வரியை நெறியறிந்து கொள்க என்று வற்புறுத்தினமை ஈண்டு எண்ணுதற்குரியது.

**8. நீர்நிலைபெருக்கல் :**

ஒரு நாடு நன்னாடாய் விளங்கல் வேண்டும் எனின் நாட்டில் வாழும் குடிமக்கள் உணவுக் குறைவின்றி வாழ்தல் வேண்டும். உணவே மக்களுக்கு உயிர். உணவுப் பொருளை ஆக்கும் வன்மையது நீர். குழிந்த நிலத்தில் நீரை ஒன்று கூட்டினாலன்றி நெல் முதலியவற்றை வித்தி உணவுப் பொருளை ஆக்கிக் கொள்ளல் இயலாது. ஆதலின் நீர்வளம் பெருகச் செய்தோரே கடமை உணர்ந்த அரசராவர். இதனைச் செவ்வனே உணர்ந்த அரசர் நீர்வளம் பெருக்கினர். சோழன் நலங்கிள்ளியை,

> 'புனிறுதீர் குழவிக் கிலிற்று[1] முலை போலச்
> சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
>
> மன்பதை புரக்கும் நன்னாட்டுப் பொருநன்' (புறம்: சுஅ)

---

1. இலிற்றும் - சுரக்கும்.

எனக் கோவூர் கிழார் குறிக்கின்றனர். வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வள வனைச் சிறப்பிக்குங்கால் அவனது நாட்டைப் புகழ்வாராய் "அந்தண் காவிரி வந்து கவர்பூட்ட" என்கின்றனர். இவை நமக்கென்ன அறிவிக்கின்றன? முன்னது ஈன்ற அணிமை யோடு கூடிய குழவிக்கு உயிரை நல்கும் உணவாய் அதன் உடல் நிலைக்குத் தக ஊட்டப்படும் தாய்ப்பால் போலக் குடிமக்களின் உணவாம் விளை பொருள்கள் விளைதற்குத் தக நீரைச் சுரக்கின்றது காவிரி. எவ்வாறு? பல கால்வாய் களாய் ஓடி நிலத்துப் பாய்ந்து பயிருக்கு உயிர் கொடுக் கின்றது. இவ்வண்ணம் நீர்வளம் பெருக்கியோர் நமது மூதாதையாராம் பண்டைத் தமிழ் மன்னர்.

## 9. சுற்றம் :

அரசனுடனிருந்து அவனுக்கு ஆயவற்றை அறிந்து உறுதுணையாய்ச் சிறந்தோர் உழையர் ஆவர். இவர் இடைவிடாது எக்காலத்தும் அரசனைச் சுற்றி நின்றமையின் சுற்றம் எனவும் கூறப்படுகின்றனர். தம் நிலையினின்று சிறிதும் மாறுபடாப் பெருமையினால் இவர் 'திரியாச் சுற்றம்' என்று சொல்லப்படுகின்றனர். 'பால் புளிப்பினும் பகல் இருளினும், இயற்கை அல்லன செயற்கை தோன்றினும்' அறநெறியினின்றும் வழுவாதோர் இவர். அரையன் தவறிழைக்க நேரின் அஞ்சாது உறுதியை உரைக்கும் சான்றோராகிய இவர் கற்கவேண்டும் அரசியல் நூல்களைக் கற்று, உலக வழக்கினை ஓர்ந்து, அடக்கம் முதலிய நற்பண்புகள் சிறந்து, இறை நூல் மாட்சியையும் எய்திய இன்னோரை "ஆன்ற கொள்கை அடங்கிய கேள்வி, நான்மறை முதல்வர்" எனக் குறித்தனர். "வரிசை அறியாக் கல்லென் சுற்றம்" என்பது, அரசன் விரும்புவனவற்றையே தாமும் விரும்பிக் கூறி அவனைத் தீநெறிக்கு உட்படுத்திய அமைச்சர் இகழப்பட்டார் என்பதனை விளக்கும்.



## 10. நாட்டின் நலம் :

நீர்வளம் நிலவளம் சிறந்து சான்றோரும் விரும்பி உறையும் வண்ணம் நாடு உயர்ந்து நின்றது. ஒரு களிறு படுத்துறங்கும் சிறிய இடத்தில் விளைந்த விளைபொருள்கள் ஏழு யானைகளுக்கு வேண்டும் உணவாயிற்று.

"ஒரு பிடி படியும் சீறிடம்[1]
எழுகளிறு புரக்கும் நாடு கிழவோயே"

என்று கூறும் வரிகளால் நாட்டின் நலம் நன்கு விளங்குகின்றது. விளைபொருள்கள் மலிந்து "நெல்லும் நீரும் எல்லோர்க்கும் எளியன" வாக நிறைந்து செழித்தமையால் வருகின்ற விருந்தினர்க்கு வேண்டும் உணவைத் தந்து அவர்கள் உண்டு மகிழ மக்கள் கண்டு மகிழ்ந்தனர் என்பது,

"வன்புலக்[2] கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல[3] வைப்பின் நன்னாட்டுப் பொருந"

என்பனவற்றால் விளக்கமுறுகின்றது. கவலை இன்றி வாழும் விண்ணுலகத்து மக்களைப் போன்று இந் நில மக்களும் மகிழ்சிறந்தனர் என்பதை 'நாடு, புத்தேளுலகத் தற்று' என்பதால் அறிகின்றோம். இங்ஙனம் வளம் பெருக்கி விருந்தருத்தித் துன்ப மகற்றி அரசர், பிறர் வாழ வாழ்ந்தனர்.

## 11. கொடைப் பண்பு:

அரச மரபின் பிறவிக்குணமாக இக்கொடைப் பண்பினைக் காண்கின்றோம். எங்கும் கொடுத்தல் எய்திய இசைமையான் அரசர்கள் பாராட்டப்படுதலைப் பார்க்கின்றோம். சிலர் தக்க பரிசு தரவில்லை எனும் குறிப்புக்கள்

1. சீறிடம் - சிறிய இடம்.
2. வன்புலம் - மலைநிலமும், காட்டு நிலமும்.

3. மென்புலம் - வயல் நிலமும் கடற்கரை நிலங்களும் ; மென்புலவைப்பின் என்றது, மென்புலத்து ஊர்களை.



தோன்றினும் மிகுந்த நிலையினதாக இஃதில்லை என்னலாம். தம்மைச் சார்ந்தோர் விரும்புவனவற்றை அவர் கூறும் முன்னர்த் தாமே ஈந்தனர். பகைப் புலத்தோர் தந்த திறைப்பொருளை இரவலர் பாணர் விறலியர் முதலியோர்க்குத் தந்தனர்.

"............பரிசிலன் இவன் என
நெய்யுறப் பொரித்த குய்யுடை[1] நெடுஞ்சூடு
மணிக்கலன் நிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு

மாரி அன்ன வண்மையிற் சொரிந்து"

என்பவை, நெய்யில் பொரித்த உணவு, தேறல், கலிங்கம் ஆகியவற்றைக் கைம்மாறு கருதா மாரியை யொத்து வாரித் தந்தனர் என்பதனை அறிவிக்கும்.

"தன்பெருமையின் தகவுநோக்கிப்

குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையும் நிறையென்கோ

மனைக்களமரொடு களமென்கோ

ஆங்கவை, கனவென மருள வல்லே[2] நனவின்
நல்கி யோனே நசைசால் தோன்றல் ”

(புறம் : ௩௮௭)

எனும் குண்டுகட் பாலியாதனார் கூற்றால் களிறு, மா, நிரை, களமரொடுகளம் ஆகியவற்றைத் தன் பெருமையின் தகுதி நோக்கிக் கனவோ நனவோ என மருட்சி எய்த மன்னர் ஈந்தனர் என்பதனை அறியலாம். சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் கொடையுணர்வு நம் உள்ளத் தெல்லையையும் இறந்து நிற்கின்றது. அவன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியொடு போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்து கிடக்கின்றான். அவனைக் காணுதற்குக் கழாத்தலையார் எனும் புலவர் அவண் வருகின்றார். அவனைப் போர்க்களத்தில் காணுதல் அவர் நோக்கமே அன்றிப் பரிசு பெறுதல் அன்று; எனினும் எந்நாளும் புலவர்க்குப்

1. குய் - தாளிப்பு. 2. வல் - விரைவாக.

பொருள் தந்து போற்றிய அப் புகழோன் உயிர் நீங்கும் நிலையில் போர்க்களத்துக் கிடந்த அக்காலத்தும் தன் கழுத்திலிருந்த முத்தாரத்தை ஈந்தனன் என்றால், உயிர் நீங்கும் அளவும் அரசர் இப் பண்பினின்றும் மாறியோ ரல்லர் என்பது புலனாகின்றதன்றோ?

## 12 புலவரொடு பொருதல்

ஒரு குடிப்பிறந்த நலங்கிள்ளி, கிள்ளிவளவன் எனும் சோழமன்னர் தம்முட் பொருதுநின்ற காலத்துக் கோவூர் கிழாரின் பொன்னுரையால் தம் பகையுணர்வை அவிக்கின்றனர். மலையமானைத் தோற்கடித்து அவன் குழந்தைகளைச் சிறைசெய்து கொண்டு வந்து யானைக்காலி லிட்டுச் சிதைத்தற்கு முற்பட்ட குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கோவூர் கிழாரின் அறிவுரையைக் கேட்டுச் சினம் தணிந்து தன் கொடுஞ் செயலை விலக்கினான். நற்றமிழ் முழுவது மறிந்த பண்பால் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும்பொறை தவறி முரசுகட்டி லேறித்

துயின்ற மோசிகீரனைக் கொல்லாது விடுத்தான். இவ்வாறு பல நிகழ்ச்சிகள் அரசர் புலவர்பால் பெருமதிப்புக் கொண்டிருந்தமையை அறிவிக்கின்றன. ஆகவே, அறிவு உருவாய்த் திகழும் அருந்தமிழ்ப் புலவரொடு பொதிந்து அவர்தம் கட்டுரைவழியே வாழ்ந்த தகுதி, பண்டைப் பெருமன்னர்க் குண்டு. அரசரும் புலவரும் பின்னிய அன்பினராக வாழ்ந்தமையின் ஒருவரைவிட்டொருவர் வாழ்தலாற்றாராய் உயிர் துறந்தனர் எனும் செய்தி நம் நெஞ்சை உருகச்செய்கின்றது.

## 13 அடையாளங்கள் :

முடி, செங்கோல், முரசு இவை அரசர்க்குச் சிறந்த அடையாளங்களாம்.

"வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்றோ அன்றே, வருந்திய குடிமறைப் பதுவே" என்பது குடை அரசனுக்கு உண்டாம் ஞாயிற்றின் வெம்மையைத் தடுக்க

அமைந்தது அன்று; குடிகளின் வருத்தமுற்ற நிலையை நீக்கி நிழல் செய்தற்குக் கொள்ளப்பட்டதாகும் என்பதை விளக்கும். பகைவரானும் கொடியோரானும் வரும் வெம்மையைப் போக்குபவன் அரசன் என்ற கருத்தைப் புலப்படுத்திக்கொண்டு 'வெயில் மறைக்கொண்ட உரு கெழு சிறப்பின், மாலைவெண்குடை' எனும் தொடர் விளக்குகின்றது. 'குடை மண்ணகம் நிழற்ற', 'மாலை வெண்குடை நிழலான், வாண்மருங்கிலோர் காப்புறங்க' எனும் வரிகள் மேற்கூறிய கருத்தினை வலியுறுத்தும்.

செங்கோல், அரசனின் செந்நெறித்தாய பண்பினை விளக்கிக்கொண்டிருக்கும் ஓர் அடையாளம். இக் கோல் அழகிய செம்மணிகளாலும் இடையிடையே பதிக்கப் பெற்ற பிற நன்மணிகளாலும் அழகு தரும் ஓர் அணி அன்று. செங்கோலில் அறம் அசைந்து கிடக்கின்ற தென்று கூறப்படுகின்றது. அறக் கடவுளே மேவி ஆராய்ந்தாற் போன்ற ஆராய்ச்சியை உடையது செங் கோல் என்று அறிவிக்கப்படுகின்றது. மெலிதலும் நலி தலும் இன்றிக் குடிமக்களைக் காப்பது என்று கூறப்படு கின்றது. செம்மை சான்ற செங்கோல் உள்ள இடத்து வேந்தன் அல்லவை செய்யாது காப்பான் எனும் கருத் தினைச் சான்றோர் பல்குவர் என்று சாற்றப்படுகின்றது. நமரெனச் சார்பு பற்றி ஒருபாலமையின் கோல் கோடும் என்று வலியுறுத்தப்படுகின்றது. அறநெறிய மக்கள் அறத்தின் திண்மை கண்டு புகழ்ந்துரைப்பர் என்று போற்

றப்படுகின்றது. அரசின் செல் நெறியைக் குலைக்கும் கொடிய பகையைக் கடிவதும் குடிமக்களின் கலக்கத்தினைத் தவிர்ப்பதும் ஆகிய பிற செங்கோலின் பண்புகள் என்று பகரப்படுகின்றது. இக் கருத்துக்களைப் பின்வருவன விளக்காநிற்கும்.

"அறம் துஞ்சும் செங்கோல்" (புறம். ௨0)

"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டம்" ( „ ௩௫). "மெலிவில் செங்கோல் நீ புறங்காப்ப" ( „ ௬௨)

௧௭௨ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

"கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி" (புறம். ௧௧௭)

"நமரெனக் கோல் கோடாது" ( „ ௫௫)

"அறவோர் புகழ்ந்த ஆய்கோலன்" ( „ ௨௨௧)

"விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்" ( „ ௨௩0)

'பணை கெழு செல்வர்', 'முரசு கெழு செல்வர்' என அரசர்களை முரசுடன் இயைத்துப் பேசுவதைப் பெருவழக்காகக் காண்கின்றேமாதலின் முரசும் அரசரின் அடையாளப் பொருள்களுள் ஒன்று என்பது தெளிதற்பாற்று. 'இமிழ்குரல் முரசம் மூன்றுடனாளும்' என்று அரசர்கள் குறிக்கப்படுவதனால் மூவகை முரசுகளையும் மன்னர் பெற்றுச் சிறந்தனர் என்று அறிகின்றோம். அவை மூன்றும் முறையே அவர்தம் வீரத்தையும், முறை புரியும் நெறியினையும், ஈகையினையும் விளக்கி வந்தன. போர்க்களத்தில் ஒருவனை வெல்லும் மற்றொருவன் அவன் அடையாளமாகிய முரசினையும் வௌவுவான் என்பது 'அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு, ஒருங்ககப் படேஎ னாயின்' என்னும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கூற்றால் தெரிகின்றது.

## 14. கடவுட் கொள்கை :

> "பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே"

எனும் வரிகள், அரசர்கள் உலகெலாம் புரக்கும் தனி முதல்வன் இறைவன் என்பதை ஓர்ந்து அவன் திருமுன்னர் வணங்கி வாழ்த்தி வழிபட்டு வந்தனர் என்பதைத் தெரிவிக்கும்.

## 15. வடக்கிருத்தலும் துறவறம் மேற்கொள்ளுதலும் :

போரில் முதுகில் புண்படின் அதனைப் புறப்புண் என்று இழித்தனர். வேல் தன்மேல் எறியப்படுதலைக் காணுங்கால் அதன் வருகைக்கு அஞ்சிக் கண்ணிமைத்தலை யும் தோல்வி என்று கருதிய அன்னோர் புறப்புண்ணை ஆற்றுவரோ; ஆற்றார். அப் புண்வழித் தம் உயிர் ஓட



வில்லையேல் வடக்குநோக்கியிருந்து ஒன்றும் கொள்ளாது உயிர் விடுத்தனர். துறவறம் மேற்கொண்டோரும் உண்டு.

## ௬. அரசரின் வாய்மொழி

எஞ்ஞான்றும் புலவரொடு பொதிந்து வாழ்ந்த புரவலரும் எழுமையுந் தொடரும் கல்வியறிவில் அழுந்தி வாழ்ந்தனர். கல்வியை நிலைகண்டுணர்ந்த நேரியோராக அவர்களைக் கூறுதல் மிகை ஆகாது. செந்தமிழ் நலம் கனிந்த சீரியோராகக் கோப்பெருஞ்சோழன், சேரமான் கணைக்காலிரும்பொறை, சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சியமாக் கோதை, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் நல்லுருத்திரன், சோழன் நலங்கிள்ளி, தொண்டைமான் இளந்திரையன், பாண்டியன் அறிவுடை நம்பி, பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி முதலியோரைக் காண்கின்றோம். அரசரின் மனைவியாரும் அருங்கலை அழகியாகத் திகழ்ந்தனர். பூதப்பாண்டியன் இறந்த பின்னர் அவன்தன் மனைவியாகிய பெருங்கோப்பெண்டு அவனுடனுடனிருந்து எரிந்து அவனுட னொன்றாக விரும்பிய விருப்பத்தைத் தடுக்க வந்தோரை எதிர்த்துரைப்பதாக அமைந்துள்ள பாடல் ஒன்று போதுமன்றோ சான்றெனத் திகழ! அரசரின் உறவினராய்த் திகழ்ந்தோரும் கல்வி என்னும் வல்லாண் சிறவனுடன் அல்லும் பகலும் விளையாடி மகிழ்ந்தனர்.

இவ்வரசரே பாடியுள்ள பாடல்களின் கருத்துக்களைத் தொகுத்துக் காண்போமாயின் அவை, உறுதி கூறும் உயர்வு, அரசியற் பண்பு, இல்லற மாண்பு, கல்விப் பெருக்கம், புலவரொடு பொலிதல், நண்பரொடு நகுதல் ஆம் பல இயல்புகளை விளக்காநிற்குமாதலின் அவர்களின் சொல் வழியே அவற்றைச் சுருங்கக் காண்போம்.

இவ்வுலகம் எதனுல் வாழ்கின்றது? சாவாது வாழ வைக்கும் அமிழ்தெனும் மருந்து இறை இயைபிஞலேனும் தவமாண்பிஞலேனும் கிடைக்கப் பெறின் அதனைத் தனித் துண்ணுது பிறருக்குப் பங்கீடு செய்வோர், பிறமக்களை வெறுக்காத நல்லியல்பினர், மற்றவர் அஞ்சுவனவற்றிற்குத் தாமும் அஞ்சுவோர், அஞ்சுதற்குரியன தாமே ஒழியுமள வும் மடிந்திராது முன்னேறி நீக்குதற்குத் தலைப்படுவோர், அழியும் உடல்கொண்டு அழியாப் புகழ் எய்துதற்கு முடியு மாயின் புகழ் விரும்பி உயிரையும் கொடுப்போர், உல கெலாம் ஒரு சேரக் கிடைப்பதாயின் பழிவழி வரின் பழிக்கு நாணி வெறுப்போர், அவலம், கவலை, கையாறு, அழுங்கல் ஆம் பிறவாய உடலில் தோன்றும் ஒழியாத் தொல்லைகட்குச் சிறிதும் இடம் தராது ஆண்மையுடன் முன்னிற்போர், தமக்கென வாழாது பிறர்க்கென வலிய முயற்சியை மேற்கொண்டு வாழ்வோர் ஆகிய இத்தகை யோர் வாழ்வதனுல்தான் உலகம் வாழ்கின்றது. இங்ஙனம் கட்டுரைக்கும் அறிஞர் இளம்பெரு வழுதியாரின் கருத்துக் களை நோக்குமின்கள்.

'உலகத்தில் பிறந்த ஒவ்வொருவரும் நாள்தோறும் நல்வினையைச் செய்தல் வேண்டும். அச் செயல் அறிவினை விளக்கி உள்ளத்தில் தூய்மையை உண்டாக்கும். நல்வினை யைச் செய்வேமோ அல்லேமோ என்று எண்ணி எண்ணி உறுதிப்பாடு எய்தாதவர் உயர்வினை எய்தார். யானையை வேட்டையாடச் செல்பவன் எளிமையாக யானையைப்

பெறுதலும், குறும்பூழ் வேட்டுவன் வறுங்கை வருதலும் இயல்பு. ஆதலினால் எஞ்ஞான்றும் வினைசெய்யும் முயற்சியை மேற்கொண்டு அவ் வினையும் நல் வினையாய் உள்ளதாக் கண்டு மிக உயர்ந்த இலக்குடன் முற்படுதல் வேண்டும். அவ்வண்ணம் முற்படுவோர் உம்பர் உலகத்தின்கண் இன்பம் துய்த்தலும் கூடும். அவ்வுலக நுகர்ச்சி இல்லையாயின் மாறிப் பிறத்தலிலே கூடும் பிறப்பின்கண் இன்மை எய்தவும் கூடும். மாறிப் பிறவார் எனினும் உலகுள்ள அளவும் அழியாத தம் புகழை நிலைபெறச் செய்து பழியில்லா உட



லோடு 'இறத்தல்' தலையாயது. அதனால் எவ்வாற்றானும் நல்வினை 'செய்க.' இங்ஙனம் கூறும் உறுதியுரை கோப்பெருஞ் சோழனுடையது. இவ்வளவும் உறுதிகூறும் உயர்வு.

இனி, அரசியற் பண்பினைக் காண்பாம். சேரமான் கணைக்காலிரும்பொறை சோழன் செங்கணானொடு திருப்போர் (திருப்பூர்) என்னும் இடத்துப் பொருதான். தீவினை வயத்தானே முன்னவன் தோற்கடிக்கப்பட்டுச் சிறை செய்யப்பட்டுக் குணவாய்க் கோட்டத் தடைக்கப்பட்டான்; நா வறள நீர் வேண்டும் என்றான். அவனுக்கு உடனே தண்ணீர் தரப்படவில்லை, பின்னர் வந்தது. வந்ததைக் கைக்கொண்டு "அரசரெனப் பிறந்தோர் தம் மக்களைப் புரத்தற்கெனப் போரிடும் களத்தில் மடிய வேண்டியோர், ஆதலின் அவர் குடியில் பிறக்கும் குழந்தை, தாய் வயிற்றிலேயே இறந்து பிறக்கினும், உருப் பெறாது தசைத்தடியாகப் பிறக்கினும், அவற்றை வீரர் அல்லர் என்று விலக்காது தருப்பையிற் கிடத்திப் போரில் மாண்டோர் அடையும் வீர நல் வாழ்வை இவையும் எய்துவனவாக என்று கூறி வாளால் துண்டித்து அடக்கம் செய்வர். அங்ஙனம் மானத்துணர்ச்சி சிறந்தோங்கி நிற்கும் மரபில் பிறந்த நான் பிறரிடம் இரந்துண்ணக் கடவனோ? என்னைப் போன்றோரையும் அக்குடியினர் இவ்வுலகத்து ஈன்மரோ?" என்றுரைத்து நீரினைக் குடியா துயிர்விடுத்தான். இவன் கூற்று மன்னர் குடியின் வழக்கத்தினை அறிவித்து அம்முறையே அவர்கள் அரசியலினும் எத்தகைய அடிப்படையாக மானத்துணர்ச்சியைக் கைவரப் பெற்றனர் என்பதை விளக்காநிற்கும். ஔவையாரின் அருஞ் செய்யுளும் (புறம்: கூ௩) இவ் வழக்குண்மையை ஐயமற அறிவிக்கும்.

சோழன் நல்லுருத்திரன் என்னும் அரசன் எத்தகை யோரை அரசர் நட்பினர்[1] ராகக் கொள்ளவேண்டும் என்பதை அறிவிக்கின்றான். "எலி, விளைந்து விளைந்த

1. Allies



கதிர்க் கழனிகளை நாடி ஒவ்வொரு நென்மணியாய்த் தன் வளையுள் கொண்டு சேர்க்கின்றது. அதனை யொத்துச் சிறு முயற்சியைப் பெற்றுப், பெற்ற தம் செல்வத்தைப் பலருடன் நுகராது இறுகப் பிடிக்கும் பேருள்ளம் படைக்காத கீழ்மக்கள் நட்பினர் ஆதற்குரியா ரல்லர். புலி, வேட்டை மேற்கொண்டு எதிர்ப்பட்ட கொடிய பன்றியைக் கொன்றதாக அது இடப்பக்கத்தே வீழ, வலப்பக்கத்தே வீழ்ந்தவற்றை யன்றி மற்றவற்றை உண்ணுத மிக உயர்ந்த மேற்கோளைப் பெற்ற அவ் விலங்கு அன்றைய நாள் ஒன்றையும் உண்ணுது ஒழிந்து நின்று, மற்றைநாள் பெரும் மலை விடரகம் கலங்க வேட்டெழுந்து வலிய களிற்றினை வலப்பக்கத்தே வீழப்படுத்து உண்ணும். அங்ஙனமே, உயர்ந்த மேற்கோளும் தடைபடா மேற்செலவும் பெற்றோரே உற்ற நண்பினர் ஆதற்கும் உற்றோர்." இவ் வண்ணம் ஒடுங்கா உள்ளத்து உயர்பண்பினர் துணைவராயின் அரசு மாட்சிமைப்படுதலில் குறை ஏது?

பெரும்பாணாற்றுப்படைக்குத் தலைவனுய்ச் சிறக்கும் தொண்டைமான் இளந்திரையன் உலகாளும் முறையை விளக்கிக் காட்டும் நெறி கற்போர்க்கும் கேட்போர்க்கும் பேரின்பத்தைப் பயக்கவல்லது.

"ஒரு சகடை; ஓட்டுபவன் ஒருவன்; அவன் அச் சகடையினை இனிதாகச் செலுத்தத் தெரிந்திருத்தல் வேண்டும். இல்லையேல் சகடை சேற்று வழியில் இறங்க, மேற்செலவு தகையப் பெருந்துன்பம் விளையும். அவ்வாறே காவல் என்னும் கடமையைப் பெற்ற அரசன் மாட்சிமை பொருந்தி இருத்தல் வேண்டும். அங்ஙனமாயின் அன்ன வன் ஆட்சி எத்தகைய ஊறுபாடும் இன்றி விளங்கும். அரசு புரியும் தகுதி அவன்றனக் கில்லையேல் பகைவர் களால் பெருந்துன்பத்தை அடைந்து நீங்காத் தொல் லைக்கே இடமாவான்." இது அரசு செய்யும் மன்னன் மாண்பினையும் அம் மாட்சிமையால் விளையும் பயனையும் எடுத்துக் காட்டுகின்றது. இவ்வாறு கூறியவனும் ஒரு மன்னன் எனின் அரசர் தம் மாண்பை எங்ஙனம் இயம்புவது!

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறும் நெறியில் "எனை இழித்துப் புல்லிய சொற்களைச் சொற்ற அரசர்களைப் போரிலே சிதறுமாறு பொருது முரசத்தோடு அவர்களைக் கைக்கொள்வேன். அங்ஙனம் செய்யேனாயின், என் குடை நிழல் வாழும் குடிமக்கள் 'எம் வேந்தன் கொடுங்கோலன்; எங்களுக்குத் தக்க காவலில்லை' என்றழுதரற்றிக் கண்ணீர் பரப்பிப் பழி தூற்றும் கொடுங்கோலை யுடையேனாகுக; உலகத்தொடு என்றென்றும் நிலையுறும் புகழையும், தலைமையையும் உடைய புலவர் என் நில எல்லையைப் பாடாது நீங்குவாராக. 'இல்லை' என்று வந்தோர்க்குக் கொடாத இன்மையை யான் உறுவேனாகுக" எனக் கூறு கின்றான். இவ்வரசனின் சொற்களால் செங்கோலின் செவ்விய நெறியும் புலவர்கள்பால் அரசர்களுக்கிருந்த நன்மதிப்பும், இரப்போர்க்கீயும் வள்ளற்றன்மையும் தெற் றெனப் புலப்படுகின்றன.

இனி, இல்லற மாண்பு, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டி யன் நெடுமொழி கூறுழி, 'பகைவரைப் புறங்காணே னாயின் என் கருத்துக்கண் மிக்க அணிமையாக வீற்றிருக் கும் என் மனைவியை விட்டுப் பிரிவேன் ஆகுக' எனும் பொருள்பட, "சிறந்த, பேரமருண்கண் இவளினும் பிரிக" என்கின்றான். ஓராவிற் கிருகோ டன்னவும், காகத் தாகத் தொருமணி கலந்த தென்னவும் கணவனும் மனைவி யும் வேறுபாடின்றிக் கலந்து வாழ்ந்த மாட்சிமையை இது விளக்கும்.

சோழன் நலங்கிள்ளி, தன்னுள்ளத்தை எள்ளிய மடவோனை அழிக்காவிடின் நெஞ்சத்தில் காதலின்றிப் புணரும் வஞ்சக மகளிரைத் தான் புணர்வதாகக் கூறுவதினின்றும் பொதுப்பெண்டிர் முயக்கினை மன்னர் வெறுத்தனர் என்பதும் தம் அருமை இல்லக் கிழத்தியாரொடு செம்புலப் பெயல்நீர் போலக் கலந்து வாழ்ந்தனர் என்பதும் புலப்பட, இப் புலப்பாடு அவர்தம் இல்லறப் பண்பின் நற்றகுதியை மிகுவிக்கின்றது.







இந்நெறிய வாழ்வில் நன்மங்கலமாய் நன்மக்கட்பேறு திகழ்ந்தது. "குறுகுறு நடந்து சிறுகை நீட்டி இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும் நெய்யுடை அடிசிலை மெய்யின்கண்பட விதிர்த்தும் பெற்றோரின் அறிவை இன்பத்தால் மயக்கும் புதல்வரை இல்லாதோர்க்கு வாழ்க்கையின் பயனாகியது ஒன்றும் இல்லை" என்பது பாண்டியன் அறிவுடைய நம்பியின் கூற்று.

உடல் கலந்து உயிர் கலந்து வாழ்ந்த இவ்வன்பர்கள் ஒருவரை ஒருவர் இறையளவும் பிரிதலாற்றார். காலனின் செயலால் பெரும் பிரிவைத் தம்மு ளொருவர் எய்தின் மற்றவர் எவ்வாறு தனித்து வாழ்வர்? சேரமான் கோட் டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, தன் பெருங்கோப் பெண்டு துஞ்சிய காலத்தில் தான் பெருந்துன்பம் படுவ தாயும் ஆயினும் தன்னுயிரைச் செகுக்கும் மதுகையில் லாத் துன்பத்தால் ஆய பயன் யாது என்றும் கவல்கின் ருன். ஆடவர் வருந்தி நடைப்பிணமாய் அமையப் பெண் பாலர் உடன்கட்டை யேறி உயிர்விடுத்தனர். பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்ந்து மாய்ந்த செய்தி இவ்வுண்மையை எடுத்துக்காட்டும். ஆகவே உள்ளம் ஒத்த அன்பினராய் நன்மக்களைப்பெற்று உலக வாழ்வில் சிறந்து பெரும் பிரிவும் தங்களைப் பிரிக் காத வண்ணம் புணர்ந்தனர்.

இனிக் கல்விப் பெருக்கத்தில் கருத்தூன்றுவோம். இவ்வரசர் தம் பல செய்யுள்களும் இவர்தம் கல்விப் பெரு மையைத் தெள்ளிதின் விளக்கும். அன்றியும் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் எவ்வாற்றானும் கற்றல் வேண்டும் என்று வற்புறுத்தும் செய்யுள், (புறம்: கஅங) அரசர் கல்வியின் பெருமையை அறிந்திருந்தனர் என் பதையும் தாம் கற்றதேயன்றித் தம் குடிமக்களையும் கல்விக் கடல் புகச் செய்தனர் என்பதையும் கல்வியின் மேன்மையைத் தம் குடிமக்களுக்கு வற்புறுத்தி அறிவித் தனர் என்பதையும் அறிவியாநிற்கும்.

களகூ

அரசர் தம் ஓய்வுகாலத்தில் சிறந்த புலவர்களோடு கலந்து மகிழ்ந்து அறிவியல் கலைநூல்களை ஆராய்ந்தனர் என்ற உண்மை பல நிகழ்ச்சிகளால் வெளிப்படுகின்றது.

நண்பர்களுடன் கலந்து இன்களி மகிழ்நகையில் பாடுற்றனர் என்பதும் பூதப்பாண்டியன் கூற்றால் ளுகும்.

ஈடு

புல

# ரு. பகைமுக வாழ்க்கை

## 1. போர்க் காரணம் :

போர் எழுதற்குப் பல காரணங்களுண்டு. முதலாவதாக எஞ்சா மண்ணசையைக் குறிக்கலாம். தன்னாட்டு வாழும் குடிமக்கள் கிளைத்துச் செழித்து வாழ்தற்குரிய இடமில்லையேல் இடம் சிறிதென்னும் ஊக்கம் துரப்பப் போரேற்றெழுவர் மன்னர். மற்றைநாட்டு மன்னன் கொடுங்கோல னவானாயின் அக்கொடுமை ஒழித்துச் செம்மையை நிறுவுவதற்குப் போர் தொடங்கும். இறுதியாகப் பிற மன்னர், மகள் மறுத்த காலத்தும் போர் எழும். இறுதியில் கூறப்பட்ட காரணம் மிக்க வன்மையுடைத்தா யிருந்தமை புறம் ௩௩௬-௩௫௪ வரை காணப்படும் செய்யுள்க்ளால் உறுதியாகும். இவ்வெழுச்சியைப் பின்வரும் வரிகளில் அழகுறக் காண்க.

"வேந்து குறையுறவும் கொடான்......

..........................................

......................மறலிய சினத்தன்
பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே

விளங்கிழைப் பொலிந்த வேளா[1] மெல்லியல்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மண்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ
ஆரமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை எஃகம் அறுத்த உடம்பொடு

வாரா உலகம் புகுதல் ஒன்றெனப்
படைதொட் டனனே குரிசில்" (புறம்: ௩௪௧)

---

1. வேளா - மணமாகாத.



"வேந்தன் மகளை மணம் செய்துதருதல் இல்லை என மறுத்தான். கேட்ட மன்னன் மிகுந்த சினங்கொண்டு வீரரைப் போர்க்கெழுக எனக் கட்டளையிட்டுத் தான் போர்க்கு முன்னர் நீராடினன். 'நாளை யான் இவ்வழகியை மணப்பேன். இன்றேல் எஃகேற்ற உடலை மண்ணில் வீழ்த்திப் பேரின்ப உலகம் புகுவேன்' என்று வஞ்சினம் கூறித் தன் படையைக் கைக்கொண்டான்" என்பது அவ் வரிகளின் கருத்தை அறிவிக்கும்.

2. மன்னரின் வீரம் :

வீரர்களை நடத்தும் மன்னன் தானும் வீரம் செறிந்து வாழ்ந்தான். "புலி சீறி நின்றால் எதிர் நிற்கவல்ல மானினமும் உளவோ? ஞாயிறு கொதித்தெழுமாயின் ஆகாயத்தினிடத்தும் திசையின் கண்ணும் செறிந்த இருளும் உண்டோ? ஏற்பட்ட பண்டத்தின் மிகுதியால் உண்டாம் சகடத்தினது ஆழ்ச்சியைப் போக்குதற்கு மணல் பரக்கவும் கல் பிளக்கவும் நடக்கவல்ல மனச்செருக்கினைப் பெற்ற கடாவிற்குப் போதற்கரிய துறையும் உண்டோ? இல்லை அன்றே!" அவைபோல மன்னர் போர்க்களம் புகின் எதிர்த்தார்க்கும் வீரரும் உளரோ? இல்லை. இங்ஙனம் கூறும் ஔவையின் அருந்தமிழ்க் கருத்தினை எண்ணுமின்.

என்றும் போர் நினைவு அவர்பால் பொலிந்திருந்தது. மன்றத்தில் தண்ணுமை தூக்கப்பெற்றிருக்கின்றது. காற்று வீசுகின்றது; காற்றொலியால் முழவு ஒலி செய்கின்றது; மன்னன் அதனைப் போர்ப்பறை என எண்ணிக் கிளர்ச்சி பெறுகின்றான். இச் செயல் மன்னர் போரில் அழுந்தி நின்றமையைப் புலப்படுத்தும்.

இவ்வீரத்தின் விளக்கம் மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் என்பவரால் மிக விளக்கமாகப் பேசப்படுகின்றது. "மாற்றாரின் படைக்கலங்களின் முகம் சிதையுமாறு வேறல் எவர்க்கும் எளிது. நல்லரா உறையும் புற்றும் கொல்லேறு திரிதரும் மன்றமும் எவராலும் எளி

மையாகச் சொல்லுதற்குரிய இடங்கள் அல்ல. அவ்வாறே எம் தலைவன் பாசறையிலிருக்கின்றான் எனும் செய்தியே ஆற்றரும் துப்பின் மாற்றோரை அஞ்சப் பண்ணும். இத் தகைய ஒளி எம் இறைவன்பா லுள்ளது" என்றுரைக் கின்றார் அவர். 'பாசறையி லுளன்' எனும் செய்தியே ஆற்றரும் துப்பின் மாற்றாருக்குப் பேரச்சத்தை விளைத்தது எனின் வீரத்தின் பேரெல்லையாய்—வீரம் எனும் பண்பின் உருவமாய்—வேந்தர் திகழ்ந்தனர் என் பது வெளிப்படை.

போரினைத் தம் பொழுது போக்காகச்
டனர் என்னலாம். அஃது, அவர் தமக்கு

சிலர் கொண்
ஈந்தது நல்
லிசையை.

'நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்

பாசறை அல்லது நீஒல்லாயே'

எனும் வரிகளின் கருத்துக்களைக் காண்மின்கள்.

அரசரும் மற்போர்ப் பயிற்சியை மேற்கொண்டு சிறந் தனர். சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி ஆமூர் மல்லனை மற்போரில் அட்டமை சிறந்த சான்றாகும்

(புறம்: அ0).

அரசர், தம் வீரர் போர் புரியுங்கால் தாம் தம்மைக் காத்துக்கொள்ளுதற் பொருட்டுத் தனியிடம் புகார். வீரருள் தம்மையும் ஒருவராகக் கருதிக் களம்புகுந்து போர் புரிவர். ஒரு மன்னன் போர்க்களத்தில் வீரம் காட்டினமை மிக அழகாக எழுத்தோவியப் படுத்தப்பட்டுள்ளது. "முறை முறையாக உடன்று மேல்வந்த புதிய வீரரை மதித்தலும் இழித்து நோக்குதலும் இல்லான். அவரை இறுகப் பிடித்துப் பரந்த ஆகாயத்தின்கண்ணே ஒலிஎழ, கவிழ்ந்து உடல் நிலத்தின்கண்ணே பொருந்தக் கொன்றதற்கு மகிழ்தலும் 'இவ்வாறு கொன்றேம்' என்று தன்னை மிகுத்தலும் இல்லாதவனா யிருந்தான்.

வேந்தன் வீரனை ஏவாது தானே போரிட முற்படுதலை,



'எமக்கே கலங்கல் தருமே தானே
தேற லுண்ணும் மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே இனியே
நேரா ராரெயில் முற்றி
வாய்மடித் துரறி[1] நீ முந்தென் னானே'

(புறம்: உகஅ)

இது கேட்டுப் பெரு மகிழ்வெய்தும் மகளிரது வீரம் மிக நலம் பயப்பதாகும். தம் வயிற்றிற் பிறந்து தமது முலைப்பாலுண்ட மக்கள் மறங்குன்று மானமும், வீரம் செறிந்த விருப்பு முடையராதல் வேண்டுமென்பது அவரது உட்கோள். ஒருத்தி தன் மகன் போர் புரிந்து, "இடைப் படை யழுவத்துச் சிதைந்து வேறாகிய மாண்பு கண்டு அருளி, வாடுமுலை யூறிச் சுரந்தனள்" (புறம்: உகூரு) என் றும், வேறொருத்தி, "சிதைந்து வேறாகிய, படுமகன் கிடக்கை காணூஉ; ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே" (புறம்: உஎஅ) என்றும் சான்றோர் கூறுதலைக் காண்மின். செருப்பறை கேட்ட ஒருத்தி, தான் ஒரு மகனல்லா தில்லா ளாயினும், வேல் கைக் கொடுத்துப் போர்க்கு விடுப்பதும், நின் மகன் போர்க்களத்தே படையழிந்து மாறினன் என் பது கேட்டு ஆறாச் சினத்தளாய்ப் போர்க்களம் நோக்கிச் செல்லலுற்று, "மண்டமர்க் குடைந்தனனாயின், உண்ட

1. இவை இந்நூற்றாண்டிலும் நிகழ்தலைக் காண்மின்!
2. அழுவத்து - போர்க்களப் பரப்பில்.


வென் முலையறுத்திடுவன்" என்று கூறுதலும்,

யாண்டுளன் என்று
நின்மகன் போகிய அலைபோல,

கேட்டார்க்கு, அவனே, புலியிருந்து
"ஈன்ற வயிறோ இதுவே, தோன்று
வன் மாதோ போர்க்களத் தானே" என்பதும் பிறவும் இம் மகளிரது வீரத்துக்குச் சான்றுகளாகும்.

# கஉ. வாழ்க்கை

இவ் வீர மக்கள் இல்லிருந்து அறம் புரியுந் திறம் மிக்க
நயமுடையதாகும். குறிஞ்சி
திறம் கூறலுற்ற ஏணிச்சேரி

நிலத்தவர் விருந்தோம்பும்
முடமோசியார், "சிலைப்பாற்
பட்ட முளவுமான் கொழுங்குறை விடர்முகை யடுக்கத்துச்
சினை முதற் சாந்தம்; புகர்முக வேழத்து மருப்பொடு மூன்
றும், இருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ விருந்திறை
நல்கும் நாடன்" (புறம்: ௩௭௪) என்று தெரிவிக்கின்றார்.
தம்மை நாடி வருவோர்க்கு உடை முதலியன தந்து அறம்
புரியும் திறத்தை, ஒளவையார், "திருமல ரன்ன புதுமடிக்

கொளீஇ, மகிழ்தரல் மரபின் மட்டே யன்றியும், அமிழ்தன
மரபின், ஊன்றுவை யடிசில் வெள்ளி வெண்கலத் தூட்ட

லன்றி....அகடுநனை வேங்கை வீகண்டன்ன, பகடு தரு செந்
நெல் போரொடு நல்கிக், கொண்டி பெறுகென்றோனே"
(புறம்: ௩௯௦) என்று மொழிகின்றார். இரவிடை வந்
தோர்க்கு, "அதளுண் டாயினும் பாயுண்டாயினும் யாதுண்
டாயினும்" (புறம்: ௩௭௭) கொடுத்து உறங்குவித்துச் சிறப்
பிக்கும் உயர்வும், கணவன், "பரிசில் பரிசிலர்க்கு ஈயக்"
கண்டும் அவன், மனையாட்டி, "பாண ராத்தவும் பரிசில

ரோம்பவும் ஊணொலி யரவமொடு கைதூவா" (புறம்: ௩௩௪) பெருமையும், "கிழவன் சேட்புலம் படரின் இழையணிந்து ........பெண்டிரும் தம் பதம் கொடுக்கும்" (புறம்: ௧௫௧) கொடையும், கணவன் இறந்து பட்டவழி மகளிர், குழல் களைதலும், இழையணியாமையும், கைம்மை நோற்றலும், உடனுயிர் விடுதலும், தீப்பாய்தலும், பிறவும் இத்தமிழ் நன்மக்கள்பால் காணப்படுகின்ற செயல்வகைகளாகும்.



பெண்களின் உருநலனும் குணநலனும் கேள்வியுற்று வேந்தர் மகட்கொடை வேண்டலும், அவர்பால் மறப்பண்பும் அறவுணர்வும் குன்றியிருக்குமாயின் பெற்றோர் மகட்கொடை மறுத்தலும், அது வாயிலாகப் போர் நிகழ்தலும் பண்டைநாளை மரபாகும். மகட் பேசியபின் மணமகன் போர் குறித்துப் பிரியலுறின், வாள் வைத்து மணம் புரிதலும் பண்டைத்தமிழ் மரபாகும். (புறம்: ௩௩௨).

## ௧௩. கடவுட் கொள்கை

பண்டைத் தமிழ்மக்கள் பல்வேறு தெய்வப் பெயர்களை வழங்கியிருக்கின்றா ராயினும் புறநானூற்றில் சிறப்பாக முக்கட் செல்வற்கும் முருகக் கடவுட்கும் கோயிலுண்மை தெரிகிறது. "பணியியரத்தை நின் குடையே முனிவர் முக்கட் செல்வர் நகர் வலம் செயற்கே" (புறம்: ௬) என்றும், "அணங்குடை முருகன் கோட்டம்" (புறம்: ௨௬௨) என்றும் வருதல் காண்க. இவர்களே யன்றி, திருமால், இமையவர், பலதேவன் முதலிய கடவுளரும் கூறப்படுகின்றனர். ஞாயிற்றின் வெப்பத்தைத் தாங்கி நிலமக்கட்கு வேண்டியவளவு நல்கும் முனிவருண்டென்றும் அவர்கள் காற்றை யுணவாகக்கொண்டு சுடரொடு திரிகின்றனரென்றும் இப் புறநானூறு கூறுகின்றது (புறம்: ௪௩). முருகன் மலையிடத்தும் நீர்த்துறையிடத்தும் கோயில் கொள்வன். முக்கட் செல்வன் மூவெயில் முருக்கிய செய்தியும், ஆலின் கீழ் இருப்பதும், கறைமிடறும் மூன்று கண்களும் உடையனாகிய இயல்பும் பாராட்டிக் கூறப்படுகின்றன. முருகன் கோயிலில் தூய்மையில்லா மகளிர் ஒடுங்கித் தலைகவிழ்ந்து நிற்பரென்பர் (புறம்: ௨௯௯). குறவர் மழை வேண்டியிருப்பினும், பெய்யும் மழை மிக்க வழியும் கடவுளைப் பலிதூய்ப் பரவுகின்றார்கள் (புறம்: ௧௪௩).

இவ்வண்ணம் கடவுளுண்மையுணர்ந்து வழிபட்டொழுகிய இம் மக்கள் வினையுணர்வும், மறுபிறப்புண்மையும் மேற்கொண்டிருக்கின்றனர். "வாழச் செய்த நல்வினையல்லது, ஆழுங் காலைப் புணை பிறிதில்லை" (புறம்: ௩௬௭)

என்றும், "தீதும் நன்றும் பிறர்தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன, சாதலும் புதுவதன்றே" என்றும், "நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர், முறைவழிப் படூஉம் என்பது திறவோர், காட்சியிற் றெளிந்தனம்" (புறம்: கக௯௨) என்றும், "உயர்ந்த வேட்டத் துயர்ந்திசினோர்க்குச், செய்வினை மருங்கின் எய்த லுண்டெனில், தொய்யா வுலகத்து நுகர்ச்சியும் கூடும்" (புறம்: உகச) என்றும் வருவனவும் பிறவும் இக் கருத்தை வலியுறுத்துகின்றன. இவற்றோடு, போரிற் பட்டோர் தேவருலகத்தே இன்புறுவர் என்னும் கொள்கை வீரர் நெஞ்சில் ஊறியிருக்கிறது. "ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின், நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு, வாரா வுலகம் புகுதல்" ஒன்றெனப் படை தொட்டனனே குரிசில் (புறம்: ௩௪௧) என ஆசிரியர் பரணர் கூறுவது காண்க.

இக் கூறிய உணர்வுகளால் உடலோடு கூடி இவ்வுலகில் வாழும் வாழ்க்கையின் இன்பநிலை, துன்பநிலை இரண்டனையும் இனிதறிந்து வாழ்வாங்கு வாழும் நல்லுணர்வு இப் பண்டைய நன்மக்கள்பால் விளங்கித் தோன்றுகிறது. ஒரு சான்றோர், "ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப், பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து, பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து, இரவலர்க் கருங்கலம் அருகாது வீசி, வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்"

(புறம்: ௩௬௭) என்றும், வாழ்நாளும் நிலையின்றிக் கழிவ தென்றற்கு, "குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண், பொதுமை சுட்டிய மூவ ருலகமும், பொதுமையின்றி யாண்டிசி னோர்க்கும், மாண்டவன்றே யாண்டுகள்" (புறம்: ௩௫௭) என்றும் "விழவிற், கோடியர் நீர்மை போல முறைமுறை, ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய நகைப்புற னாகநின் சுற்றம், இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே" (புறம்: ௨௯) என்றும் கூறுவர். இவ் வுலகத்தே உயிர்கள் கூத்தாட்டவைக் குழாம் போலக் கூடிப்பிரியும் செயலால் உண்டாகும் துன்ப நிலையினை



யும், "இன்னாதம்ம உலகம்" என்றோதி, "இதனைத் துறந்து, "இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே" (புறம்: ௧௯௪) என்று எடுத்துரைத்து, இனியகாண்டற்கு வாயில் கூறுவார்போல, "நல்லது செய்த லாற்றீ ராயினும், அல்லது செய்த லோம்புமின் அதுதான், எல்லாரும் உவப்ப தன்றியும்,
ரதுவே" (புறம்: ௧௯௫)
இருந்திருக்கின்றனர்.

நல்லாற்றுப்படூஉம் நெறியுமா
என்றுரைக்கும் சான்றோரும்

**௧௪. துறவு**

இவ்வுலகில் யாக்கை, இளமை, செல்வம் முதலியன நிலைபேறின்றிக் கழிவது கண்டு, நிலைத்த வாழ்வு பெற

விரும்புவோர் இதனைத்
றற்கு, "இனிய காண்க

துறந்து சேறலே தகுதியென்
இதன் இயல்புணர்ந்தோர்" என்

றூற் போல, "இன்னா வைகல் வாராமுன்னே, செய்ந்நீ முன்னிய வினையே, முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே"

(புறம்: ௩௬௩) எனத் துறவு வற்புறுத்தலும்
சான்றோர் மேற்கொண்டிருக்கின்றனர். இத்

பண்டைச்
துறவுக்கு
இடையூறாகச் சுற்றம் சூழவாழும் மனைவாழ்க்கை இருத்தலை யறிந்து, "ஒடியுய்தலும் கூடுமன், ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே" (புறம்: ௧௯௩) என்றலு முண்டு.

துறவு பூண்டோர் தமக்குண்டாகும் நலந் தீங்குகளை ஒப்பாகக் கருதி இரண்டினிடத்தும் உவப்பு வெறுப்பின்றி யொழுகு மாற்றால் "யாது மூரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர்தர வாரா, நோதலும் தணிதலு மவற்றோ

ரன்ன, சாதலும் புதுவ தன்றே வாழ்தல், இனிதென
மகிழ்ந் தன்று மிலமே, முனிவின் இன்னா தென்றலும்
இலமே" (புறம்: ௧௯௨) என்று தம் உட்கோளைத் தெரி
வித்து நம்மைத் தெருட்டுகின்றனர். இத்தகைய நல்லறிவும்
அருந்துறவும் பூண்டோர், மனையின் நீங்கிக் காடு
சென்று
சடைமுடி வளர்த்து, நீராடி, தாளியிலை முதலிய இலை,
காய், கனியுண்டு உண்மை நிலையினைத் தலைக்கூடுகின்றனர்.
இவர்தாம் முன்னர்த் தம் இல்லிருந்தாற்றிய நல்லறப்



பயனுய்த்த இன்பத்தையும், இப்போது துறவுபூண்டு
தவம் செய்யும் திறத்தையும் கண்ட மாற்பித்தியார் என்ற
சான்றோர், ஒரு துறவியைப் பார்த்து,

"கழைக்கண் நெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகின்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறத்தாழ் புரிசடைப் புலர்த்துவோன்" (புறம்:
௨௫௧)

ஓவத்தன்ன தன் இடனுடை மனையின்கண், "பாவை யன்ன குறுந்தொடி மகளிர், இழைநிலை நெகிழ்த்த மள்ளன்" (புறம்: உருக) என்றும், வேறொரு துறவியைக் காட்டி, இவன், பண்டு, "இல்வழங்கு மடமயில் பிணிக்கும் சொல்வலை வேட்டுவனாயினன்;" இப்போது, அருவி நீரோடுவதால், "நிறம் பெயர்ந்து, தில்லையென்ன புல்லென் சடையோடு, அள்ளிலைத் தாளி" (புறம்: உருஉ) கொய்கின்றான் என்றும் கூறுகின்றார்.

இவ்வாறு துறவுபூணும் உரவோர், அதனைப் பூணுமுன் தம் நாட்டு அரசர்க்குப் "படை வேண்டுவழி வாளுதவியும், வினைவேண்டுவழி அறிவுதவியும், வேண்டுப வேண்டுப" (புறம்: களஎ) வேந்தர்க்கு வழங்கி வீறுபெற்றவராவர். தம் அரசன் ஆண்மையும் சாயலும் வண்மையும் உடையனாதல் வேண்டும் (புறம். ருரு) என அவற்கு அறிவுறுத்துவர். எவ்விடத்து ஆடவர் நல்லவரோ அவ்விடமே நிலவுலகில் சீரிய நலமுடைத்தென்று கருதும் (புறம்: கஅஎ) நயமுடையோராவர்.

இச் சான்றோர் நற்குண நிறைவால் சால்புடையராதலே யன்றி மறமாண்பிலும் சால்புடையராவர். மறக்குடியிற் பிறந்தார், "குழவி யிறப்பினும் ஊன்றடி பிறப்பினும், ஆளன் றென்று வாளிற் றப்பார்" (புறம்: எச); மானம் படவரின் உயிர் வாழார். "தமர்தன் தப்பின் அதுநோன் றல்லும், பிறர்கை யறவு தான்நா ணுதலும், படைப்பழி தாரா மைந்தின னாகலும், வேந்துடை யவையத்து ஓங்குபு நடத்தலும்" (புறம்: கருஎ) ஒவ்வொரு

வருக்கும் உளவாகும் உயர் பண்புகளாகும். தாம் எத்துணை வலியராயினும், அவ் வன்மை தோற்றுவிக்கும் செயல் நிகழுமிடத்து அது குறித்துத் தம்மை வியவார் (புறம்: ௩௰); சொல் பெயராத் துணி நாவுடையர் (புறம்: ௩௪௪). அவர் பெற்றிருந்த ஒளியினைக் கண்டு வியந்த மதுரை இளங் கண்ணிக் கௌசிகனர் என்னும் சான்றோர்.

"நல்லரா வுறையும் புற்றம் போலவும்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவும்
ஆற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
உளனென வெரூஉ மோரொளி
வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே" (புறம்: ௩௦௯) என்று பாராட்டுகின்றார்.

## ௧௫. ஈமக் கடன்

இத்தகைய மறச்சான்றோர் போரில் புகழுண்டாக மடிவாராயின், இவருடைய பெயரும் பீடும் ஒரு நல்ல கல்லில் எழுதி அதனை ஓர் சிறப்புடைய இடத்தே நட்டு, மயிற்பீலியும் மாலையும் சூட்டி வழிபாடு புரிவது பண்டைத் தமிழ் நன்மக்கள் கொண்டிருந்த நற்கொள்கை யாகும். "பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி, மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு, அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து, இனி நட்டனரே கல்லும்" (புறம்: உகூச) என்று சான்றோர் கூறுதல் காண்க. இந் நடுகல்லையும் பட்டவிடத்தே நடாது வழிச்செல்வோர் கண்டு வழிபடுமாறு, பலரும் செல்லும் வழியருகே நடுவது இயல்பு என்பார், "நல்லமர்க் கடந்த நாணுடை மறவர், பெயரும் பீடுமெழுதி அதர்தொறும் பிறங்கு நிலை நடுகல்" என்றும் "அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்" என்றும் சான்றோர் (அகம்: கூஎ, கங௧) கூறுவதனால் அறியலாம். இக் கல்லை வழிபடுவோருள் கோவலர் வேங்கைப் பூவைப் பனைநாரால் மாலைதொடுத் தணிந்து வழிபாடு செய்கின்றனர் (புறம்: உகூரு).



ஏனையோர் இறப்பின், அவர்களைச் சுடுவது, தாழியிற் கவித்துப் புதைப்பது என்ற இருவகைச் செயல்கள் காணப்படுகின்றன. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தபோது, "நெடுமா வளவன், தேவருலக

மெய்தின னாதலின், அன்னோற் கவிக்கும் கண்ணகன் தாழி" (புறம்: ௨௨௮) எனத் தாழியிற் கவித்த செய்தி கூறப்படுகிறது. பூதப்பாண்டியன் என்பான் சுடலையில் வைத்துக் கொளுத்தப் பெறுகின்றான், அவன் மனைவியும், தீயிற் பாய்ந்து உயிர் விடுகின்றாள் (புறம்: ௨௪௬). இறந்தாரைப் பாடையிற் கிடத்தி வெள்ளாடையாற் போர்த்துச் செல்லும் வழக்கு (புறம்: ௨௮௬), பண்டை நாளிலும் காணப்படுகிறது. கணவனை இழந்த மகளிர், பழஞ் சோறுண்டு பரற்பெய் பள்ளியில் பாயின்று வதியும் கைம்மை மேற்கொள்கின்றனர். (புறம்: ௨௪௬) இறந்தோர்க்குப் பிண்டம் படைத்து வழிபடும் செயல் (புறம்: ௨௩௪, ௩௬௩) பண்டைநாளை வழக்கே யாகும். காதலன் புடைய மனைவி இறந்தவிடத்துக் கணவன் வருந்தும் நிலையினைத் தபுதாரநிலை யென்று (புறம்: ௨௪௫) சான்றோர் காட்டி, வருந்தும் திறத்தை மிக உருக்கமாகப் பாடுகின்றனர். சுடுதலினும் தாழியிற்கவித்துப் புதைப்பது முதியோர்க்கும் செல்வமிக்கோர்க்கும் நிகழ்ந்திருக்குமோ என்று நினைப்பதற்குத் தாழிகவிக்கும் செயல் கூறும் பாட்டுகள் இடந்தருகின்றன.

வாழ்க்கையில் வாழ்வாங்கு வாழ்ந்தோர் முடிவில் தவமே சிறிதென்று கருதுகின்றனர், "வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு, ஐயவி யனைத்தும் ஆற்றாது" (புறம்: ௩௫௮) என்று சான்றோர் கூறுகின்றார்.

## ௧௬. கொள்கைகள்

இனி, இப் பண்டை நன்மக்களிடத்தே மிகப்பல கொள்கைகள் காணப்படுகின்றன. நாள் பார்த்தல், புள் நிமித்தம் காண்டல் (புறம்: கஉச) வானத்தே மீன் வீழ்ந் தால் அரசர்க்குக் கேடு வருமெனல் (புறம்: உஉகூ), நடுப்





பகலில் தும்பி பறப்பதும், இரவில் விளக்கு நில்லாமையும்,
கூகை குழறலும், பெருந்தூக்கம் வருதலும் துர்நிமித்தங்க ளென்றல் (புறம்: உ௮௦) என்பன முதலியன நிமித்தங்க ளாகச் சான்றோர் உரைக்கின்றனர்!
எண்டிசையும் எரி
கொள்ளி வீழ்தலும் இலையில் நெடுங்கோடு வற்றல் பற்றலும்,
ஞாயிறு பலவிடத்தும் தோன்றுதலும்,
கெடுபுள்ளோசை
யும், பல்வீழ்தலும், எண்ணெயாடலும்,
யானையேறுதலும்,
உடைகளை உடுத்தலும் பிறவும் கனவிற்

காணப்படுதல்
கூடாது: கண்டார்க்குத் தீங்குண்டாம் (புறம்: சுக). நாட்டில் மழை யில்லையாயின் அதற்கு அரசன் கோல்நிலை திரிதல் ஒரு காரணமாதலுடன், கிரகங்கள் தம் நிலை பெயரினும் மழையின்றும் (புறம்: ககஎ). இப் புறநானூற்றுக் காலத்தே வானுலகப் பொருள்களை ஆராய்ந்தறிந்த சான்றோர் இருந்திருக்கின்றனர்.

"செஞ்ஞா யிற்றுச் செலவும் அஞ்ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்
வளிதிரிதரு திசையும்

வறிது நிலைஇய காயமும் என்றிவை
சென்றளந் தறிந்தோர் போல என்றும்
இனத்தென் போரும் உளரே"

(புறம்: ௩0)

என வரும் சான்றோர் சால்புரையால்
தெளிகின்றோம்.

அரசனுடைய போர்முரசிற்கு நீராட்டும், குருதிப் பலியிட்டுச் செய்யும் பூசனையும் நடைபெறுகின்றன. அம் முரசிருக்கும் கட்டிலின்கண் பிறர் எவரும் படுத்துறங்கல் கூடாது; உறங்குவோர் உளராயின் அவரைக் கொல்வதே தக்க தண்டமாகும்.

விற்பயிற்சி செய்வோர் சேய்மையில் ஒரு கம்பம் நிறுத்தி, அதனைக் குறியாகக்கொண்டு அம்பெய்து பயில்வர். "விளங்குபடை கன்மார் இகலின ரெறிந்த அகலிலை முருக்கின், பெருமரக் கம்பம்" (புறம்: ககுக) என்பதனால் அது தெரிகின்றது.



"முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல" (புறம்: உருக) என வருதலால் மகளிர் மருள்கொண்டு தெருவில் ஆடித் திரியும் இயல்பும் அந்நாளில் இருந்தது தெரிகிறது.

நன்மக்கள் விலைமகளிரைக் கூடுதல் குற்றமாகும்.

"தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப், பல்லிருங் கூந்தல் மகளிர், ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே" (புறம்: எங) என்று சோழன் நலங்கிள்ளி கூறும் வஞ்சினத்தால் இக் கருத்து விளக்கமெய்துகிறது. விலைமகளிர் வேறு; பரத்தையர் வேறு; இவ் விருவரையும் ஒரு திறமாகக் கருதுவது வழுவாகும்.[1]

இந்நாளிலிருந்த சான்றோர்க்குத் தாம் வாழ்ந்த நாட்டின்பால் இருந்த அன்பு அளவிடற் பாலதன்று. பாரி உயிர்நீத்த பின்னர், அவனோடு உடனிருந்து ஒருவாழ்வு வாழ்ந்த கபிலர், அவனுடைய பறம்பு நாட்டை விட்டு நீங்குங்காலத்து, அதனைப் பிரியமாட்டாது வருந்தி யுரைக்கும் உரைகள் அவரது நாட்டுப்பற்றின் நயப்பாட்டினை, நன்கு நவில்கின்றன. "பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி, நட்டனை மன்னோ முன்னே இனியே, பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று, நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சிச், சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே" (புறம் : ககங) என்பது அதற்கு நல்ல சான்று பகரும்.

இனி, பண்டைச் சான்றோர், தம் மனம் இனிக்குமாறு நலம் செய்த நன்மக்களைத் தூய நாவால் செந்தமிழால் வாழ்த்துவது மரபாகும். பொதுவாக நீடுவாழ்க என்ற கருத்தமைய, வாழ்நாள் ஆற்று மணலினும், கடற்கரை நுண்மணலினும், விண்மீனினும் பலவாக வாழ்வாயாக என்பது பெரும்பான்மை. அதியமான் நெடுமான் அஞ்சி சாதலை நீக்கும் வன்மை பெற்ற நெல்லிக் கனியைத் தானுண்ணாது ஒளவைக்குத் தந்தானாக, அதனைப் பாராட்டி வாழ்த்தலுற்ற அவர், "போரடு திருவிற் பொலந்தா

---

1. இது பொருளாக வரும் ஆராய்ச்சியொன்று பின்னர்ச் 'செந்தமிழ்ச் செல்வி'யில் வெளிவரும்.

ரஞ்சி, பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி, நீல மணிமிடற் றொருவன் போல, மன்னுக பெரும நீயே,'' (புறம்: கூக) என்று வாழ்த்துவதும், நாஞ்சில் வள்ளுவ னது வண்மை நலங்கண்டு வியந்த ஒரு சிறைப் பெரியனர், "நீவா ழியர்நின் தந்தை, தாய்வா ழியர்நிற் பயந்தி சினோரே'' (புறம்: கநுஎ) என்று வாழ்த்துவதும், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்பார், பிட்டங் கொற்ற னது பெருங்கொடையை வியந்து வாழ்த்தலுற்று, அவன் காலில் முள்ளும் தைத்தல் கூடாது என்பார், "அன்ன னுக லின் எந்தை யுள்ளடி, முள்ளும் நோவ வுறற்க தில்ல, ஈவோ ரரியவிவ் வுலகத்து, வாழ்வோர் வாழஅவன் தாள் வாழி யவே'' (புறம்: களக) என்று வாழ்த்துவதும், பொறையாற் றுக் கிழானை வாழ்த்தக் கருதிய கல்லாடனர், அவனது நாட்டை, "துளிபதன் அறிந்து பொழிய, வேலியாயிரம் விளைகநின் வயலே'' (புறம்: நகூக) என்று வாழ்த்துவதும் எண்ணுந்தோறும் மிக்க இறும்பூது பயக்கின்றன.

பண்டைத் தமிழ் வேந்தர் தமக்கு ஏதேனும் பெருங் குறை நேரின் உண்ணா நோன்பிருந்து உயிர் துறக்கும் செயலொன் றுடையராவர். இதனை வடக்கிருத்தல் என் பர். இச் செயலை மேற்கொண்டோன், மக்கள் வழக்கம் இல்லாததோரிடத்தே புல்லைப் பரப்பி வடக்கு நோக்கி யிருந்து உண்ணா நோன்பு மேற்கொண்டு உயிர் துறப்பன். இந்நூற்கண் இவ் வடக்கிருக்கும் செயல் பெரிதும் வேந்த ராற்றான் மேற்கொள்ளப்படுகின்றது. கரிகாற் பெருவளத் தானொடு பொருது புறப்புண்ணுற்றது காரணமாக மானம் பொறாது சேரமான் பெருஞ் சேரலாதனென்பான் வடக் கிருந்த செயலை, "உவவுத் தலைவந்த பெருநாளமையத்து, இருசுடர் தம்முள் நோக்கி ஒரு சுடர், புன்கண்மாலை மலை மறைந்தாங்குத், தன்போல் வேந்தன் முன்பு குறித் தெறிந்த, புறப்புண் நாணி மறத்தகை மன்னன், வாள் வடக்கிருந்தனன்" (புறம்: சுரு) என்று கழாத் தலையாரும், "மிகப் புகழுலக மெய்திப் புறப்புண் நாண வடக்கிருந் தோனே" (புறம்: சுசு) என்று வெண்ணிக் குயத்தியாரும்



பாடுகின்றனர். இவ்வாறே கோப்பெருஞ் சோழன் வடக் கிருந்ததும், அவனைக் காணாதிருந்து காண்டற்கு வந்த பிசிராந்தையார் என்னும் சான்றோர் வடக்கிருந்ததும், அச்

சோழற்கு அமைச்சுக் கடம்பூண்டொழுகிய பொத்தியார் வடக்கிருந்ததும் இவ்வழக்கின் மிகுதியை நன்கு வற்புறுத்துகின்றன.

இத் தமிழ நன்மக்கள் இசை நாடகங்களை வளர்ப்பதில் மிக்க ஊக்கமுடையராவர். கூத்தர், பாணர், பொருநர், வயிரியர், கோடியர், விறலியர், யாழோர் என்பவர் முதலிய இசைவாணர் மிகப் பலர் இருக்கின்றனர். இவரது இசைநலத்தை முடிவேந்தர் முதல் அனைவரும் பாராட்டி, இவர்கட்குப் பரிசில் நல்குவர். "ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென, மாட மதுரையும் தருகுவன்" (புறம்: ௩௨) என்று சான்றோர் கூறுதல் காண்க. யாழ் இசைப்போர் மாலையிற் செவ்வழிப் பண்ணும், காலையில் மருதப் பண்ணும் இசைத்தற்குரியர்; நின் கொடைநலத்தால் மயங்கி, தலை தடுமாறி, "மாலை மருதம் பண்ணிக் காலைக் கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி" இசை நெறியை "எமர் மறந்தனர், அது நீ புரவுக் கடன் பூண்டவண்மை யானே" (புறம்: ௧௪௯) என்று வன்பரணர் வல்விலோரிக்குக் கூறுகின்றார். மண்முழா, பண்யாழ், கண்விடு தூம்பு, களிற்றுயிர், எல்லரி, ஆகுளி, பதலை, முதலாக இசைக்கருவிகள் மிகப் பலவாகும். அவற்றை இசைக்குந் துறை இருபத்தொன் றென்பார், "மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி" (புறம்: ௧௫௨) என்று சான்றோர் கூறுகின்றனர். பண்டைத் தமிழ்ச் சங்க இலக்கியம் முழுதும் இசைக்கலைக்கும் நாடகக்கலைக்கும் பேராதரவு தந்து சிறப்பித்த பெருமையே பேசப்படுமெனின், அது சிறிதும் புனைந்துரையாகாது.

இதுகாறும் புறநானூறு காட்டும் பண்டைத் தமிழ் நாகரிகம் என்பது பொருளாக, பண்டைத் தமிழ் நன் மக்களிடையே இருந்த சமூக வகைகள், அவர்தம் உறை யுள்வகை, உண்டிவகை, உடைநலம், அணிவகை, தொழின்

உ௩௦ புறநானூற்றுச்
சொற்பொழிவுகள்

முறைகள், வாணிபம், அரசியல், போர்முறை, வள்ளன்மை, இல்வாழ்க்கை, வீரம், சான்றாண்மை கடவுட்கொள்கை, துறவு, ஈமக்கடன், கொள்கைகள் முதலிய கூறுபாடுகளை ஒரு வகையாகக் கூறிவரக் கேட்குமாற்றால், என்னைப் பேசுவகையில் ஊக்கி மகிழ்வித்த உங்கள் திருமுன், முடிவாக அத் தமிழ் நன்மக்கள் மேற்கொண்டின்புற்ற விழாக்கள், விளையாட்டுக்கள் முதலியவற்றைப் பற்றிச் சிறிது கூறி என் சொற்பொழிவை முடித்துக்கொள்ளக் கருது கின்றேன்.

## ௧எ. விழா

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யைச் சிறப்பிக்கப் புகுந்த நெட்டிமையார் என்னும் சான் றோர், அப் பெருவழுதியின் முன்னோன் ஒருவன் கடற் றெய்வத்துக்கு முந்நீர் விழாவொன்றாற்றி, பஃறுளியாற் றினை ஏற்படுத்தினான் என்பார், "குடுமி தங்கோ....முந் நீர் விழவின், நெடியோன். நன்னீர்ப் பஃறுளி" (புறம்: ௯) என்று குறிப்பிடுகின்றார் பெரிய மாட மனைகளில் விழாக் கள் கொண்டாடப்படுகின்றன; அக்காலத்தே செம்மறிக்

கடாக்களைப் பலியிடுகின்றனர் (புறம்: ௩௩). போர் நிகழ்ந்த பின் அதன்கண் விளைந்த வெற்றி குறித்து வெற்றி விழா வயர்தலும் இந்நன்மக்கட்கு இயல்பு (புறம்: ௮௪). விழாக் காலங்களில்களமர் அரியல் என்னும் கள்ளை ஆமை யிறைச்சி யுடன் உண்டு, ஆரல் மீனைச்சுட்டுக் கதுப்பிலடக்கிக்கொண்டு உறக்கமின்றி இரவு முழுதும் விளையாட்டயர்கின்றனர் (புறம்: ௨௧௨). திருமணங்களை விழவென்று கூறி அக் காலத்துப் புதியராய் வந்தோரைச் சிறப்பிக்கும் செயலை, "வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம், வெவ்வாய்ப்

பெய்த பூதநீர் சால்க"

கிழார் உரைக்கின்றார்.

(புறம்: ௩௭௨) என்று மாங்குடி

இவ்வாறு சிறு சோற்றுவிழாவும்,

வில்விழாவும் பிறவும் காணப்படுகின்றன.





## ௧அ. விளையாட்டு

இனி, விளையாட்டு வகைகளைக் கூறலுற்றால், என் சொற்பொழிவு மிக நீளும் என்று அஞ்சுகின்றேன். குறவர் சிறார் ஊகம்புல்லின் நுனியில் உடைமுள்ளைச்[1] செருகி வளாரால் செய்த வில்லில்வைத்து அம்பெனத் தொடுத்து விளையாடும் நலமும், "நெடுநீர்க் குட்டத்துத் துடும் எனப் பாய்ந்து, குளித்து மணற்கொண்ட" இளமை நலமும், மகளிர் ஓரையாடுவதும், கழங்காடுவதும், கடலிற் குதித்து விளையாடுவதும், நரை முதியோர் சூதாடுவதும் இத் தமிழ் நன்மக்கள்பால் பெருகக் காணப்படுகின்றன. மற்போர்க் குக் குறைவில்லை; அல்லிக் கூத்தும் குரவைக் கூத்தும் ஆங் காங்கு நிகழ்கின்றன.

கரும்புவிளை கழனியில் வேலை செய்யும் உழவர் அதன் வேலிக்குப் புறத்தேயிருந்து கரும்பு கேட்போருக்கு அறங் குறித்துச் சில வெட்டி வெளியே யெறிகின்றனர்; அவ்விடம் கூத்தராடும் களம்போலத் தோன்றுகிறதென்பார், "புறஞ் சிறை மாக்கட்கு அறங்குறித்து அகத்தோர், புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப், பூப்போது சிதைய வீழ்ந் தெனக் கூத்தர் ஆடுகளம் கடுக்கும்" (புறம்: உஅ) என்று கூறுகின்றனர்.

## கூ௩௦. வழக்கு

ஏணிச்சேரி முடமோசியார் என்பார் ஆஅய் என்பானைக் கண்டு பாடிப் பரிசில் பெற்றுவருமாறு விறலியொருத்திக்குக் கூறுவாராய், நீ ஆய் அண்டிரனைக் கேட்டிருப்பையே யன்றிக் கண்டிராய்; காண்டல் வேண்டினையாயின், நின் கொண்டைமேல் காற்றடிக்கச் செல்க என்பார், "நின் விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக், கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி... சென்மே" (புறம்: ௧௩௩) என்கிறார். சிறக்கச் செல்க என்றற்கு அக்காலச் சான்றோர் 'கூந்தலில் வரைவளி யுளரச் செல்க' என்னும் வழக்கொன்றினை வழங்கி யிருத்தலைக் காண்மின்.

---

1. இதனைக் குடைவேல் என்றும் வழங்குவர்.

“இல்லார்க்குக் கிழியீடு வாய்த்தாற்போல்” என்று திருவிளையாடற் புராணம் முதலிய பிற்கால நூல்களிற் காணப்படும் வழக்காறுபோலக் “கிளியீடு வாய்த்தாற் போல” என்றொரு வழக்கு இத் தமிழ்ச் சான்றோர் வழக்கின்கட் காணப்படுகிறது. தன்னை நாடிவரும் இரவலர்க்கு நாஞ்சில் வள்ளுவன் தன் பெருவளத்தை வரையாது வழங்கும் வண்மையைச் சிறப்பிக்கப் புக்க மருதனிள நாகனார் என்னும் சான்றோர், நாஞ்சில் வள்ளுவன், “கிளிமரீஇயவியன் புனத்து, மரனணி பெருங்குரலனையன்” (புறம்: கங-அ) என்று பாராட்டுமாற்றால், இவ் வழக்காற்றினைப் புலப்படுக்கின்றார். எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழைபெய்யும் என்ற வழக்கு இக் காலத்துமுண்டு; எறும்பு முட்டைகொண்டு செல்லக் காணின் விரைவில் மழை வரும் என்று நாமும் சொல்லுகின்றோம். இவ் வழக்கும் கருத்தும் பல நூற்றாண்டுகட்கு முன்பே நிலவிய தொன்று என்பதை, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், “பொய்யா எழிலி பெய்யிடம் நோக்கி, முட்டைகொண்டு வற்புலம் சேரும், சிறுநுண்ணெறும்பு” (புறம்: களங) என்று கூறுவதனால் தெளியலாம்.

சங்கு வயிற்றில் முத்துண்டாகும் திறம், இக் கால ஆராய்ச்சியாளரால் வேறுவகையாகக் கண்டுரைக்கப்படுகிறதெனினும், பண்டையோர், அது மழைத்துளியால் உண்டாயிற்றெனக் கருதியது, “மிசைப்பெய்த நீர் கடற் பரந்து முத்தாகுந்து” (புறம்: ந-அ0) என வரும் சான்றோருரையால் துணியப்படுகின்றது.

“நிலத்துக் கணியென்ப நெல்லும் கரும்பும்” எனப்

பாராட்டப்படும் கரும்பின் வகைகள் பல நம் நாட்டிற் காணப்படுகின்றன. இவற்றுள் சாவகக் கரும்பென்றும், பன்றிக் கரும்பென்றும் இருவகை யுண்டு. இவற்றுள் பன்றிக் கரும்பு, பன்றி நாட்டதென்று எங்கள் ஔவையார் குப்பத்துக்கு அருகிலுள்ள ஆலைக் கிராமத்தில் வாழ்ந்த முதியோர் கூறக் கேட்டிருக்கின்றேன். அவ்



வூரில் நெடுங் காலமாகக் கரும்பன்றி வேறு விளைபயன் சிறப்பாக இல்லாமை பற்றியே, அதற்கு ஆலைக்கிராமம் என்னும் பெயர் வழங்கி வருவதாயிற்றென்பது ஓய்மா நாட்டார் நன்கறிந்த செய்தியாகும். சாவகக்கரும்பு என்பது எக் காலத்து நம்நாட்டிற்கு வந்ததென்று அவ் வூரவர்க்குத் தெரியவில்லை. புறநானூற்றுக் காலத்தே கரும்புவகை யொன்று வேற்று நாட்டிலிருந்து கொணரப் பட்டிருக்கிறது. இதனை எங்களூர்க்குரிய
முதல்வியாகிய ஔவையார், அதியமானைப் பாடுமிடத்து, அவன் முன்னோர், கரும்பினை வேற்று நாட்டிலிருந்து கொணர்ந்த செய்தியைக்

குறிப்பிட்டு, "அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும், அரும்பெறல் மரபிற் கரும்பிவண் தந்தும், நீரக விருக்கை ஆழி சூட்டிய, தொன்னிலை மரபின் நின் முன்னோர்" (புறம்: கூகூ) என்றும், "அந்தரத்து அரும்பெற லமிழ்த மன்ன, கரும்பிவண் தந்தோன் பெரும்பிறங் கடையே" (புறம்: நகூஉ) என்றும் கூறியிருக்கின்றார்.

இனி இப் புறநானூற்றுக்கு உரைகண்ட சான்றோர், "அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்" என்ற தொடர்க்குப் "பெறுதற்கரிய முறைமையையுடைய கரும்பை விண்ணுலகத்தினின்று இவ்வுலகத்தின்கட் கொடுவந்து தந்தும்" என்று உரை கூறுகின்றார். "விண்ணுலகத்தினின்று" என்பதை வருவித்தமைக்குக் காரணம் தெரிந்திலது; அவரும் கூறினாரில்லை. மீண்டும், "அந்தரத்து அமிழ்தமன்ன கரும்பு" என்று ஔவையார் கூறியருளினாரேயன்றி, அந்தரத்தினின்று கொணரப்பட்டதென்றாரில்லை. இவணென்ற சொற்கு இவ் வுலகமென்று பொருள் கொண்டமையின், கரும்பிருந்த விடம் அவணென்றாகித் தேவருலகமாயிற்றுப் போலும். சீனர் தேவர்[1] எனப்படுதலின், அவர் நாட்டிலிருந்து ஒருகால் இக் கரும்பு கொண்டுவரப்பட்டிருக்குமோ என்று நினைத்தற்கு இடமுண்டாகிறது. இது நன்கு ஆராயத்தக்க தொன்றாகும்.

1. Celestials.

வையாவிக் கோப்பெரும்பேகனை அவன் மனைவி கண்ணகி காரணமாகப் பாடிச் சென்ற கபிலர், "வேண்டுங் காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக் காலத்து ஒழித்தற்கும் குறவர் மழையைப் பலிதூவிப் பரவுவர் என்ற கருத்தமைய, "மலைவான் கொள்கென உயர்பலி தூஉய், மாரியான்று மழைமேக் குயர்கெனக், கடவுட் பேணிய குறவர் மாக்கள்" (புறம்: கசஙு) என்று பாடுகின்றார். இப் பாட்டிற் காணும் குறவர் வழக்கு, இக்காலத்தே பர்மிய நாட்டவர்பாலும் காணப்படுகிறதென ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.

இவ்வாறு ஆராய்ச்சியாளர் செய்யும் ஆராய்ச்சிகள் பலவற்றாலும் பல்வகைப் பொருள்களைத் தெரிந்து கோடற்கு இடமாய், ஆராய்வார்க்கு ஆராயுந்தோறும் புதுப்புதுக் கருத்துக்களை வழங்கி யின்புறுத்தும் அறிவின்ப நிலையமாய்ப், பண்டைத் தமிழநன்மக்களின் நாகரிகத்தை யறிந்து தெளிதற்குச் சீரிய சான்றாய் விளங்கும். இப் புறநானூறு காட்டும் பண்டைத் தமிழ் நாகரிகத்தை இதுகாறும் ஓரளவு என் சிற்றறிவின் சிற்றெல்லையில் நின்று கண்டு உங்கள் திருமுன் தெரிவித்தேன். இதனை அன்போடு கேட்டுச் சிறப்பித்த உங்கட்கு என் வணக்கத்தையும், இதனை ஆராய்ந்து கண்டுரைத்தற்கு வேண்டும் இடமும் காலமும் வாய்ப்பும் அமைத்தளித் துதவிய தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்கு என் அன்பார்ந்த நன்றியறிவினையும் பணிவோடு தெரிவித்துக்கொண்டு என் சொற்பொழிவை இவ்வளவில் நிறுத்திக்கொள்கின்றேன்.

---

# ௧. புறநானூறும் வானநூலும்

[ கணியர், டாக்டர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை.]

## ௧. தோற்றுவாய்

பூவுலகில் முதன் முதல் மக்கள் தோன்றிய இடம் தமிழகமே என்பது உலக ஆராய்ச்சிப் பெரும்புலவர்களால் நம்பமுடிந்த உண்மை. ஆதலின் மக்கள் முதன் முதலாகப் பேசிய மொழி நம் தெய்வத் தமிழ் என்பதும் மறுக்க முடியாத உண்மையாம். தமிழகத்திலிருந்து பல்கிப் பெருகிய மக்கள் உலகின் பலவேறு பகுதிகளிலும் சென்று குடியேறியவராவர்; ஆதலின் உலகத் தாய்மொழி தமிழ்தான் என்பதும் நிலைபெறும். ஆரியம் எனப்படும் வடமொழி முதலிய பலவேறு மொழிகளுக்கும் தாய்மொழி தமிழ் மொழிதான். இயல், இசை, நாடகம் என மூன்று பெரும் பகுதிகளையுடையதாகித் தமிழ்ப் பயிர் சீரும் சிறப்புமாக

வளர்ந்தோங்கியிருந்தது. வானநூல் முதலிய நுண்பெருங் கலைகளெல்லாம் ஒப்புயர்வற்ற நிலைமையில் திகழ்ந்திருந்தன. இந்நிலை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நிகழ்ந்தது. தமிழர் கலைகளும் நாகரிகமுமே இன்று பலவேறு உருவில் உலகிற் காணப்பெறுவன என்பதை நாம் அசைக்கமுடியாத பல தக்க சான்றுகளினால் நிலைநாட்டமுடியும். அத்தகைய சான்றுகளில் ஒன்று பண்டைத் தமிழ் இலக்கியங்களாம். அவைகளுள் இன்று நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டது புறநானூறு; இதில் எமது பங்கு வானநூலைப் பற்றியது. யாமறிந்த அளவில் புறநானூற்றிலுள்ள வானநூற் குறிப்புகள் சிலவற்றைத் தங்கள் முன்பு தெரிவித்து அவைகளிலிருந்து வெளிப்படும் உண்மைகளை ஆராய்வதே யாம் பெற்ற கடமை.



## உ. நாளும் கோளும்

வானத்து மின்னுகின்றனவெல்லாம் மீன்கள்; புறநானூறு பாடல் (கO௬) "வானத்து மீன்", (கஉ௬) "வானக மீன் பல பூப்பின்", (உ௭O) "பன்மீன் இமைக்கும் மாக விசும்பின்", (ங௬௭) "வானத்து வயங்கித் தோன்று மீனினும்" என்பன காண்க. இம் மீன் நாள்மீன், கோள்மீன் என இருவகைப்படும் புறநானூறு பாட்டு உ௪. அடிகள் உ௪-உ௫-:—

"நின்று நிலைஇயர் நின் நாண்மீன், நில்லாது
படாஅச் செயலியர்நின் பகைவர் மீனே"

என்பன.

இதன் உரை "நின்று நிலைப்பதாக நினது நாளாகிய மீன்; நில்லாது பட்டுப்போவதாக நின் பகை வருடைய நாளாகிய மீன்." என்பது. 'நினது நாளாகிய மீன்' என்பது 'நீ பிறந்த நாளாகிய மீன்' என விரியும். ஒருவர் பிறந்த நாளன்று விண்ணில் மதி நின்ற இடத்தி லிருந்த மீன்தான் நாள்மீனும்; அது நின்று நிலைப்பதாக என்று கூறுவது நீ நீடு வாழ்வாயாக என வாழ்த்துவதாம். பண்டைப் பெரியார் விண்ணில் மதி செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தேழு பிரிவுகளாகப் பிரித்து, அப் பிரிவுகளை அறிந்துகொள்ளும் அடையாளமாக இருபத் தேழு விண்மீன் தொகுதிகளைக் குறித்தமைத்தனர். (புறம். கசுO-ல்) "மதிசேர் நாள்மீன் போல" என வரும் அடிக்கு உரையாசிரியர் "திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனை ஒப்ப" எனக் கூறும் உரையைக் காண்க. "நாள் மீன்கள் இயற்கை ஒளியுடையன; அவை தாமே மின்னுவன; அவை ஒவ் வொன்றும் நமது ஞாயிற்றைப்போல ஒவ்வொரு ஞாயிறு" எனக் கூறுவார் ஆராய்ச்சி அறிஞர். பிற மீன்களிலிருந்து நோக்குவாருக்கு நமது ஞாயிறு ஒரு மீன் போலவே தோன் றும். இயற்கை ஒளியையுடைய நாண்மீன்களின் ஒளி யைக்கொண்டு விளங்குவன கோள் மீன்கள் எனப் பெறும்; கொள்ளுவது கோள். புறநானூறு கூஉ அடி கஎ-ல் "கோள்மீன் அன்ன பொலங்கலத்தளைஇ" என்பது காணப்

படுகிறது. ஞாயிற்றின் ஒளியைக் கொள்ளுவதால் ஒளியுடன் காணப்படுவன கோள்கள்; அவை ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன ஏழும்; இராக்கோள்களாகிய இராகுவும் கேதுவும் நிழற் கோள்கள் எனப்பெறுகின்றன; இவையிரண்டும் சேரக் கோள்கள் ஒன்பது ஆகும். ஞாயிறு மீனல்லவா? அதனைக் கோள்களுடன் சேர்ப்பதென்னை? எனின், நாம் வாழும் மண்ணுலகம் ஒரு கோள்; அது ஞாயிற்றைச் சுற்றி வருகின்றது; அதன் சுழற்சியைக் காட்டுவது வேண்டுமல்லவா? அதற்காக அதற்கு நேர் எதிர்நிலையிலிருக்கும் ஞாயிற்றின் போக்கு என்பது கணக்கிடப் பெறுகிறது. ஞாயிற்றின் பெயர்ச்சி என்பது உண்மையில் பூமியின் பெயர்ச்சியே. ஞாயிறு அசையாது நிற்பதாக இருந்தாலும், மண்ணுலகப் போக்கினால், அசைவதுபோலக் காணப்படுகிறது. புறநானூறு அஉ-ல் "ஞான்ற ஞாயிறு" என்ற சொற்றொடருக்கு உரையாசிரியர் "ஞாயிறு விழுந்த பொழுதின்கண்" என்று உரை கூறுகின்றார். ஞாயிறு விழுவதுபோலக் காணப்படுவதற்கும், மறுபடி எழுவதுபோல இருப்பதற்கும் மண்ணுலகின் சுழற்சியே காரணம்; உண்மையிற் சுழல்வது உலகமே. இயற்கை ஒளியில்லாமல் ஞாயிற்றின் ஒளியையே கொள்ளும் கோள்களாகிய திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகியவற்றோடு ஒன்றாகிக் கிட்ட இருப்பதனால் விட்டுவிட்டு மின்னுமலும் இந்தக் கோள்களுக்கெல்லாம் பிறப்பிடமாகியும், பிற கோள்களெல்லாம் தன்னைச் சுற்றி வர நடுவே அசையாது விளங்குவதாகியும் இருத்தலினாலே ஞாயிறு 'கோளரசு' என்று பட்டம் பெறுவதாயிற்று.

## ௩. ஞாயிறும் திங்களும்

ஞாயிற்றினிடமிருந்து தெரித்து வந்த மண்ணுலகத்திலிருந்து தெரித்துப்போன சிறு உருண்டையே திங்கள்; ஆனபடியால் அது ஞாயிற்றையும் சுற்றுகிறது; தனக்கு நேர் பிறப்பிடமாகிய பூமியையும் சுற்றுகிறது.

௨௩அ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

கோள்மீனாகிய திங்கள் வானில் நிலையே நாண்மீன் என்கிறோம். அது அன்றன்று நிற்கும் ஞாயிற்றோடு ஒன்று சேர்வதும், பிரிந்து நேர் எதிர்ப்பக்கத்தை அடைவதும் ஆகும்போது அதன் ஒளி நாளுக்குநாள் வளர்ந்து முழு . வட்டமாகக் காணப்பெறுகிறது. இங்ஙனம் இது முற்று வதைப் பற்றிப் புறநானூறு ௩௦௦-வது பாட்டு அடிகள் ௧-௨-ல

> "மாக விசும்பின் வெண்டிங்கள்
> மூவைந்தான் முறைமுற்ற

என்று கூறுகிறது. "பதினைந்து நிலைகளை"

மதி அடை
கிறது; அப்படியே
நிலைகளை அடையும்.

குறையும்போதும் அது பதினைந்து
வளர்வது வளர்பிறை என்றும், தேய்
வது தேய்பிறை என்றும் சொல்லப்பெறும்.
புறநானூறு
கசஅ-வது பாட்டில் "எண்ணுட்டிங்கள் அனைய" என்ப
தற்கு உரையாசிரியர் "எட்டாம் பக்கத்துப் பிறைபோலும்"
எனப் பொருள் கூறுகின்றார். "மூன்றாம் பிறை,
பிறை" எனப் பெறும் உலக வழக்கும் காண்க.

நான்காம்

ஒளிபெற்ற முழுப்பக்கமும் நமக்குத் தெரிய இருக்
கும் திங்கள் முழுமதி என்றும், நிறைமதி எனவும், முழு
நிலா என்றும் உவவுமதி எனவும் பெயர் பெறும். புறநா
னூறு பாடல் ந-ல் "உவவு மதி உருவின் ஓங்கல் வெண்
குடை" என்பதற்கு உரையாசிரியர் "உவாநாளின் மதி
யினது வடிவுபோலும் வடிவினையுடைய உயர்ந்த வெண்
கொற்றக்குடை" எனக் கூறும் உரை காண்க. உவாமதி
யன்று திங்களும் ஞாயிறும் எதிர் எதிராக நிற்கும்; திங்கள்
தோன்றும்போது ஞாயிறு மறையும். இது புறநானூறு
சுரு-வது பாட்டில்,

"உவவுத்தலைவந்த பெருநாள் அமையத்து
இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்கு"

என்றும், அதன் உரையில் "உவாவந்து கூடிய பெரிய
நாளாகிய பொழுதின்கண் ஞாயிறும் திங்களும் ஆகிய இரு



சுடரும் தம்முள் எதிர்நின்று பார்த்து அவற்றுள் ஒரு சுடர் புல்லிய மாலைப்பொழுதின்கண் மலையுள்ளே ஒளித்தாற்போல" எனவும் கூறப்பெறுவது காண்க.

## ௬. வெள்ளி

வெள்ளை நிறமுடைய கோள் வெள்ளி. நாள் மீன் விட்டு விட்டு மின்னும். கோள்மீன் விட்டுவிட்டிமைக்காது கண்ணாடிபோலத் தான்பெற்ற ஒளியைக் காட்டும். வெள்ளி மாலையிலோ காலையிலோதான் காணப்படும். காலையிற் றோன்றும் வெள்ளியே விடிவெள்ளி என்று சொல்லப் பெறும்.

புறநானூறு ௩அ௫-ல் "வெள்ளி தோன்றப் புள்ளுக் குரல் இயம்ப" என்றும், ௩கூஎ-ல் "வெள்ளியும் இருவிசும் பேர்தரும்...............பையச் சுடரும் சுருங்கின் றொளியே" (சுடர்—திங்கள்) எனவும், ௩கூ௮-ல் "மதிநிலாக் கரப்ப வெள்ளி ஏர்தர" என்றும் வருவன விடிவெள்ளியைக் குறிப்பன.

வெள்ளி மழைக்கோள். இது தெற்கே விலகி யிருப்பது மழையில்லாமைக்கு அறிகுறியாம். பாட்டு ௩௮௮-ல்,

"வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை"

என வரும் அடிகளைக் காண்க.

## ௫. வெள்ளியும் பிறவும்

வெள்ளி தெற்கே விலகிப் போவது எப்படி மழை வளம் குறைவதற்கு அறிகுறியோ அப்படியே தூமம் (வால் வெள்ளி) தோன்றுவதும், சனி மீன் புகைவதும் தீக்குறிகளாம். ககஎ-ம் பாட்டில்,

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கில் வெள்ளி ஓடினும்
வயலக நிறையப் புதற்பூ மலர"

என வரும் அடிகளும், இவைகளுக்கு உரையாசிரியர், "சனி மீன் (மைம்மீன்) புகைகளோடு கூடிப் புகையினும் எல்லாத் திசையினும் புகை (வால் வெள்ளி) தோன்றினும் தென் திசைக்கண்ணே வெள்ளி போக்குறினும் வயலிடம் விளைவுமிகப் புதலிடத்துப் பூ மலர" என்று குறித்துள்ள உரையும் காண்க.

இப் பாட்டின் அடிக்குறிப்பாக உள்ள
பின்வரும்
பகுதி ஆராயத்தக்கது :—

"சனி கரிய நிறமுடையனாதலின் மைம்மீன் என்றார்; சனி புகைதலாவது, இடபம் சிங்கம் மீனம் இவற்றோடு மாறுபடுதல்; இவற்றுள், சனி தனக்குப் பகைவீடாகிய சிங்கராசியிற் புகின் உலகிற்குப் பெருந் தீங்கு விளைவிப்பனென்பதை, 'மகத்திற் புக்கதோர் சனி எனக் காணாய்' (தேவாரம்)...............என்பவற்றானுணர்க...............தூமம் புகைக்கொடியென்றும் கூறப்படும்; தூமகேது என்பதும் இதுவே; இது வட்டம், சிலை, நுட்பம், தூமம் என்னும் கரந்துறை கோட்கள் நான்கனுள் ஒன்று, இதன் தோற்றம் உலகிற்குப் பெருந் தீங்கு விளைவிக்கும் என்பர்...."

இங்ஙனமே கனலி (ஞாயிறு) வேறுபடத்
தோன்று
தலும், எரிகொள்ளி விழுதலும் தீமை
குறிக்கும் அடை
யாளங்களாம். பாட்டு ௩௫-ல்,

"அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்

இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட”

எனவும் அதன் உரையில் “விளங்கிய சுடரையுடைய ஞாயிறு நான்கு திக்கினும் தோன்றினும், விளங்கிய கதிரையுடைய வெள்ளிமீன் தென்திசைக்கண் செல்லினும் அழகிய குளிர்ந்த காவிரி வந்து பலகாலாய் ஓடியூட்ட” என்றும் வரும் பகுதிகளும், பாட்டு சக-ல்,

“திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்......
வெங்கதிர்க் கனலி துற்றவும்”



(உற்கம்-எரிகொள்ளி; துற்றவும்—செறிந்து தோன்றவும்) என்றும் அதன் உரையாக “எட்டுத் திசையும் எரிகொள்ளி எரிந்து விழவும்....வெய்ய சுடரையுடைய ஞாயிறு பலவிடத்தும் செறிந்து தோன்றவும்” எனவும் வரும் பகுதிகளும்; பாட்டு ஙகூஎ-ல் “தெறுகதிர்க் கனலி தென்திசைத் தோன்றினும், என்னென் றஞ்சலம் யாமே” என்றுள்ள அடிகளும், பாட்டு ஙகூடு-ல் “எரி தோன்றினும் குளமீனொடும் தாள்புகையினும்” என்றும் இதன் அடிக் குறிப்பாக உள்ள “எரி, குளமீன், தாள் என்பன வான்மீன் விசேடங்கள்” எனவும் உள்ள பகுதிகளும் ஆராயத் தக்கன.

## ௬. செவ்வாய்

சிவந்த நிறத்தையுடையது செவ்வாய். இது பாடல் சு0-ல் "முந்நீர் நாப்பண் திமிற்சுடர் போலச், செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்" என்று கூறப்பெறுகிறது. இவ் வடிகளுக்கு உரையாசிரியர் "கடல்நடுவே தோன்று கின்ற திமிலின்கண் இடப்பட்ட விளக்குபோலச் செவ்வாய் மீன் விளங்கும் மாகமாகிய விசும்பினது........செம்மீன்—திருவாதிரையுமாம்" என உரை வகுத்துள்ளார்.

## எ. வடமீன்

வடமீன் என்பது அருந்ததி; கற்புக்கு ஓர் எடுத்துக் காட்டு. இது பாட்டு கஉஉ-ல் "வடமீன் புரையும் கற்பின் மடமொழி" என்று குறிப்பிடப் பெறுகிறது.

## அ. கோட்போர்

கோள்கள் ஒரே இடத்தில் வருவதை அவை போர் செய்கின்றன என அறிஞர் கூறுவர். பாட்டு நஅசு-ல் "ஏலா வெண்பொன் போருறு காலை" என வரும் அடி இதனை விளக்கும். வெண்பொன்—வெள்ளிக்கோள்.





## சு. கணியன்

கணியன் கணக்கு வல்ல புலவன்; இவனே கணி எனவும் பெயர் பெறுவான். "வினைவெல்லாம் கண்ணியுரைப் போன் கணி" என்பது புறப்பொருள் வெண்பாமாலை. பூங்குன்றிலிருந்த புலவர்பெருமான் பின்வருவன வெல்லாம் கண்ணி யுரைக்கும் பெருமையுடைமையால் கணியன் பூங்குன்றன் என்னப் பெயர் பெற்றார். மூலம் என்ற நாளிற் பிறந்தமையால் ஆலூர் மூலங்கிழார், ஐயூர் மூலங் கிழார் என்ற திருப்பெயர்கள் அப் புலவர்களுக்கு இடப் பெற்றன என்பர் அறிந்த மேலோர்.

கூடலூர்கிழார் என்ற புலவர் பெருந்தகை ஒரு பெரிய கணி. அவரது பாட்டு புறநானூற்றில் உ௨௬-ஆகக் காணப்பெறுகிறது. அதனை ஆராய்வதால் வானநூற் கருத்துக்கள் பல புலனாகின்றன. ஆதலின் அதனை மேலே விரிவாக ஆராய்வாம்.

> "ஆடியல் அழற்குட்டத்து
> ஆரிருள் அரையிரவின்
> முடப்பனையத்து வேர்முதலாக்
> கடைக்குளத்துக் கயம்காயப்
> பங்குனி உயர் அழுவத்துத்
> தலைநாண்மீன் நிலைதிரிய
> நிலைநாண்மீன் அதன் எதிர்வர்தாத்
> தொன்னாண்மீன் துறைபடியப்
> பாசிச் செல்லாது ஊசி முன்னாது
> அளக்கர்த்திணை விளக்காகக்
> கனைஎரி பரப்பக் கால்எதிர்பு பொங்கி
> ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே."

என்பது பாட்டின் முற்பகுதி. "இங்ஙனம் அம்மீன் விழுந் ததனால் ஏழு நாட்களுக்குள் அரசனுக்குக் கேடு வரும் என அஞ்சினோம். அஞ்சினபடியே ஏழாநாள் மன்னன் இறந்தனன்" என்பது பிற்பகுதியின் கருத்து. மேலே



கண்ட முற்பகுதிக்கு உரையாசிரியர் குறித்த

உரை பின்
வருவது :—

"மேட இராசி பொருந்திய கார்த்திகை நாளின் முதற் காலின்கண் நிறைந்த இருளையுடைய பாதியிரவின்கண் முடப்பனை போலும் வடிவையுடைய அனுடநாளின் அடியின் வெள்ளி முதலாகக் கயமாகிய குள வடிவுபோலும் வடிவையுடைய புனர்பூசத்துக் கடையின் வெள்ளி எல்லையாக விளங்கப் பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின் கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும் சாய அதற்கு எட்டாமீனாகிய மூலம் அதற்கு எதிரே எழா நிற்க அந்த உத்தரத்திற்கு முன் செல்லப்பட்ட எட்டாமீனாகிய மிருகசீரிடமாகிய நக்கத்திரம் துறையிடத்தே தாழக் கீழ்த் திசையிற் போகாது வடதிசையிற் போகாது கடலாற் சூழப் பட்ட பூமிக்கு விளக்காக முழங்காநின்ற தீப்பரக்கக் காற் றாற் பிதிர்ந்து கிளர்ந்து ஒரு மீன் வீழ்ந்தது வானத்தினின் றும்."

இதன் கருத்து: அது பங்குனி மாதம் முதற் பதினைந் தில்; கார்த்திகை நாள், நிறைந்த இருட்டு; உத்தரம் உச்சியிலிருந்து சாய, மூலம் எழ, மிருகசீரிடம் மறைய
ஒரு மீன் வடக்கும் கிழக்கும்
தீப்பரக்க விழுந்தது. இதனைக்
கூடலூர்கிழார், கோச்சேரமான்

போகாமல் இடைநடுவே
கண்ட புலவர் பெருமான்
யானைக்கட் சேஎய் மாந்த
ரஞ் சேர இரும்பொறை அதன் ஏழாம் நாள்
இறப்பானென
அஞ்சினர்; அவர் அஞ்சியபடியே அவன் இறந்தான்
; என்றால், அக்காலத்து வான நூலறிவு
எவ்வளவு மேம்பட்டிருந்த தென்பது புலனாகின்றது.

இப்பாட்டிலுள்ள சொற்களும்,
சொற்றொடர்களும்,
பொருளும் துணிந்து ஆராய்ந்து கண்டறியும் தன்மை யன. இதிலுள்ள சொற்களெல்லாம் தனித்தமிழ்ச் சொற் கள். வடமொழிக் கலப்பில்லாமல் உயர்ந்த வான நூற் கருத்துக்கள் செய்யுட்களிலும் மிக எளிதாக விளக்கப் பெற்று வந்தன என்பதற்கு இப்பாட்டு ஒரு சரியான எடுத்துக் காட்டு.

பாட்டு உ0சு-ல் "புள்ளும் பொழுதும் பழித்தலல்லது" என்ற அடியையும், அதற்கு "அப்பொழுது செய்யும் புள் நிமித்தத்தையும் புறப்பட்ட முழுத்தத்தையும்" என வரும் உரையையும் ஆராயுமிடத்து முழுத்தம் என்ற சொல் தனித் தமிழ்ச் சொல் என்பது விளங்கும். அதுதான் பொழுது எனவும் கூறப் பெறும். முன் காட்டிய கூடலூர் கிழார் பாட்டு (புறம்: உஉக)க்கு உரையில் மிருகசீரிடமாகிய நக்கத்திரம் என்பது காணப்பெறுகிறது. முழுத்தம், நக்கத் திரம் என்பன தனித் தமிழ்ச் சொற்கள்; பொருத்தங்கள் முழுதும் பொருந்திய பொழுதுதான் முழுத்தம்; மிகுதி யாக ஒளியுடையது நகு + அம் + திரம் = நக்கத்திரம்; முறையே பிறரால் முகூர்த்தம் என்றும் நட்சத்திரம் என்றும் திரித்து வழங்கப் பெறுகின்றன.

நாம் நமது பழைய சங்க இலக்கியங்களை ஆராய்ந்தால் மேலும் பல அரிய வானநூற் புதுமைகளைக் காணலாம். உலகிற்கே வானநூற் கலையை அருளிய தமிழ்த்தாய் இன்று பிறர் கையை எதிர்பார்த்திருப்பது போலக் காணப் பெறு வானேன்? என்றால் காரணம் பின்வருவன: க. பிறநாடு களிற்போல் அரசியலார் துணை நம் நாட்டுக் கணிகளுக்கு இல்லை; உ. இக்கலையைப் புலவர்கள் தாம் பெற்ற பிள்ளை களுக்குக் கூடச் சொல்லி வைப்பதில்லை; ங. பழந்தமிழ் நாடு கடல் கொள்ளப்பட்டது; ச. பகைவர்கள் தமிழி லிருந்த இக் கலைநூல்களை யெல்லாம் தமது மொழியில் பெயர்த்து வைத்துக்கொண்டு தமிழ் ஏடுகளை அழித்து விட்டமை. ரு. இந் நிலைமையினோடு, சிலரிடமட்டுமிருந்த

ஒன்றிரண்டு ஏடுகள் பகைவர்கள் கையிற் சிக்கி மறைவது எளிதாயிற்று. கூ. நம்மவருக்கும் நமது கலையைப் பேண வேண்டுமென்ற எண்ணம் இல்லாதிருந்தது.

இனியாவது இக் கலை அருமையாகப் பேணி வளர்க்கப் பெறுதல் வேண்டும். கலை வாழ்ந்தால்மட்டும் நாடும், நாட்டு மக்களும் வாழ்வடைதல் கூடும்.

---

# கo. புறநானூறும் சமயமும்

[இளவழகனர்]

## க. நூலின் இயல்பு

இனிய இயற்கை நடையினாலும், கவர்ச்சியான மெய்யுணர்வுக் கருத்துக்களாலும் நூல்கள் அழியாத நிலையினை உலகத்தில் எய்துகின்றன. மக்களும், நாடும், நாகரிகமுங் கூட உலகத்தில் நிலையான புகழை அடைவதற்கு இவைகளே காரணமாயிருக்கின்றன. தமிழ் நாட்டின் அத்தகைய அழியாத தமிழ்த்திரு புறநானூறு!

புறநானூற்றுச் செய்யுட்கள் தோன்றி ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் ஆய்விட்டன. இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ள நானூறு அகவற்பாக்களும், அவ்வளவு நீண்ட காலத்திற்குமுன் விளங்கிய நம் முன்னோர்களின் நல்வாழ்க்கை ஓவியங்களாக மிளிர்கின்றன. அந்தக் காலத்தின் எல்லா வகையான வாழ்க்கை நிலைகளையும், உரிய மக்களின் பெயர், நிலை, இடம் முதலியவற்றுடன் நமக்கு ஒருங்கெடுத்துக் காட்டும் நூல், தமிழில் புறநானூற்றைத் தவிர வேறு விளக்கமானது இல்லை. தமிழர்க்குப் புறநானூறு எவ்வளவு இன்றியமையாத அருட்கொடை! இதனை நமக்குப் பொருள் விளங்கும்படி உரையெழுதி வழங்கிய பழைய உரையாசிரியர் அருளும், இதனை அவ்வுரையோடும் தனித்தும் அண்மையிற் பதித்துக் கொடுத்த பதிப்பாசிரியர் திறனும் எவ்வளவு சிறந்தன!

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கில், இன்பம் ஒன்று நீங்கலாக ஏனை மூன்றையும் முன்னோர் ‘புறப்பொருள்’ என்று வழங்

கினர். சுருக்கமாக அடக்கிக் கூறினுல், இன்பம் அகம் என்றும் பொருள் புறம் என்றுங் கூறிவிடலாம். பொருளை ஒழுங்காகப் பயன்படுத்துவதனுல், பொருளை நுகரும் இன்பத்தினும், சிறந்த பேரின்பமாகிய வீடுபேறு உண்டா தலின், ஒழுங்குமுறை என்னும் அறமும் அதன் பய ஞகிய வீடும் பொருளோடு சேர்த்துப் 'புறப்பொருள்' எனப்பட்டன.

இன்பம் என்பது வெறும் பொருளை மட்டும் நுகரும் இன்பமாக இருப்பின், அதுவும் புறப்பொருளென்றே வழங்கும். புறநானூற்றுப் பதிப்பின் முகவுரையில் ஆசிரி யர் சாமிநாதையரவர்கள், "இந்நூல் அறநிலை, பொருள் நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது........ஊகித்தறியப்படுகின் றது" என்று எழுதியிருப்பது இத்தகைய வழக்கொன் றிற்கு இடந்தருகின்றது. ஆனல் அகப்பொருளென்று கூறப்படும் இன்பமாவது, உயிரறிவின் அன்பை நுகரும் இன்பமாதலின் அது தனியாக 'அகம்' என்றே வழங்கப் படுவதாயிற்று.

வீடு என்னும் நிலை, சொல்லுக்கும் பொது உணர் வுக்கும் எட்டாத உணர்விறந்த சிறப்பு உணர்வு நிலையாகக் கருதப்படுகின்றது. மேலும், அது, அறவொழுக்கத்தின் பயனுக உண்டாவதாயுள்ளது. ஆதலால் அதனை அறம் என்பதிலேயே அடக்கிக் காரணவகையாற் சான்றோர் பேசினர். ஆதலால் நூல்களால் விளக்கிப் பேசக்கூடிய உறுதிப்பொருள்கள் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று மட்டுமே என்பது வழக்காயிற்று.

வாழ்க்கையின் பல நிலைகளும் இவ்வாறு இம் மூவகைப் பாகுபாட்டில் இனிதமைந்து, நூல்களில் அங்கங்கும் விளக்கப்பட்டு வருகின்றன. இதனால், புறப்பொருளையுணர்த்தும் புறநானூறு என்பது, பொருள்நிலை, அறநிலை, வீட்டுநிலை என்பவற்றோடு, பொருள்களைப்பற்றி நுகரும் இன்பநிலை என்னும் புறப்பகுதியையுஞ் சேர்த்து வாழ்க்கை



யின் நிலைகள் பலவற்றை விளக்கிச் செல்லுதல் பெறப்படுதலின், தமிழகத்தின் பழைய வாழ்நெறி யியல்புகளை ஆராய்வதற்கு இந் நூல் தகுந்த கருவியே என்பது இனிது தெளியப்படும்.

சங்ககாலத்து நூல்களுக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. சங்ககாலத்து வாழ்க்கை வேறு, அக் காலத்து நூல்கள் வேறு அல்ல. வாழ்க்கையே நூல்களாக உருவுற்றது. பிற்காலத்திற் பெரும்பாலும் பிறர்க்கு அறம் உரைப்பவர் தாம் அறநெறியில் நிற்பவராக இருப்பதில்லை. பிறராற் புகழ்ந்து கூறப்படுவோரும் அப்
இருப்பதில்லை. கரவும், புனைவும்,

புகழ்க்கு உரியவராக
ஏமாற்றமும் மிகுதி

யாக இருக்கின்றன. சொல் ஒன்று, கருத்தொன்று, செயல் ஒன்று என்னும் புரைபட்ட பொய்ம்மை தலை

விரித்து ஆடுகின்றது. அறம் உரைப்பது வெறும் மரபுக் காக என்றும், மேல் உலகியலுக்காக என்றும் அச்சமின்

றிப் பேசப்படுகின்றது. இவ்வாறிருந்தால், இக் காலத்து நூல்களால் யாருக்குத்தான் என்ன மதிப்புண்டு, பய னுண்டு?

இவ் வகையிற் சங்ககாலத்து நூல்கள், மாசு மறு வற்று அழியாப் பேரொளியும் பெரும்பயனும் பெரு மதிப்பும் உடையனவாய் மெய்வாழ்க்கை மேவித் திகழ் கின்றன. சங்ககால நூல்கள் இங்ஙனந் தூய்மையுடையன.
கருத்தால் மட்டுமன்றிச் சொற்களாலும் அவை இப் பெருமை யுடையனவே. சுருங்கக் கூறினல், தமிழ்க்கும் தமிழ் மக்கட்கும் இப்போது உலக மக்களினிடையில் ஒரு பெருமையுண்டென்று துணிந்தால், அதற்குக் காரணமாக இருக்குந் தூய நூல்கள் பெரும்பாலும் சங்ககால நூல் களே என்று இறுத்துக் கூறிவிடலாம்.

இனிச், சங்ககால நூல்களு க்கேயன்றிச்

சங்ககால
வாழ்க்கைக்கும் ஒரு தனிச் சிறப்பு உண்டென்று
வேண்டும். வாழ்க்கை மேன்மேலும் உண்மை

அறிதல்

காணும்
வாழ்க்கையாக அக் காலத்தில் வளர்ச்சிநெறியில் ஓங்கிச்



சென்றது. கொள்கைகள் வேறாகவும் வாழ்க்கை வேறாகவும் அக் காலத்திற் பிரிவுண்டு நிற்கவில்லை. கலைகளும் பொது அறிவு நிலைகளுமாகிய கொள்கைகள், வாழ்க்கையாகிய சாணையில் இணைந்து உரசி மேன்மேலும் நுட்பமாக்கப் பெற்றுப் பயன்முகமாக விளங்கின.

அறிவுநிலைகள் வாழ்க்கை யொழுக்கங்களாகச் செயற் படும்போது அவை உணர்வு நிலைகளெனப்பட்டுப் பேராற்ற லுறுகின்றன. உணர்வுக்களம் என்பதும், அருட்களம் என்பதும், சமய வாழ்க்கை என்பதும், வாழ்க்கை என்ப தும், செய்கை என்பதும் ஒன்றே. சிறப்பாகக் கூறினால், உணர்வு வாழ்க்கையில், உயர்ந்த உணர்வு வாழ்க்கையே அருள்வாழ்க்கை அல்லது சமயவாழ்க்கை, மெய்வாழ்க்கை என்று நுவலப்படும். ஆதலால், சங்ககால வாழ்க்கை அதனியல்பிற் சமயவாழ்க்கையே என்பது இனிது தெளி யப்படும். சமயவாழ்க்கை வேறென்றும், உலகவாழ்க்கை வேறென்றும் பிரித்துரைக்கும் பிற்காலப் பொய்ம்மை சங்ககாலத்தில் இல்லை.

அறிவுநிலை என்பது மாணவநிலை; உணர்வுநிலை அல்லது வாழ்க்கைநிலை என்பதே இல்லறநிலை. இல்லற நிலையின் உயர்ந்தபடியே ஞானநிலை அல்லது அருள்நிலை என்பது. ஞானநிலை உயர்ந்தவொன்றாதலின், அதன்கண் பயிற்சிநிலை யொன்றும் தெளிவுநிலை யொன்றும் வகுத்துக் கருதப்படும். அறிவுநிலையிலுள்ள மாணவரான ஒருவர், காதற் கற்புடைய தன் உயிர்க்கிழத்தியோடு அன்பாற் கலந்து இன்பவாழ்க்கை துவங்கும் எல்லையிலிருந்தே அவர்க்கு உணர்வுநிலையாகிய (செயல்நிலை, அநுபவநிலை) வாழ்க்கை துவங்குதலின், இன்பமும் பொருளும் அறனும் என்னும் எல்லா உறுதிப்பொருள்களும் உண்மையில் வாழ்க்கைநிலையின் கூறுகளாகவே திகழ்கின்றன.

வாழ்க்கை யென்பது மக்கட்கு ஒன்றே; சமய வாழ்க்கை என்பது அதுவே. அதுதான் இன்பவாழ்க்கை, பொருள்வாழ்க்கை, அறவாழ்க்கை எனக் கூறுகொண்



டுள்ளது. முன்னேற்ற முகமான இத்தகைய வாழ்க்கையின் பயனே வீடு என்பது. இங்ஙனம் உணர்வுநிலையின்

உட்பிரிவுகளாகிய அறம் பொரு ளின்ப வாழ்க்கையிற் சங்க காலம் அருள்முகமாக விளங்கியிருந்தமை இனிது விளங் குதலின், அத்தகைய அருள்வாழ்க்கைக் கூறுகளின் தீர்ந்த ஓவியமாய் எழுந்துள்ள புறநானூறு என்பது, தமிழர் சமய உண்மைகளை அறிவதற்கு எவ்வளவு சிறந்த கருவி.

## உ. சமயமும் கலைகளும்

சமயம் என்னும் அருள்நிலை, கலையன்று. கலைக ளெல்லாம் பெரும்பாலும் அறிவுநிலையைச் சேர்ந்தவை; வாழ்வு அல்லது சமயம் என்பதோ அக் கலைகளின் பயனான உணர்வு நிலையாகும். இவ் வுணர்வுநிலையின் உயர்ந்தபடியே 'அறவாழ்க்கை' என்பது. அதன் முடிந்த தெளிந்த நிலையே, தெவிட்டாத திளைத்த பேரா இயற்கையே, உணர்விறந்த இனிய உணர்வுநிலையே விடுதலை நிலை என்க. இத்தகைய வீட்டின்ப முகமான பொருளின்ப அற வொழுக்கமாகிய சமயம் என்பது, வாழ்நெறி எனப்படுமே யல்லது, அது வெறும் அறிவாராய்ச்சிகளிற் சேர்ந்த கலை யாதல் எங்ஙனம்?

சமயமும் ஒரு கலையாக எண்ணித் தனிக் குறியீடு களும் இலக்கணங்களுந் தோன்றுமாறு அறிவு நிலையில் வைத்து அறியப்பட்ட காலத்திலிருந்துதான், வாழ்க்கை வேறாகவும் சமயம் வேறாகவும் பிரிந்து வெறுஞ் சொல் லாடலுக்கே அது இரையாயிற்று. இதனை உணர்த்தவே 'மோனம் வந்த நிலை ஞானம்' என்றனர் சான்றோர். பேச் சென்பது கலை, செய்கை யென்பது சமயமாதலின் 'மன மிறக்கக் கல்லார்க்கு வாய் ஏன்?' என்றும் அப்பெரியோர் தெளிவுறுத்தினர். சமயங்கள் பல எனப்பட்டதும், அவற்றிடையே வேறுபாடுகளும் பூசலும் உண்டானதும், அவற்றின் விளக்கங்களும் அமைப்புக்களும் சமய நூல்கள் என்று வழங்கப்பட்டதும், மக்கள் அவ்வக்கொள்கைகளின்



பிரிவினராய் வேற்றுமைப்பட்டுத் தம்முள் ஒற்றுமை குறைந்து ஆன்மநேயமின்றி மெய் வாழ்க்கைக்கு உரிய ராகாது சிதைந்ததுமாகிய எல்லாம், சமயத்தை இங்ஙனம் வாழ்க்கைக்கு வேறாக அறிவுநிலையிற் கொண்டு வந்து கலை யாகக் கருதினமையால் வந்த சீர்கேடுகளே யாகும். இத னாலேதான் இத்தகைய பல சமயங்கள் வாயிலாக மெய் வாழ்க்கையை உணரமுடியாதென்று கண்ட சான்றோர், அம் மெய்வாழ்க்கையைச் சமயங் கடந்த நிலையென்று அறி வுறுத்த விரும்பி,

" உலகச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சலலக் கடலுளராய்க் கிடந்து தடுமாறும்
கவலை "

என்றும்,

" சமயாதீதப் பழம்பொருள் "

என்றும் எட்டா நிலையில் வைத்துப் பேசினர்.

உணர்வுநிலையில் விளங்குஞ் சான்றோரல்லது பிறகலை யாரவாரக்கார ரனைவரும், அவர் எத்துணை சமய நூல்களை ஓதினவராயினும் அறிவுறுப்பவராயினும் அடையாளங்களணிந்து கேட்டு அவ்வறிவு நிலையில் மகிழ்பவராயினும், வந்தனை வழிபாடுகளுடையவராயினும் வாழ்க்கைக் களனில் உள்ளவராகக் கருதப்படமாட்டார். ஏனையோரைப் பார்க்கினும் அவர், வாழ்க்கை என்னும் சமய அரண்மனையுள் நுழையும் அணுக்கமாகிய அறிவுநிலையில் இருப்போர் என்று வேண்டுமானாற் கூறலாம். ஆனாற் சங்ககால வாழ்க்கை நிலையோ இங்ஙனஞ் சமய அரண்மனையினின்றும் பிரிந்து அதற்குப் புறம்பான வெறுங் கலைவாழ்க்கை நிலையுமன்று; அக் கலைவாழ்க்கை நிலைதானும் அற்ற வெறும் ஊனுடை மயக்கமாகிய வெற்றுயிர் வாழ்க்கையுமன்று: அக்கால வாழ்க்கையினர் வெறும் மண்ணைப்பற்றிப் பேசினும், புல்லைப்பற்றிப் பேசினும் வெறும் வேடராய் புலையராய் எளியனவே கருதினும், அவர் அவற்றை உணர்வுக் களனில் நின்று மெய் தோன்றப் பேசுவோர் கருதுவோராத

லின், அவரது வாழ்க்கை சமய மாளிகையின் உள்ளமர்ந்து வாழும் உணர்வுரிமை வாழ்க்கையாய் மிளிர்வதாகும்; விடுதலை வாய்ந்த வீட்டு வாழ்க்கையின் · கூறுகொண்டு திகழ்வதாகும். சைவசமய நாயன்மாருள் ஒருவரான கண்ணப்ப நாயனாரைப் போன்றாரது நிலை இங்கே நினைவுகூர்தற்குரியது. கண்ணப்பர் சங்க காலத்துச் சான்றோரே யாவர்.

இதனால் சங்ககால வாழ்க்கை என்பது சமய வாழ்க்கையே என்னும் உண்மையும்; உணர்வுநிலையாகிய வாழ்க்கையே சமயத்தின் களன், சமயம் அறிவுநிலையாகிய கலையாகாது என்னும் மெய்ம்மையும் நன்குணர்ந்து கொள்ளப்படும்.

அதனாலேதான் சங்ககாலத்தில் சமயம் ஒரு தனிக் கலையாகக் கருதப்படவில்லை. அப்படிக் கருதத் துவங்கிய சில சமயக் கணக்கர் மதிவழி கூறாது திருவள்ளுவரைப்

போல் உலகியல் (வாழ்வியல்) கூறிப் பொருள் இது என்ற வாழ்நெறி நூன்முறைகளே அக்காலத்தில் மேற்கொள்ளப் பட்டன. அவையத்தனையும் நமக்குக் கலைநூல்களுக்கு மேற்பட்ட மறைநூல்களேயாகும்; அஃதாவது, அறம் பொருள் இன்பம் வீடு தெருட்டும் நான்மறை உணர்வு நூல் களேயாகும். மற்று, அவ் வாழ்நெறிக் கருத்துக்களைக் கலை

யளவாக எடுத்துத் தம்முட் பிரிவுகொண்டு அறுசமய நூல்களாக எழுந்தனவெல்லாம் அந் நான்மறைச் சங்க நூல்களின் உண்மைகளை அறிதற்குக் கருவியாய் ஆறு அங்கங்களாய் நிற்பனவே யல்லது வேறில்லை. இவ்வாற்றால், மெய்ம்மையோடு தொடர்பு பட்ட அருள் வாழ்வின் இயல்புகளை உணர்த்தும் தமிழர் மறையிலக்கியங்களுள் புறநானூறு, ஒரு தகுந்த நிலையினையுடைய தென்பது இனிது துணியப்படும்.

## ௩. வாழ்க்கையும் வீடுபேறும்

நான்மறை இலக்கியங்களாவன அறம்

பொருள் இன்

பம் வீடு உணர்த்தும் வாழ்நெறி நூல்களே என்பது, உறுதிப் பொருள்களாகிய அந் நாற்பொருளுள்ளும் உயிர்களின் வாழ்க்கை நெறி முற்றும் அமைந்து நிற்கும் இயற்கை



யமைதி கொண்டே சிறிதும் ஐயமின்றித் தெளிந்துகொள்ளலாம். மேலும், தமிழ் மக்களின் வாழ்க்கை யியல்பு, சிறப்பாக இவ் வுறுதிப் பொருள்களின் முறையிலேயே குறிக்கொண்டு சென்றிருக்கின்றது. இவ் வுண்மை, தமிழ் மொழியில் எழுந்துள்ள பழைய நூல்களிலிருந்தெல்லாம் நன்கு வெளிப்படுகின்றது.

ஆசிரியர் தொல்காப்பியர் தமிழ் மக்களின் வாழ்க்கைச் சித்திரமாகிய பொருளதிகாரத்தை விரித்தோதத் தொடங்கி முதலில் அதன் பொது இலக்கணமாகிய அகத்திணை புறத்திணையியல்புகளை இரண்டு அதிகாரங்களால் விளக்கிக்கொண்ட பின், அடுத்து,

"இன்பமும் பொருளும் அறனும்என் றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை"

என அறம் பொருளின்பமென்னும்
களின் குறிக்கோளை நன்கெடுத்துக்
செல்கின்றார்.

இவ்வுறுதிப் பொருள்
கூறியே விரித்தோதிச் . சோழன் நலங்கிள்ளி
என்னுஞ் சிறந்த மன்னனுக்கு
அறிவுரை கூறப்புகுந்த உறையூர்

முதுகண்ணன் சாத்த
னா எனனும பெரியாா, அவன வாழககை
இன்பம் என்னுங் குறிக்கோள் வகையில்
என்று தெருட்டல் வேண்டி,

அறமபொருள
நிகழவேண்டும்

"அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம் ;
ஆற்றா மைந்நிற் போற்றா மையே"

என்று எடுத்துக் காட்டும் உண்மை,
புறநானூற்றில் (உஅ)
வருகின்றது.

பிற்காலத்தில் விளங்கிய அருட்சான்றோர்களாகிய மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர் முதலிய சிவநெறிக்

குரவர்களும், தக்காரால் தொன்றுதொட்டுத் திருநெறி யுண்மைகளாக அறியப்பட்டு வந்த நான்மறைப் பொருள்



கள் அறம் முதலிய உறுதிப் பொருள்கள்
தம் திருமுறைகளில்,
நான்குமே என்று

" அருந்தவருக்கு ஆலின்கீழ் அறமுதலா
நான்கனையும்
இருந்தவருக்கு அருளுமது எனக்கறிய
இயம்பேடீ ;
அருந்தவருக்கு அறமுதல்நான்கு அன்றருளிச்
செய்திலனேல்
திருந்தவருக்கு உலகியற்கை தெரியாகாண்
சாழலோ "

—திருவாசகம்

—"ஐம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணார்க்கு அறம்பொருள் இன்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கண் ஆதி மேயது முதுகுன்றே"

—**தேவாரம்**

என்று விளங்க அருளிச்செய்திருத்தலும் இங்கு ஆழ்ந் துணர்ந்து கருத்திற் பதித்துக் கொள்ளல் வேண்டும். அன்றியும், இத் திருமுறைப் பாடல்களில் 'அறமுதல் நான் குமே உலகியற்கை யுண்மைகள்' என்று மாணிக்கவாசகர் அருளிச் செய்திருக்குங் குறிப்பும். 'அறம் பொருள் இன் பம் வீடு மொழிவோன் மூன்றாவதான ஞானக்கண்ணும் உடைய தலைவன்' என்று ஞானசம்பந்தர் திருவாய்மலர்ந் தருளுஞ் சிறப்பும் கூர்ந்து அறிந்துகொள்ளுதற்குரியன.

மறைத்திறம் என்னும் வாழ்நெறி யுலகியற்கையாகிய இந்த அறத்தொகுதி கண்ட பின்பே, இவ் வுண்மைகளி லிருந்து அறுசமயப் பிரிவுகளாகிய அங்கங்கள் கலையள வாக வகுத்தாராயப்பட்ட உண்மையும்,

" முறைத்திறமுறப் பொருள்தெரிந்து
முனிவர்க்கருளி ஆலநிழல்வாய்
**மறைத்திறம் அறத் தொகுதி கண்டு,**

சமயங்களை வகுத்தவன் "

என்றும்,

" ஆலதன்கீழ் இருந்து நால்வர்க்கு
அறம்பொருள்

இன்பம் வீடு ஆறங்கவேதம் தெரித்தானை"

உருச புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

என்றும் வருந் தேவாரத் திருமொழிகளிலிருந்து தெற்றெனத் துணியப்படும்.

இவ் வாற்றால், மறைகளென்பன, சிறந்த வாழ்நெறி இலக்கியங்களே என்பதும், எனவே அறம் பொரு ளின்பம் வீடு என்னும் நாற்பொருளுணர்த்தும் சங்ககால நல் வாழ்க்கை யிலக்கியங்கள் தமிழர் நான்மறை இலக்கியங் களே என்பதும், கலைநூல்களாகிய ஆறு சமய நூல்கள் இம் மறை யிலக்கியங்களில் அடங்குவனவே என்பதும் தெளிந்து விளங்குகின்றன. குரவர் அறிவுறுத்தும் மறைப் பொருள், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களே என்பது மேலெடுத்துக் காட்டிய தேவார திருவாசகத் திருமொழிகளிலிருந்து தெளிவாகப் பெறப்படுதலாலும், உறுதிப்பொருள் நான்கனுள் பெரும் பாலும் இலக்கியக் கூறுகளாகக் கருதப்படும் பொருள் வாழ்க்கையும் இன்ப வாழ்க்கையும் அறவாழ்க்கையோடு அடங்கி யிருத்தலாலும், மறைகளென்பவை சிறந்தோர் வாழ்க்கை யிலக்கியங்களே என்பதில் யாதும் ஐயமின்று. இலக்கிய வகைகளுள், இங்ஙனம் மறையும் ஒன்றுதல் கருதி ஆசிரியர் தொல்காப்பியர் தமது செய்யுளியலில் (எஅ, கசுரு, களசு) அதனியல்பை விளக்கியிருத்தலும் இங்கே நினைவுகூர்தல் வேண்டும். ஒன்றுகக் கூறினல், நல்லோர் வாழ்நெறி நுட்பங்கள் அனைத்தும் ஒருங்கடங்கி அறம் பொரு ளின்பம் வீடுணர்த்தும் தமிழர் நான்மறை நூல், இப்போது, தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் அருளிச்செய்த 'திருக்குறள்' என்னும் உலகப் பொது மறையாகிய தமிழ்மறையே என்க.

இனி வீட்டுணர்ச்சி என்பது, உலக வாழ்க்கைக்கு வேறானது என்று கருதுவது தமிழர் கொள்கையன்று. அப்படிக் கருதப்பட்ட காலத்திலிருந்துதான், சமயம் கலை

பொருளைத் தேடுவது அப் பொருளைத் துய்ப்பதற்கன்று; இளைஞரும் மங்கையரும் காதலன்பில் திளைப்பது அவ் விருவரும் ஒருவரையொருவர் நுகர்ந்துகொள்வதற்கோ அல்லது அவ் விருவருஞ் சேர்ந்து உலகப் பொருள்களைத் துய்ப்பதற்கோ அன்று; பொருட்பேறு இன்பப் பேறு என்னும் இவ் விரண்டும், உயிர்கள் தம் அறியாமை போக்கித் தம்மை அன்பினும் அருளினுங் கனிவித்துக் கொண்டு எங்கும் அவ் வுணர்வினிமை பெருகப் பேரா இயற்கையில் திகழ்தற்கேயாம். இப் பேருணர்வின் இனிமையானது, உயிர்கள் தம் அறியாமைக் கட்டினின்று முற்றும் விடுதலையுற்ற பின்னரே வாய்த்தலின் உரிமையாகிய இவ் வினிமை நிலையை 'வீடுபேறு' என்று சான்றோர் வழங்கினர்.

பொருளையும் இன்பக் காதலையும் வீட்டுணர்ச்சிக்குக் கருவியான வகையில் அதன்முகமாகப் பயன்படுத்தி வாழ்க்கை நடத்துங்கால், அப் பொருளின்ப வாழ்க்கைகள் ‘அருள் வாழ்க்கை அல்லது சமய வாழ்க்கை’ என்று கருதப்படுமேயல்லது, சிறிதும் வெற்றுயிர் வாழ்க்கையாகக் கருதப்படாது. உலக வாழ்க்கையே இங்ஙனம் வீட்டுணர்வு முகமான வாழ்க்கையாய் வாழ்வதென்பதுதான் தமிழர் கருத்து; உலகியல் என்பதும் இதுவே; ‘அருந்தவருக்கு அறமுதல் நான்கு அன்றருளிச் செய்திலனேல் திருந்தவருக்கு உலகியற்கை தெரியாகாண்’ என்று மணிவாசகப் பெருமான் அருளிச்செய்த உலகியற்கை ஒட்பமும் இது. இன்பமும் என்பதோடு நில்லாமல் பொருளும் என்பதோடும் நில்லாமல் அறனும் வீடும் என விடுதலை முகமாகத் தம் வாழ்க்கை முறையைத் தமிழர் வகுத்தெடுத்துக் கொண்ட வகையினாலும், இவ் வுண்மை தெளிவாகவே விளங்குகின்றது.

“அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்”

“அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்”

## உ௫கூ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

“அருளென்னும் அன்பீன் குழவி
பொருளென்னுஞ்
செல்வச் செவிலியால் உண்டு”

" தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்று பொருள் வாழ்க்கையைப் பற்றியும்,

" கழியக் காதல ராயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்"
(அகம் : ககஉ)

" அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது"

' தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

" ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

" இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்று இன்ப வாழ்க்கையைப் பற்றியும் வரும் திருவள்ளுவர் முதலிய சங்ககாலச் சான்றோர் செய்யுட்களினும் தமிழரின் வாழ்க்கையியல் தினைத்தனையும் ஐயத்துக்கிடனின்றித் துணியப்படும். வீட்டுணர்வு முகமான இச் சங்ககால வாழ்க்கைத்திறன்,

" சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம்"

என்று **புறநானூற்றில்** (௩௧) மிக அழகாகவும் வும் வடித்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

தெளிவாக

பொருளையும் இன்பக் காதலையும் அப் பொருளின்பங் களையே துய்க்கும் கருத்திற் கொள்ளும்போது, கட்டும் இக்கட்டும் உண்டாகி, இவ் வுலகம் இன்னாதாகின்றது. 'துய்ப்பேம் எனினே தப்புந பல' (புறம்: கஅக); இத் தகைய பொருளின்ப இயல்பை அறிந்தோர், அவற்றை வீட்டுணர்வுமுகமாகப் பயன்கொண்டு வாழும் இனிய



உடுள

வாழ்வகை தெரிந்து, அவ் வினிய வாழ்க்கை விளங்குதல் வேண்டும்.

நிலையில்

"இன்னா தம்மஇவ் வுலகம்
இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே"

என்று பக்குடுக்கை நன்கணியார் என்னுஞ் சான்றோர் இவ்வுண்மையை மற்றொரு புறநானூற்றுச் செய்யுளில் (கஙச) அருளோடு இரங்கி அறிவுறுத்தி இருக்கின்றார். புறநானூற்றுரையாசிரியர் இப் பகுதியின் உரையில், "இவ் வுலகினது தன்மை யறிந்தோர் வீட்டின்பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்துகொள்க" என்று இதன் கருத்தறிந்து அழகாக உரைத்தார்.

இங்ஙனமெல்லாம் நோக்கும்போது, புறநானூற்றுச் செய்யுட்கள் அத்தனையும், அழகிய வீட்டுணர்வு வாழ்க்கையையே பற்பல நிலைகளில் பற்பல வகையாக விளக்கிக் காட்டுந் திருமறை ஓவியங்களாகத் திகழ்தல் நன்கறிந்து கொள்ளப்படும். புறநானூற்றில் ஒரு பாடலாவது வாளா பொருளின்பங்களைத் துய்க்கும் வழுவிய நிலையிற் காணப்படாது. எல்லாம் அவற்றை வீட்டுணர்வு முகமாகப் பயன்கொண்டு வாழும் மெய்யுணர்வுப் பாதையின் பற்பல பகுதிகளை இனிது விளக்கும் வாய்மொழிப் பாடல்களாகவே காணப்படும்.

புறநானூற்றின்கண் வரும் அரசர்கள் அரச முனிவர்களாகத் (இராஜ ரிஷிகள்) திகழ்கின்றார்கள்; புலவர்கள் அந்தண் அறவோராக (ஞானிகள்) விளங்குகின்றனர்; வள்ளல்கள் தந்நலங்காணு வேளிர்களாகப் (தியாகிகள்) பிறர்க்கென வாழும் பெருநிலையிற் பிறங்குகின்றனர்; வீரர்கள் செய்ந்நன்றி மறவாக் கடமை வீறுடையராய்க் (கர்மயோகிகள்) காட்சியளிக்கின்றனர்; மாதர்கள் நடுநிலை பிறழாப் பெருந்தொண்டர்களாகத் துலங்குகின்றனர். இந்நிலைகட்கு வேறான தாழ்ந்த நிலைகள் புறநானூற்றின்கண் எங்கேனுங் காண்டல் கூடுமா?



உடு அ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

புறநானூறு வெறும் அறிவுரை நூலோ, கதை நூலோ அன்று; எல்லாம் இணையற்ற வாழ்க்கை வீரர்களின் நல்வாழ்க்கை யோவியமே. அதில் மறைப்புத் திறப்பு ஒன்றுமில்லை. பிற்காலத்தில் இதனை ஒருபுடையொத்து இத்தகைய வீர வாழ்க்கைகளை நுவலும் அருள் நூல், திருத்தொண்டர் புராணமென்னும் பெரிய புராணமாகும். புறநானூற்றுப் பெரியோர்கள் இத்தகைய அரிய பெருவாழ்க்கைத் தொண்டர்களாவர்.

## ௬. புறநானூற்றுத்தொண்டர்கள்

புறநானூறு என்னும் வாழ்க்கைவீரர் நறுநூலைப் 'பழைய திருத்தொண்டர் புராண'மென்று சுருங்கக் கூறலாம். புறநானூற்றுத் தொண்டர்களுக்கும் பெரிய புராணத் திருத்தொண்டர்களுக்கும் நிரம்பத் தொடர்பும் ஒற்றுமையும் காட்சியளிக்கின்றன.

## 1. சோழன் செங்கணான்

பெரிய புராணத்தில் வருகின்ற அறுபான்மும்மை நாயன்மாருள் கோச்செங்கட் சோழ நாயனார் என்னும் சோழ மன்னரும் ஒருவர். இவர் ஒரு புறநானூற்றுத் தொண்டராவர். புறநானூற்றில் சோழன் செங்கணான் என்று உரைக்கப்படுகின்றார். இங்ஙனமே நாயனார் முதலிய சிறப்புப் பெயர்களின்றி பொதுவாகப் புறநானூற்றில் நுவலப்படும் அரசர், சிற்றரசர், வள்ளல்கள், புலவர்கள் முதலியோரிற் பலர் திருத்தொண்டப் பெருமை உடையவராவர்.

## 2. முதுகுடுமிப் பெருவழுதி

சோழன் செங்கணானைப் பற்றிப் புறநானூற்றில் வந்திருக்குங் குறிப்புச் சிறிதே. அதைவிடப், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலியோரைப் பற்றி வந்திருக்குங் குறிப்பு இன்னும் விளக்கம் உடையதாய், அவர் தஞ் சிவநேயப் பெருமையை நன்கெடுத்

துக் காட்டுவதாய் இருக்கின்றது: அவரெல்லாம் தமிழ் நாட்டின் மிகப் பழைய சிறந்த திருத்தொண்டராவர். முதுகுடுமிப் பெருவழுதி, தெற்கே பஃறுளியாறு கடல் கொள்ளப்படுமுன் இருந்து விளங்கியவன்; சிறந்த சிவ நேயச் செல்வன்.

பிற்காலத்தில் சைவசமயத்தின் சமயகுரவராக எழுந்தருளிய நம்பியாரூரர், திருக்கோயிலெடுப்பு, தொண்டு முதலிய அருஞ்செயல் அடையாளங்களால் தங் காலத்தில் வரலாற்று விளக்கம் வாய்ந்திருந்த அருள்நேயப் பெரியார் திறங்களைக் கேட்டும், தமது காலத்திலேயே வாழ்க்கையுடையராய் விளங்கிய சிவநேயத் திருவினர் அருஞ்செயல்களை நேரிற் கண்டும் அவர் தம்மைத் திருத்தொண்டத் தொகையிற் கோத்து வணக்கங் கூறினார். அங்ஙனங் கூறியவிடத்தும், இவ்வாறே வேறு அடியார் பலர் முன்னும் விளங்கியிருக்கக் கூடும், பின்னும் விளங்கக்கூடும், பிறண்டும் விளங்கக்கூடும், பெயரறியாதும் விளங்கக்கூடும் என்று நினைவுகூர்ந்து, திருவுள்ளம் பற்றி, அவரனைவர் திறத்துந் தமது நெஞ்சம், நெகிழ்ந்து அன்பு வீறிடுதலைப் புலப்படுத்துவார், அவர், தமது திருத்தொண்டத் தொகையின் இடையே,

> " பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
> பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
>
> சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
> திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும்

அடியேன்

முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே"

என்று பொதுவாகவும் ஒரு திருச் செய்யுள் அருளிச் செய் திருக்கின்றார். இதன்கண் 'அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று வருகின்ற பகுதிக்கு ஆசிரியர் சேக்கிழார்,

உ௪௦ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

"மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்,

நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்

நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலுமடிச் சார்ந்தார் தாமே"

என்று விளக்கங் கூறியவிடத்து, நம்பியாரூரர் கருத்து இன்னதென்பது நன்ருகப் புலப்படுத்தப்பட்டுள்ளது. திருத்தொண்டத் தொகையில் விதந்து கூறப்படாத பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ருர், இப் பகுதியினுல் நினைவுகூர் தற்குரியவராவர்.

## 3. போய்யடிமை யில்லாதார்

அன்றியும், ஆரூரர், தமது திருத்தொண்டத் தொகையில், 'பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்' என்று புலவர் பெருமக்களை நினைந்தும் தனியாக ஒரு பகுதி அருளிச் செய்திருக்கிருர்கள். திருத்தொண்டர் திருவந்தாதியில் அதற்கு விளக்கங் கூறுமிடத்து நம்பியாண்டார் நம்பிகள்,

> " தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
> பரணர்நக் கீரர் முதல்நாற்பத் தொன்பது பல்புலவோர்
> அருணமக் கீயும் திருவால வாய்அரன் சேவடிக்கே
> பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே "

எனவும், பெரியபுராணத்தில் ஆசிரியர் சேக்கிழாரடிகள்,

> " பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்
> சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
> பெற்றியினில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
> மற்றவர்தம் பெருமையார் அறிந்துரைக்க வல்லார்கள் ? "

என்வும் திருவாய்மலர்ந்தருளுவர்: 'பொய்ம்மையிலாத் தமிழ் சங்கப் புலவோர்' என்றும், 'மெய்யடிமையுடைய

ர்ரம் பெரும்புலவர்' என்றும் இப் பாடல்களில் வந்திருக் குங் குறிப்புக்கள், மறந்தும் தவறியும் யாண்டும் பொய் கூறுதலறியாத பண்டைச் சங்ககாலத்து மெய்யொழுக்கப் பேராசிரியர்களையே பெரிதும் நினைவுகூர்விக்கின்றன. அவரெல்லாம் அத்தகைய பொய்யாச் செந்நாவும் செவ்வறிவும் படைத்த மெய்த்தொண்டர்களாக விளங்கி அருள் வாழ்வினராய்த் திகழ்ந்தமையினாலேயே, பண்டைச் சங்ககாலப் பெரும்புலவர்களை மட்டும் தனித்து நினைந்து, அவர்தம் பொய்யடிமையில்லாத வீரவாழ்வுக்கு வியந்து, இங்ஙனம் ஒரு தொடரை நம்பியாரூரர் தமது திருத்தொண்டத் தொகையில் அருளிச்செய்திருக்கவேண்டும். இல்லாக்கால், தனி யடியார்களை நினைந்து பெயர் குறித்து ஓதி வரும் பகுதியில் இதனை இணைத்துரைத்தற்குக் காரணமில்லை. குறிப்பிட்ட ஒருவரையோ அல்லது ஒரு சாரரையோ உணர்த்துவதாக இருந்தால் மட்டுமே அத்

தொடர் அங்கே இயைந்து காண்டற்கு ஏதுவுண்டு. "தில்லைவா ழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்பதும் இங்ஙனம் ஒரு சாராரை நினைந்து, தனியடியார்களைத் தொடுத்துக் கூறும் பகுதியில் இணைத்து நுவலப் பட்டதாகும். "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்பது, குறிப்பிட்ட ஒரு சாராரை உணர்த்தாமல் 'எல்லார்க்கும்' என அனைவோரையும் உணர்த்திச் செல்லுதலின், அது பொதுப்பகுதிக்கண் அருளிச் செய்யப் பட்டது. பொய்யடிமை யில்லாமை பொதுவாக எல்லாக் காலத்தவர் மேலுஞ் செல்லுமாயினும், சிறப்பாக அது சங்ககாலத்தவர்க்கே உரியதென்பது நன்கு பிரிந்து தோன்றுவதொன்று. பிற காலங்கட்கு உரியவரான அருள் நேயப் புலவர் பலரும், "பரமனையே பாடுவா ரடியார்க்கும் அடியேன்" என்று அருளிச்செய்யப்படும் பொதுப் பகுதியினால் நினைவுகூர்தற்குரியர். சங்ககாலத்துப் புலவோர் பரமனையே குறித்துப் பாட்டுகள் பாடாது அரசர் முதலாயினார் புகழ் தேற்றிப் பாட்டுகள் இயற்றினரெனத் தோன்றுமாயினும், அவர் பொய்யடிமை இல்லாத மெய்யராதலின், அவ் விழுப்பங் கருதி, ஆரூரர் அவரைப் பொய்

யடிமை யில்லாத புலவரென்று வேறு பிரித்து, ஏனைப் பரமனையே பாடுவாரையும் வேறு கூறினர் என்க. இயற்கையைப் பாடுதலென்பதும் தக்கோரை ஏத்துதலென்பதும் நுனித்து நோக்குங்கால், இயற்கையின் வாயிலாகவும் தக்கோர்தம் வாழ்க்கையின் வாயிலாகவும் ஊடுருவி மிளிரும் திருவருள் விளக்கத்தைப் பாடுதலாகவே துணியப்படும். பிற்காலச் சமயகுரவர் பலரும் இவ் விழுமிய முறையினை நிறையப் பின்பற்றியுள்ளனர்.

"கோழைமிட றுககவி கோளுமில வாசைஇசை கூடும்வகையால்
ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொல்மகிழும் ஈசனிடமாம்
தாழையிள நீர்முதிய காய்கமுகு வீழநிரை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறிவயல் சேதுசெயும்
வைகாவிலே"

என்று இயற்கைக் காட்சிகளை நன்கு வியந்தும்,

" மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே."

என்று தக்கோர் வாழ்க்கை விளக்கத்தை இனிது தேற்றியும் திருஞானசம்பந்தப் பெருமான் பாடல்கள் அருளிச் செய்திருத்தலும், இங்ஙனமே அருள்வாழ்க்கை வீரர்களான அரசர், சிற்றரசர், வீரர், மாதர், புலவர் முதலான பல்வகைத் தொண்டர்களையும் ஏத்தித் தொழுது சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை திருவாய் மலர்ந்திருத்தலும், பிற அருளிச் செயல்களும் நினைவு கூர்ந்து உண்மை தெளிதல் வேண்டும்.

உலகக் காட்சிகளிற் காணப்படும் வியக்கத்தக்க அழகியல்புகளையும், தக்கோர் வாழ்க்கையில் மிளிர்ந்து தோன்றும் உள்ளங்கவரும் அருஞ்செயல்களையும் வாளா

●

புறநானூறும் சமயமும்

உலகக் காட்சி யென்றே, மக்கள் வாழ்க்கை யென்றே எளிதாகக் கருதி எள்ளிவிடாமல் அம் மாட்சிமைகளுக்கு அடிப்படைக் காரணமாயிருக்குந் திருவருட்டிறத்தை நினைவுகூருங் கருவிகளாகவே அவற்றை வைத்துப் பயன் கொள்க எனத் தேற்றித், திருவருள் முடிபாய் முடித்துக் காட்டிய அரும்பணியே பிற்காலத்திற் சமயகுரவர் தோன்றி உலகுக்குச் செய்த பெருந் தொண்டாகும். சமயகுரவர் எதனை எடுத்துப் பாடினும், எவரைப் புகழ்ந்து பரவினும் எல்லாவற்றையும் இறைவன் திறத்தில் இணைத்து முடித்து, அவன் பாடல்களாக்கி ஒரு நெறி தெருட்டுவர். தேவார திருவாசக நாலாயிரப் பனுவல்கள் அனைத்தும் இவ்வொரு முடிபு தெளிவிப்பனவே. பொய்யடிமை யில்லாத புலவர் பலரால் இயற்கைத் தோற்றங் களையும் மக்கள் நல்வாழ்க்கைத் திறங்களையும் பாராட்டிப் பண்டு பாடப்பெற்ற சங்க காலத்துப் பாடல்களின் கருத்தை, இவ்வாறு அருண்முடிபிற் கொண்டு செல்ல வேண்டுமென்று ஒப்பற்ற நெறி முடிபு தேற்றிய வகை யாகவே பிற்காலச் சமயகுரவர் திருப்பணிகள் விளங்கு கின்றன. தமிழ் வளமும் அருள் நலமும் ஒருங்கு பெருக் கெடுக்கும்படி உலகியற்கையின் நெறியே இயற்றியருளப் பட்ட சங்கச் செழும்பாடல்களை அவற்றின் இயற்கை முறையும் விழுப்பமும் முடிபும் அறியாது, அவற்றைப் பாடிய புலவர்தம் மெய்த்தகுதியையும் ஓராது, திருவருட் டிறத்தினின்றும் அவை வேறுபட்டவை போல எண்ணி

விடும் இயல்பு, சமண் பவுத்த மாயாவாதக் கொள்கையின் ரால் இடைக்காலத்தில் எழுந்தமையின், சமயகுரவர், அவற்றின் கருத்து இன்ன முறையில் முடித்தற்குரிய தென்று அருள்முடிபு தேற்றி விளக்கும்படி நேர்ந்தது. இவ் விளக்கத்தில் தீர்ந்த தெளிவுடையார்க்கு, முற்காலச் சங்கப் புலவர் தம் உலகியற்கைப் பாடல்களுக்கும் பிற் காலச் சமயகுரவர் தம் திருமுறைப் பாடல்களுக்கும் இடையே யாதும் வேற்றுமை தோன்றாது. மற்று அவற் றின் கருத்தொருமையும் தொண்டப் பெருமையுமே நன்கினிது விளங்கும்.



## 4. காரி கிழார்

சமயகுரவன்மார் தக்க சிவநேயச் செல்வர்களைத் தம்

முடைய பாடல்களிற் பாராட்டிச் சென்றமை போலவே

பண்டைக்காலத்து மெய்யாசிரியன்மாரும், மிக்க அருணை யப் பெருமக்களைப் போற்றி யொழுகினர்; அல்லாதாரை இடித்துரையே கூறிச் செந்நெறி நிறுத்தினர். எவர் முகத் துக்குங் கண்ணோடாதும் பொய் கூறாதும் யாண்டும் மெய்யே கூறி உலகத்தில் அறத்தை நன்கு இயக்கிப் பரவச் செய்த பெருந்திருவாளரே சங்ககாலப் புலவன்மார். இதனாற், பாடினோரும் பாடப்பட்டோருமாகிய இருதிறத் தாரும் அக் காலத்தில் மெய்ந்நேயப் பெருமக்களாகவே விளங்கி யிருக்கின்றனர்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னுஞ் சிவநேயச் செம்மலையே, சிவநேயங் கனிந்த காரி கிழார் என்னுஞ் சான்றோரது திருவுள்ளம் பாடுதற்கு இசைந்தது. ஆசிரியர் உ. வே. சாமிநாதையரவர்கள் தமது புறநானூற்றுப் பதிப்பின் முகப்பில், பாடினோர் வரலாறு கூறுமிடத்தில், காரிகிழாரைப் பற்றி, "இவர் பரமசிவனை வழிபடுபவரென்று தெரிகின்றது; இவருடைய செவியறிவுறூஉவை உற்று நோக்குகையில் திருமறை (வைதிக) ஒழுக்கிற் சிறந்தவராகக் கருதப்படுகின்றனர்; இவருடைய சிவநேயத்தையும் பெயரையும் பார்க்கும் பொழுது பெரிய புராணத்துக் கூறப்படும் காரிநாயனார், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் ருஉ-ஆம் திருவிளையாடலில் வந்துள்ள காரியார் என்பவர்க ளுடைய ஞாபகம் வருகின்றது," என்று எழுதியிருக்கின் றார்கள். காரிநாயனாரைப்பற்றிப் பெரிய புராணத்தில்,

"மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
துறையான பயன்தெரிந்து சொல்விளங்கிப் பொருள் மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பால்பயில்வார்."



"அங்கவர்தாம் மகிழும்வகை அடுத்தஉரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பால் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனு ரினிதமரும் தானங்கள்
பலசமைத்தார்."

என்று சேக்கிழாரடிகள் வழங்கியிருக்கும் குறிப்பும், அவர் மறையொழுக்கமும் சிவநேயமும் வாய்ந்து தமிழ் வல்ல புலவராய் வேந்தரொடு பழகும் செல்வாக்கினர் என்பது புலப்படுத்திப் பெரிதொத்து நிற்கின்றது. இங்ஙனங் காரிகிழாரும் ஒரு திருத்தொண்டராகத் திகழ்கின்றார்.

## 5. கரிகாற் பெருவளவன்

புறநானூற்றுத் தகுதியாளர்கள், தங் காலத்தவரால் மட்டுமின்றிப் பின்பெழுந்த சமயகுரவர் முதலிய திருமுறையாசிரியர்களாலும் மகிழ்ந்து பாராட்டப்படுஞ் சீர்மையுடையர் என்பதற்கு வேறு குறிப்புக்களும் உண்டு. முடியுடை மன்னரிற் கரிகாற் பெருவளவனும், குறுநில மன்னரிற் பாரிவேள் வள்ளலும் போன்றோரை நினைவுகூர்தலும் இதற்குச் சாலும். சோழன் கரிகாற் பெருவளவன் இயல்பிலேயே தெய்வத் திருவருள் நிரம்பப் பெற்றவன். இவனுடைய செயற்கருஞ் செயல்கள் எத்தகையோர்க்கும் வியப்பைத் தந்து இவ்வுண்மையைப் புலப்படுத்தும். பெரிய புராணத்தில் அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவரான மூர்த்திநாயனார் புராணத்தில், ஓர் யானையை விட்டு அதனால் தெரிந்தெடுக்கப்பட்டு மூர்த்தியார் அரசராக்கப்பட்ட அருட்செய்தி கூறப்படுகின்றது. இக் கரிகால் வளவனும் தான் கருவூரிலிருந்தபோது, கழுமலம் என்னும் ஊரிலிருந்த யானையினால் தெரிந்துகொண்டு வரப்பட்டு அரசுரிமை யெய்தினான் என்பது இவன் வரலாற்றிற் கேட்கப்படுகின்றது. மேலும் உருத்திரங்கண்ணனார் என்னுஞ் சைவப் பெயருடைய சிவநெறிப்பெரும் புலவரின் உள்ளங் கவர்ந்த அருஞ்செயலாளன். அப் பெரியார் பாடலுக்கு நெஞ்சுருகிய தன்மையாளன். அம்மை அறம் வளர்த்த அருளிருக்கை எனப்படுங் காஞ்சி மாநகரின் மாட்சிமை கேட்டு அங்

நகரைப் பெருக்கி விரிவுசெய்த பெருந்தொண்டன். தொண்டர்சீர் பரவுவாரான சேக்கிழாரடிகள் இக் கரிகால் வளவன் திறத்தைத் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புரா ணத்தில்,

"என்றும் உள்ளஇந் நகர்கலி யுகத்தில்
இலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன்
வன்தி றற்புலி இமயமால் வரைமேல்
வைக்க ஏகுவோன் தனக்கிதன் வளமை,
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருந்து காதம்நான் குட்பட வகுத்துக்
குன்று போலுமா மதில்புடை போக்கிக்
குடியி ருத்தின கொள்கையின் விளங்கும்"

என்று மனமகிழ்ந்துபாராட்டிச் செல்கின்றார்.

## 6. பாரிவேள்

இனிக், குறுநில மன்னனான வேள்பாரியோ முற்றுந் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன். இரக்கமே வடிவான பேராண்மையன். நிகரற்ற பெருங்கொடைவள்ளல்! அருட் பெரும் புலவரான கபிலருள்ளத்தை முற்றுங் கவர்ந்த தூயோன். கபிலர் எளியரல்லர். சங்ககாலத்துப் புலவர் பெருமக்களுள் ஆசிரியர் கபிலரைப் போற் பெரும் புகழும் பெருஞ் செல்வாக்குமுடையார் வேறெவரும் இலர். சங்கக் கொழுந் தமிழிற் கபிலர் பாட்டுக்களே பெரும்பாலானவை; பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு என்னும் மூவகைப்பட்ட சங்கநூற் றொகுதியிலும் அவருடைய பாடல்கள் பெருமதிப்போடு அமைக்கப்பட்டுள்ளன. கபிலரைப்பற்றி அவர்காலத்துப் புலவர் பலரும் அவருடைய கல்வி கேள்வி அறிவு ஒழுக்கம் வாய்மை தூய்மை செய்ந்நன்றியறிவு புலமை முதலியவற்றில் உயர்ந்த மதிப்புடையர்.

> "அரசவை பணிய, அறம்புரிந்து வயங்கிய
> மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்



> உவலை கூராக் கவலையில் நெஞ்சின்
>
> நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்"

(பதிற். அ௫)

எனப் பெருங்குன் றூர்கிழாரும்,

"வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கலபின்"

(புறம். ருங)

எனப் பொருந்தில் இளங்கீரனுரும்,

"புலனழுக் கற்ற அந்த ணளன் "

(புறம். கஉகூ)

" பொய்யா நாவிற் கபிலன் "

(புறம். களசு)

என மாறோக்கத்து நப்பசலையாரும் போல்வார் புகழ்ந்து போற்றியிருக்கும் பாராட்டுரைகள் இங்கு நினைவுகூரற்பாலன. இவ்வளவு சீரிய அந்தண் முனிவரான கபிலர் பாரியின் உயிர் நண்பராயிருந்து அவன் பிரிவாற்றாது தாமும் உயிர் துறந்திருக்கின்றார். பாரி இறந்தபின், கபிலர் அவன் பிரிவுக்காக நெஞ்சங் கரைந்து பாடியிருப்பனவாகப் புறநானூற்றில் வந்திருக்கும் பாட்டுக்கள் மிக்க உருக்கம் வாய்ந்தவை. புலனழுக்கற்ற கபிலருள்ளத்தை இவ்வளவு அள்ளி விளங்கிய பாரிவேள் மேன்மையை எவ்வாறு ஒரு நாவினால் எடுத்தியம்புதல் கூடும்? புறநானூற்றினால் மட்டும் மிகுதியாக அறியப்படும் புறநானூற்று அருளுருவினனான இவனை எல்லாம் வல்ல இறைவன் றோழராய்ப் பிற்காலத்தில் விளங்கிய சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் சமயப் பெரியாரே,

"கொடுக்கிலா தானைப் பாரியே என்று
கூறினுங்கொடுப் பாரிலை"

என்று மிக்க மதிப்போடு தமது அருட்டிருமுறையில் எடுத்துப் பாராட்டியிருக்கின்றார். புறநானூற்றுத் தொண்டர் இங்ஙனமெல்லாம் மிக்க மாட்சியுடையர்.

## 7. ஆய் அண்டிரன்

அருள் வாழ்வுடையார்க்கு ஓர் உயர்ந்த அடையாளம் தமக்குச் சிறந்ததென்று தம்மால் மதிக்கப்படுவதை இறைவனுக்கும் அவனடியார்க்கும் அகமகிழ்ச்சியுடன் அன்



போடு பயன்படுத்தித் திருவருள் விளக்கத்துக்கு மேன்மேலும் இடஞ்செய்து நிற்றலாகும். திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்தில் வரும் சண்டேசர், அப்பூதியடிகள் முதலியோர் அருள்வரலாறுகளில் இவ்வுண்மை நன்றாக விளங்கி எதிர்ந்து நிற்கின்றது. சண்டேசர் தமக்குக் கிடைத்த அருமையான ஆவின் பாலை இறைவற்காகுக என்று, குளிரத் திருமுழுக்காட்டுவித்து அகந்தோய்ந்து நின்றார். அப்பூதியடிகள், தமக்கு அருமையென்றிருந்த மக்கட்கும், திருமடம் சாலை சோலை குளம் முதலிய பிறவற்றிற்கும் இறைவனடியாராகிய திருநாவுக்கரசு நாயனார்தம் திருப்பெயரையே இட்டு, அவர்க்கு ஆளும் உடைமையுமாய் உரிமையாக்கிப் பேரன்புத் தொண்டு புரிந்து விளங்கினார். பெரியபுராணத்தில் இவை உள்ளமுருக நுவலப்பட்டிருக்கின்றன.

இங்ஙனமே புறநானூற்றின்கட் கூறப்படும் ஆய் அண்டிரன் என்னும் வள்ளலின் வரலாற்றிலும் ஒரு சிவ நேய அருஞ்செயல் கேட்கப்படுகின்றது. அண்டிரன் பொதியில் மலைத் தலைவன். ஒருகால் அவனுக்கு ஒரு நாகத்தின் உதவியால் உயர்வும் பளபளப்புமுடைய நீலப் பட்டாடை ஒன்று கிடைத்தது. மிக அழகியதென்று உள்ளம் மகிழ்ந்து ஆய், அதனை அங்கே ஆலின்கீழ் விளங் கிய தன் அன்பிற் சிறந்த சிவபிரான் திருமேனிமேற் போர்த்து, அகமும் முகமும் ஒருங்கு மலர்ந்து உருகி நின்றான். ஆய்க்கு உரிய தனிச் சிறப்பாக இச் சிவநேயச் செயலையே எடுத்துக் காட்டி, இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்னும் பெரியார்,

> " நீல நாகம் நல்கிய கலிங்கம்
>
> ஆலமர் செல்வர்க் கமர்ந்தனன் கொடுத்த
> சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
>
> ஆர்வ நன்மொழி ஆய் "

என்று தம் சிறுபாணாற்றுப்படையில் இவனைப் பாராட்டி யிருக்கின்றார்.

இவர் மட்டுமன்று, தக்கார் பிறரும் இவன் அன்புள்ளத்தின் உயர்வை நன்கறிந்து போற்றியுள்ளனர். ஆய் அண்டிரனது அருமையை முன்பே அறிந்துகொள்ளாமைக்காக உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்னும் ஓர் அந்தண் பெரியார், தம்மை மிகவும் நொந்துகொள்கின்றார். மோசியார் சிறந்த மேன்மையாளர். தலைசிறந்த தன்மதிப்புப் பெரியாராகிய பெருஞ்சித்திரனார் என்னும் நல்லோரால் "திருந்து மொழி மோசி" (புறம்: கருஅ) என்று சிறப்பிக்கப்பட்ட சீரியோர். இத்தகைய மோசியார், ஆய் என்னும் அருமணியப் பெருமகன் பெருமையை முன் அறிந்துகொள்ளாமைக்காக எவ்வளவுதான் இதயந் துடித்து நீராய்க் கரைந்தழிகின்றாரென்பது, பின்வரும் புறநானூற்றுப் (கருஉ) பாடலால் நன்கு விளங்கக்கூடும்.

"முன்உள்ளு வோனைப்[1] பின் உள்ளி னேனே
ஆழ்கஎன் உள்ளம் போழ்கஎன் நாவே
பாழூர்க் கிணற்றின் தூர்கஎன் செவியே

நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி அயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்

வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆஅய்குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோஇம் மலர்தலை யுலகே."

ஆய் பெருமகனது அருஞ் செயலில் உள்ளம் எவ்வளவு ஈடு
பட்டிருந்தால், மோசியார் இங்ஙனந் தம்மையே வைது
கொண்டு பகைத்துரைக்கக்கூடும்! அண்டிரன்பால் வான

ளாவ வைத்திருந்த அவரது மதிப்பு, இறுதியில் அவர்
கூறியிருக்கும் ஒரு குறிப்பினால் நன்றாகத் தெளிந்து
தோன்றுகின்றது. நாவலந் தீவென்னும் இத் தமிழகத்
துக்கு வடக்கே இமயமலை எவ்வளவு பெருமிதத் தோற்ற
மும் மாட்சியும் உதவியும் உடையதோ அவ்வளவு,
தெற்கே ஆய் அண்டிரனது குடியானது அரும்பெரு
நிலையும் ஆதரவும் உடையது என்று அவர் புலப்படுத்தி

1. உள்ளுவோனை - நினைத்தற்குரியோனை.





யிருக்கின்றார்; இமயத்தின் உயர்வும் ஆய்குடியின் மாட்சி
யும் இன்றேல் உலகமே பிறழும் என்று கூறித் தமது
கருத்தைப் பின்னும் வற்புறுத்தியிருக்கின்றார். அதற்கு,
ஆய் எவ்வளவு அருட்டிறமும் அருள்வாழ்வும் உடையவ
னாக விளங்கியிருக்க வேண்டும்! இங்ஙனம் பற்பல குறிப்பு
கள், பண்டைக் காலத்தின் அருள் வீர வாழ்க்கைப்
பெருந் தொண்டர்களைப்பற்றிப், புறநானூற்றில் நெடுக
உள்ளன. சில இயைபுகள்மேல் சிலரே இங்கு எடுத்துக்
காட்டப்பட்டனர்.

## ரு. சமயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

உலகத்திற் பொருட்செழிப்பு மிகுந்து வாழும் மக்கள், வரவரக், சலேயின்றி அப் பொருள்களின் தன்மைகளை ஆராய்தலாகிய கல்வியிலும் சிறந்து விளங்குகின்றனர். கலைகளாகிய அப் பொருளியல்புகளைப், பின்பு, பலர்க்கும் பயன்படுத்தி மகிழும் அன்புணர்விலும் அவர்கள் மேம்படுகின்றனர். அந்த அன்புணர்வானது, அதற்கு மேல், உலகத்திற் பலர் இடர்ப்பாடுகள் கண்டு பிறர்க்கெனவே வாழும் அருளுருக்கமாகிய பெருநிலையில் உயர்ந்து செல்கின்றது. உயிர்களுக்கு இயல்பின் அமைந்துள்ள இவ் வளர்ச்சிநிலையைத் திருவள்ளுவப் பெருமான், தமது தமிழ் மறையிற் பொருட்பால் என்று ஒரு பகுதி அமைத்தும், பொருளின் இயல்புகளை ஆராய்தலாகிய கல்வியைப் பொருட்பகுதியிலேயே வைத்து விளக்கியும், பின்பு அக் கலைகளைப் பயன்படுத்தும் உயிரன்பு நிலையை இன்பப்பால் கொண்டு தெரிவித்தும், அவ் வின்பப்பாலின் வளர்ச்சியாகிய அருளறத்தை அறத்துப்பாலால் தெளிவித்தும் இனிது தேற்றுவர்.

> “ அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள் ”

என்னுந் திருவள்ளுவர் திருமொழியினாலேயே அவர் கருத்து இங்ஙனம் பொருளின்ப அறமுறைகளே என்பது நன்கு புலப்படும்.

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்"
(நாலடி. ௧௧௪)

என்னும் பிறருரையானும் இனி துணிந்துகொள்ளப்படும். உயிருணர்வின் இவ் வளர்ச்சி முறையே,

"அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்"

என்று புறநானூற்றில் (௨௮) இனிது தெளிவிக்கப்பட்டது.

பொருட்செழுமை கண்டு, பொருள்களின் கலைகள் அறிந்து, ஆண் பெண் நேய அன்புணர்ந்து, அருளின் வாழ்வில் உயரும் நல்லோர், அவ் வருள் நிலையில், பொருள்களை மறந்து தொடர்புடையோரை மறந்து அருளுணர்வு நிலையிலேயே மிதக்கின்றனர். முல்லைக்கொடியின் இடர்ப்பாடறிந்து தனது தேரை ஈந்த பாரியும் புறம் (௨0௧), மயிற்பறவையின் குளிர் நடுக்கங் கண்டு தனது போர்வையை வழங்கிய பேகனும் (புறம்: ௧௪௫) இங்ஙனம் உலகுயிர்ப் பற்றற்று அருளுணர்வில் மிதந்த அறவோரே என்க.

பொருள்களின் தன்மைகள் கல்வி; உயிர்களின் இயல்பு அன்பு; அருள் என்பது எதன் இயல்பு? உயிர்களின் அன்பில் திளைத்து நிற்கும்போது பொருள்களின் இயல்பு மறந்துபோகின்றது. அங்ஙனமே, தொடர்புடைய உயிர்களின் பற்றும் அற்று அருளுணர்வில் மிதந்து நிற்பதற்கு எதனோடு திளைத்து நிற்கவேண்டும்? இறைவன் என்னும் முதல்வனே அந்தப் பெரும்பொருள். அவன் இயல்பு தான் அருள் என்பது. இறைவன் அருளில் திளைத்து நிற்கும்போதுதான் உலகுயிர்ப் பற்றுகள் அற்றுப் போகின்றன.

> "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு"

என்பது திருவள்ளுவப் பெருமான் பொன்மொழி. உலகப் பொருள்களிடத்திலும் உயிர்களிடத்திலும் உண்டாகும்



பற்று அற்றுப்போனால் அந்த உலகப் பொருள்களும் உயிர்களும் நமது அருளுணர்ச்சியின் பெருக்கத்துக்கு மிக நன்றாக உதவியாகின்றன; நாம் அவற்றை மறந்து நின்றாலும் நமக்கு அவை உதவியாகவே யிருக்கின்றன. அதுதான் அவை நன்றாகப் பயன்படுதற்குரிய வழி.

" பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபகல் எழுவர் எய்தி யற்றே;
வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி யனைத்தும்[1] ஆற்ற தாகலின்
கைவிட் டனரே காதலர் அதனால்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅ தோர் இவள் விடப்பட் டோரே "

என்னும் புறநானூற்றுப் பாட்டில் (நடுஅ) இக் கருத்துக்க ளெல்லாம் செறிந்து பொதிந்து கிடக்கின்றன. 'உலகம் ஒருநாளில் ஏழு அரசர்கள் தலைவராக வருவதற்குரிய அத்தனை நிலையாமையுடையதா யிருக்கின்றது. அதனால் உலகுயிர்களின் கூட்டமாகிய இந்த உலகத்தையும், அருட் பயிற்சியாகிய தவத்தையும் சீர்தூக்கிப் பார்த்தால், தவத்துக்கு உலகம் ஒரு சிறிதும் நிகருடையதாகத் தெரியவில்லை. அது தெரிந்தே உயிர் நேயம் மிகுந்த நல்லோர், அருட் பயிற்சியிற் புகுந்து, உலகுயிர்ப் பற்றுக்களை மறந்தனர்; அங்ஙனம் அவர்கள், அரு ளுணர்வில் தேங்கி இவ் வுலகத் திருவை நினைவு கொள்ளு தற்கு இடமில்லாமற் போனாலும், இத் திருமகள் என்னவோ அவர்களை விட்டுவிடுவதில்லை. அவர்கள் அரு ளுணர்வுக்கே நல்ல முகமாக உதவியாயிருக்கின்றனர். தன்னிடம் பற்றுடையார் தன்னை நல்ல முகமாகப் பயன்கொள்ளாமையால் அத்தகையோரிடந்தான் அவள் சேர்வதில் என்னுங் கருத்துக்கள் இச் செய்யுளிற் பெறப் படும்.

உலகப்பொருள் ஒவ்வொன்றும் தனது நிலையாமை யைத் தானே தேற்றுங் காலமுண்டு. மக்கள் அந்தக்

---

1. ஐயவியனைத்தும் – சிறு கடுகளவும்.

காலத்தில் அதன் நிலையாமை இயல்பை உட்கொள்வது தான் இயற்கை நெறி. அப்போதுதான் அந்த எண்ணம் அவர்கள் உள்ளத்தில் ஆற்றலோடு சென்று நின்று பயன்படுகின்றது. மரங்கள் தாம் நன்முக வளர்ந்து செழித்துப் பயன்முகமாகிவிட்ட பின்பே, அவை தமது நிலையாமையைப் புலப்படுத்துகின்றன; மக்கள் உடம்பும் இங்ஙனமே; உலகத்தின் ஊழிக்காலமும் இவ்வாறேயாம். செல்வப்பொருள்களும் மக்களிடத்தில் நன்முகச் செழித்து நின்ற நிலையிலேதான் மக்களுக்கு அவற்றைப்பற்றிய நிலையாமை யெண்ணம் உண்டாக இடமாகின்றது. அரைகுறைச் செல்வநிலைகள் மேன்மேலும் வேட்கையைப் பெருக்குமல்லது, நிலையாமைக் கருத்தை நிலைபெறுத்தமாட்டா. இவ் வியற்கைநிலையினை நன்குணர்ந்தே தெய்வப் பெற்றி வாய்ந்த ஆசிரியர் தொல்காப்பியனுர், காமஞ்சான்ற கடைக்கோட்காலை அருட் பயிற்சியாகிய சிறந்தது பயிற்றலை விளக்கினுர். தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனுரும், பொருள் செழித்து இன்பவாழ்வு நிரம்பி அன்பறம் முதிர்ந்து நிலையாமை கண்டு அருள்பற்றும் இயல்பினை முறையே விளக்கி அறிவுறுத்தினர்.

பொருள் செழித்த நிலையில் அவற்றின் நிலையாமை தோன்றுதலால் அவற்றின் இயல்புகளாராய்தலாகிய கல்வியை மக்கள் பற்றிக்கொண்டு, நிலையாது போகின்ற பொருள்களில் அவா இல்லாதவராகின்றனர். பின்பு, கல்வியை உணர்ந்து இன்புறும் உயிரன்பு தெரிந்து

வெறும் பொருட்கல்வியில் பற்று நீங்குதலும், உயிரன்பை விளக்கும் இறையருள் தெளிந்து உயிர் நுகர்ச்சி நீங்குதலும் அவர்களுக்கு முறையே நிகழ்கின்றன. இங்ஙனம் மேன்மேல் வளர்ச்சி நிலைகளைப் பற்றிச் செல்லுதலால், கீழ்கீழ்த் தளர்ச்சி நிலைகள் இயல்பாகவே கைவிடப்பட்டு அவற்றின் பயன்மட்டுந் தொடர்ந்து நிறைவேறுதல், உலகத்தின் இயற்கை நெறிமுறையாயுள்ளது. இம் முறை பற்றியே திருவள்ளுவர், 'பற்றற்றான் பற்றினைப் பற்றுக, அது பிற பற்றுக்களை விடுதற்கு ஏதுவாகும்' என்று

தொடர்ந்த வளர்ச்சி நெறியில் முன்னேறிச் செல்லும் ஆக்க முறையினை நினைவூட்டினர். நல்லது பற்றுதலாகிய இந்த ஆக்க முறையே தவமும் துறவும் எனப்பட்டதே யல்லாமல், பயனை இழந்துவிடும் இழப்பு முறை அப் பெயர்களாற் கூறப்படவில்லை. நல்லது பற்றுதலாகிய இத் தவஞான முறைதான் பண்டைக்காலத்தில், அருள் நெறியென்றுங் கருதப்பட்டது. இத் தவநெறியானது முடிவில் மிக்க அருளுணர்விற் கொண்டு செல்லுதலால், அம் மாட்சிமைபெற்றோரால் ஏனை எல்லா உயிர்களுக்கும் நன்மையுண்டாக இடமிருக்கின்றது. தவநெறியை இங் ஙனம் முக்கண் பெருமானாகிய சிவத்தின் நெறியாகவும், அந் நெறியை அனைத்துயிர்கட்கும் நலமுண்டாக்கும் அருள்நெறியாகவும் முன்னோர் கருதிய உண்மை, 'கண்ணி கார் நறுங் கொன்றை' என்னும் புறநானூற்றின் முதற் பாடலாலேயே நன்கு விளங்குகின்றது. அச் செய்யுளின் இறுதியில்,

> "எல்லா உயிர்க்கும் ஏம மாகிய
>
> நீரற வறியாக் கரகத்துத்
> தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோன்"

என்று சிவபிரான் இயல்பு தவநிலையில் வைத்துக் கூறப் பட்டிருத்தல் இக் கருத்துக்குத் துளக்கலாகா அரண் செய்கின்றது.

> "சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு"

என்று பிற்காலத்தில் ஔவையார் தங் கொன்றைவேந்தனிற் கூறியிருத்தலும் இது கருதியேயாம்.

செழித்த நிலையானது இங்ஙனமெல்லாம் உலகத்தில் இயல்பாகவே நிலையாமை புலப்படுத்தி, அவ் வுணர்வில் தலைப்பட்டோரை அருளிற் கொண்டுய்த்தலால், அருள் நெறி யுணர்வு தோன்றிய இடம் இச் செழிப்பு நிலையே என்று சற்றும் ஐயுறவின்றித் துணிந்துகொள்ளலாம். தொல்காப்பியத்தில் இச் செழிப்பு நிலையே வாகைத் திணை எனப்பட்டது. எனவே, சமயவுணர்ச்சி மக்கட்கு முதன்

முதல் தோன்றுவதற்கு இடமாயிருந்தது இவ் வாகைத் திணையே என்க. மக்களில் எல்லா வகையினரும் தத்தம் நிலையை மிகுத்துக்கொண்டு செழிப்புக்கண்ட நிலையில் அவர்க்கு நிலையாமையுணர்வும், நிலைத்த மெய்யுணர்வுப் பெருமையுந் தோன்றி வளர்தலின், தொல்காப்பியர் அவ் வியற்கை முறையே பற்றி வாகைத் திணைக்கு அடுத்தபடி நிலையாமை கூறுங் காஞ்சித் திணையையும், மெய்யுணர்வுப் பெருமை பாராட்டும் பாடாண்டிணையையும் வைத்து அருணெறியுண்மையை விளக்கிச் சென்றார். வாகைத் திணை இங்ஙனம் அருணெறிப் போக்குக்குக் கால்கோலி விட்டமையால் இந்தத் திணையைப்பற்றித் துறை விளக்கிய விடத்து இறுதியில் ஆசிரியர் தொல்காப்பியர்,

"பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம்[1] நீத்த பாலி னானும் என்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே"

என நூற்பா இயற்றி, முதலிற் பொருளொடு வாழ்ந்து பின் அருளொடு சேர்ந்து உயர்ந்து, அதனால் இயல் பாகவே அவா அற்று விளங்குந் தவனான வளர்ச்சியை எடுத்துக் காட்டுதல் காண்க. வாகைத்திணை முதலிய வற்றைப் பற்றிய விளக்கங்கள், 'சங்கநூற் கட்டுரைகள்' என்னும் எனது வேறொரு நூலின் இரண்டாம் பாகத்தில் 'விழுப்பம்' என்னுங் கட்டுரையில் விளக்கமாக எழுதப் பட்டுள்ளன. அங்கே இதனை இன்னும் விரிவாகக் கண்டு கொள்ளலாம். புறநானூற்றில் இவ்வியல்புகள்,

"ஓவத் தன்ன இடனுடை வரைப்பின்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்[2]
கழைக்கண் நெடுவரை அருவி யாடிக்
கான யானை தந்த விறகின்

கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே"

1. காமம் - அவா. 2. கண்டிகும் - கண்டேம்.

" கறங்குவெள் ளருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து

தில்லை யன்ன புல்லென் சடையொடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே"

என்னும் வாகைத்திணையின் துறைப் பாட்டுகள் (உருக-உ) போன்றவற்றில் எதிர்ந்து வருகின்றன.

இனி, இவ்வாறு உலகியற்கை நெறியே உயர்ந்து அருளுணர்ச்சியின்கண் தலைப்படுதலே முறையாயிருத்தலின், அருளுணர்ச்சியாகிய திருவருள் என்பது, உலகப்பொருள்களிலும் உயிர்களிலும் அவ்வவற்றின் நற்பயன்களாய் ஊடுருவியிருந்தே, பொருள்களும் உயிர்களும் நிலைமாறுங் காலங்களில் தான்மட்டும் அழியாது பயன் முகமாகத் தொடர்ந்து நின்று, நல்லோரை உயர்த்துவதாதல் வேண்டும் என்பதும் இனிது விளங்குகின்றது, மேன்மேல் வளர்ச்சி நிலைகளைப்பற்றிச் செல்லுதலால் கீழ்கீழ்த் தளர்ச்சி நிலைகள் இயல்பாகவே கைவிடப்பட்டு அவற்றின் பயன்மட்டும்

தொடர்ந்து நிறைவேறும் உண்மை முன்னும் எடுத்துக் காட்டப்பட்டது. அங்கே பயன் தொடர்ந்து நிறைவேறு தல் என்றது, திருவருட்கூறு தொடர்ந்து ஈர்த்துச் செல்லு தலே யாகும். உலகப்பொருளியல்புகளிலும் உயிரியல்புக ளிலும் இங்ஙனம் விரவி மக்களை அருளுணர்விற்கு ஈர்த்து ஆட்கொள்ளும் இறைவன் திருவருளாற்றலைப் பண்டைத் தமிழ்மக்கள் அங்கங்குங் கண்டு வியந்து, அருளுணர்வு வளர்ந்தோங்கி வரப்பெற்றனர். சொல்லின் மந்திர ஆற்ற லைக் கண்டு 'சொல் தெய்வம்' என்றும் குறிஞ்சிநிலத்தில்
ஞாயிற்றின்
'சேயோன்'.
யைக் கண்டு

செவ்வொளி படரும் இயல்பைக் கண்டு
என்றும், முல்லை நிலத்தின் பசுமை யியல்
'மாயோன்' என்றும், பாலை நிலத்தின் வீறு
தெரிந்து கொற்றவை என்றும், முன்னோர் இறைவன் நினைவு வரப்பெற்றமை போல்வன இங்கே நினைவு கூரப்படும். (தொல். ருசக, கூருக). நூல்களிற் பலப்பல தெய்வப் பெயர்கள் காணப்படுதற்குக் காரணம், இங்ஙனம் ஆற்றல்

காணும் வினைகளையெல்லாம் அவரவரும் தத்தம் ஆற்றலுக்குத் தக்கபடி திருவருட் கூறுகளாகக் கண்டு அருள்முக மாயினமையேயாகும். ஆயினும், எல்லாம் ஒரு முதல்வனது திருவருள் விளக்கமே என்னுங் கருத்து அக்காலத்தில் தக்கவாறு தெளியப்பட்டிருந்தது. சமயப் பூசல் சங்க காலத்தில் எங்கும் இல்லாமையே இதற்கு ஒரு பெருஞ் சான்றாகும். உலகத்தின் ஒவ்வொரு கூறில் ஒவ்வோர் ஆற்றலைக் கண்டு ஒவ்வொரு தெய்வப் பெயரால் விதந்து வியந்தமைபோலவே உலகம் முழுவதிலும் ஓங்கி வீறிடும் முழுத் தோற்றமும் ஆற்றலுங் கண்டு ஒரே முழுமுதற் றெய்வமாகவும் இறைவனைப் பெயரழைத்து, அப் பெரியோன் றிருவருளில் முன்னோர் ஈடுபட்டனர். அப்பெரியோனே முக்கட் பெருமான் என்னும் சிவபெருமான். இவன் திருவுருவக் கோலமெல்லாம் இவ்வுலகத்தின் பேருருவக் கோலமேயாம்; விண்ணும் மண்ணும் நிறைந்த இயற்கையுலகக் கோலமேயாகும்.

விண்ணில் உலவும் மேகத்தை ஒத்த சடையும், மேகத்தில் இருக்கும் மழை நீர்க்கும் நிலாவுக்கும் ஒப்பாகச் சடையின்கண் விளங்கும் கங்கையும் பிறையும், சிவபிரானுக்குத் திருமுடிக் கோலங்களாக உள்ளன. விசும்பே முகமாக, அவ் விசும்பில் விளங்கும் ஞாயிறும் திங்களும் மின் தீயும் அப் பெருமானுக்கு மூன்று திருக்கண்களாக உள்ளன. அதன்பின், விண்ணை அடுத்து, மண்ணிலிருந்து விண் வரையில் ஓங்கி உயர்ந்திருக்கும் பெரு மலைகளின் வடிவு போல இறைவன் திருமேனி யுருவும் விளங்குகின்றது. மலைகளில் உள்ள மான், எருது, புலி, பாம்பு, எலும்பு மண்டை யோடு முதலிய பல பொருளுருவங்களும் இறைவன் திருமேனிக் கோலங்களில் உள்ளன. சிவபிரான் தனது திருக்கையில் மான் கன்று வைத்திருப்பதும், ஏற்றுக் கொடி பிடித்திருப்பதும், இடுப்பில் புலித்தோல் உடுத்திருப்பதும், உடம்பு முழுதும் பாம்புகள் அணிந்திருப்பதும், மார்பில் என்புமாலை யணிந்திருப்பதும் போல்வன இங்கு நினைவு கூரற்பாலன. மலைவாழும் வேட்டுவருருவுபோற் பெருமான்

கோலமும் வேட்டுவத் தோற்றத்தில் இயற்கைக்காட்சி நல்கு கின்றது. மலையின் பக்கங்களிலும், மலையையடுத்த நிலப் பரப்பாகக் காணப்படும் காடுகளின் பரப்பிலும் எங்கும் பச்சிலைப் பசுமை தோன்றுவதுபோல, இறைவன் திருமேனி முழுதும் அம்மை பாகங்கொண்டிருக்கின்றனள். அப் பெருமாட்டியை மலையம்மை என்றும் காடுகிழாள் என்றும் வழங்குதலுங் காண்க. காட்டு நிலமாகிய முல்லை நிலத்தை விட இன்னுந் தாழ்ந்து தோன்றும் வயல் நிலமாகிய மருத நிலங்கள், பயிர் பச்சையும் நாடு நகரமும் வீடு வாசலும் கோயில் குளங்களும் வாய்ந்து வாழ்க்கையோங்கி அருள் நிலை தெருட்டும் நாகரிக எடுப்புக்கு ஏதுவாயிருப்பதுபோல இறைவனது தூக்கிய திருவடிக்கோலமும் எடுப்பாகத் திகழ் கின்றது. வயல் நிலங்களைப் பார்க்கிலும் இன்னுந் தாழ்ந்து காணப்படுங் கடலிடத்தைப்போல், விண்முடியாக விளங் கும் இறைவனுக்கு மண்ணில் தாழ ஊன்றியுள்ள ஊன்றிய திருவடி உள்ளது. ஓ வென்னும் அலையொலிபோல் இறை வன் திருவடிக் கண்ணுஞ் சிலம்பொலி கலிக்கும்; ஆடலும் நிகழும். இங்ஙனமெல்லாம் விண்ணும் மண்ணும் நிறைந்த உலகத்தின் இயற்கைப் பேருருவமே சிவத்தின் இயற்கைப் பெருங்கோலமாம் உண்மை,

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாய்எறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி

ஆகாச மாய்அட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவுந் தாமே யாகி

நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே"

"மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்

கண்ணாகிக் கண்ணுக்கோ ரணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்

பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோர் அண்ட மாகி
எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்து மாகி
எழுஞ்சுடராய் எம்அடிகள் நின்ற வாறே"

என்று அப்பரடிகள், 'நின்ற திருத்தாண்டகம்' என்னும் இறைவன் பேருருக் கிளக்குந் தேவாரத் திருப்பதிகத்தில் அருளிச்செய்தல் கொண்டும்,

"உலகே மெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்க மாடாமோ"

என்று திருவாதவூரடிகள் திருவாய்மலர்ந்தருளுதல் கொண்டும் நன்கு துணிந்துகொள்ளப்படும். இவ்வாறு பேருருத் தோற்றமாய் உலகப் பொருள்களில் ஊடுருவி நின்று இயங்குவதாகிய சிவபிரானது ஒருவகை இயக்கம், தமிழிற் பழம்பெருங் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில்,

"திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
... ... ... ... ... ...
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்"

என்று கூறப்பட்டுள்ளது. விண்ணும் மண்ணுமுள்ள பொருட் பகுதிகள் பலவும் சிவபிரானது இயற்கைத் திருக் கோலமாகக்கொண்டு இறைவனை இப்பேருருத் தோற்றத் தின் முழுமுதல்வனுகக் கருதிய குறிப்புப் புறநானூற்றின் முதற்பாட்டிலேயே,

"கண்ணி கார்நறுங் கொன்றை, காமர்
வண்ண மார்பின் தாருங் கொன்றை;
ஊர்தி வால்வெள் ளேறே, சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப;

கறைமிட றணியலும் அணிந்தன் றக்கறை

உ௮௦ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

மறைநவி லந்தணர் நுவலவும் படுமே;
பெண்ணுரு ஒருதிறன் ஆகின் றவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினுங் கரக்கும்;
பிறைநுதல் வண்ணம் ஆகின் றப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே;"

என்று நுவலப்பட்டிருக்கின்றது. இது புறநானூற்றிற் கடவுள் வாழ்த்துப் பாடலாக அமைந்திருப்பதும் கருத்திற் பதிக்கற்பாலது.

உலகம் முழுவதும் ஊடுருவி ஒளிருந் திருவருளாற் றலை ஒருங்கு நினைந்த தோற்றமே இங்ஙனம் சிவபிரான் திருக்கோலமாகத் துணியப்பட்டமையால், சங்ககால நூல் களில் கடவுட் பெயர்களைப் பற்றித் தொகுத்துக் கூறப்படும் இடங்களில், சிவபெருமானுக்கே முதன்மை கொடுத்து அவன் முழுமுதன்மை தெளிவிக்கப்பட்டுள்ளது. பத்துப் பாட்டுள் ஒன்றான மதுரைக் காஞ்சியில் (சஙுந-அ) மாங்குடி மருதனார் என்னும் புலவர் தலைவர்,

> "நீரும் நிலனும் தீயும் வளியும்
> மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய
> மழுவாள் நெடியோன்[1] தலைவ னாக
> மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
>
> வாடாப் பூவின் இமையோர் நாட்டத்து
> நாற்ற உணவின் உருகெழு பெரியோர்"

எனவும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான இன்னா நாற்பது என்னும் நூலில் (க) கபிலர் என்னும் பெரும்புலவர்,

> "முக்கட் பகவன் அடிதொழா தார்க்கின்னா;
> பொற்பனை வெள்ளையை உள்ளா தொழுகின்னா;
> சக்கரத் தானை மறப்பின்னா; ஆங்கின்னா
> சத்தியான் தாள்தொழா தார்க்கு."

1. சிவபிரான்.



எனவும், இனி எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றுன புற நானூற்றிலும் (ருசு) தமிழ்ச் சங்கத்துக்குத் தலைமைப் புலவரான நக்கீரர்,

"ஏற்றுவல னுயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்[1]
கடல்வளர் புரிவளை புரையு மேனி
அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்
மண்ணுறு திருமணி புரையு மேனி

விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்
மணிமயில் உயரிய மாறு வென்றிப்
பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனுமென
ஞாலங் காக்கும் கால முன்பின்
தோலா நல்லிசை நால்வ ருள்ளும்"

எனவும், தமிழ்ப் பெருங்காப்பியங்களாகிய சிலப்பதிகார (ரு : கசுகூ-எ௩) மணிமேகலை (க : ருச-எ) நூல்களில் ஆசிரியர் இளங்கோவடிகளும் ஆசிரியர் கூலவாணிகள் சாத்தனுரும் முறையே,

“பிறவா யாக்கைப் பெரியோன்[1] கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்

மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்”
“நுதல்வழி நாட்டத்து இறையோன்[1]
முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
ஆறறி மரபின் அறிந்தோர் செய்யுயின்”
எனவுங் கூறுந் திருமொழிகள் பலவும் இங்கே நினைவு கூரற்பாலன. எல்லாரும் எல்லா வகை நூல்களிலும் ஒரு முகமாகச் சிவபிராற்கே முதன்மை கொடுத்திருக்கின்றனர். ஆசிரியர் இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தின் மற்றோரிடத்திற் (கச: எ-கஉ) பேச நேர்ந்த போதும்,

1. சிவபிரான்

 புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

“நுதல்விழி நாட்டத் திறையோன்[1] கோயிலும்

உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்

மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்

கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்

அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்"

என இம் முதன்மை பிறழாதே கூறுகின்றார். பிற தெய்வ நிலைகளை முறைப்படுத்துதலில் வரிசை பிறழ்ந்தாலும் சிவ பிரார்க்கு அளிக்கும் முதலிடம் மட்டும் எங்கும் பிறழ்தலில் லாமை மேலெடுத்துக் காட்டிய சிலப்பதிகாரப் பகுதிகள் இரண்டையும் பிறவற்றையும் ஒப்பிட்டு நோக்கித் தெளி வாகக் கண்டுகொள்ளலாம். இதனால் ஏனை எல்லாத் தெய்வ நிலைகளையும் இறைவன் திருவருட் கூறுகளாகக் கருதினு லும், திருவருள் முழுவதையும் ஒருங்கு நினைந்து அவ் விறைவன் முதன்மை அறிந்து அவனை விண்ணும் மண் ணும் நிறைந்த முழுமுதற் கடவுளாகக்கொண்டு அவனுக்கு உலகளாவிய இயற்கைக் கோலந்தெரித்து, அவ்வியற்கைக் கோலம் யாண்டும் பிறப்பில்லாத முழுமுதல் நிலையினதாத லின் அப் பெம்மான் ஒருவனே 'பிறவா யாக்கைப் பெரி யோன்' எனத் தெளிந்து, முதன் மதிப்பு வைத்து, அவன் இணக்கத்தால் அருளில் திளைத்தலாகிய ஒரு கடவு ளுணர்ச்சி, சங்ககாலத்தில் எல்லாப் பகுதிகளிலும் அடிப் பட்டு வழங்கிவந்த உண்மை சற்றும் ஐயுறவின்றித் தெளிந்துகொள்ளப்படும்.

புறநானூறு, கடைச்சங்க காலத்தில் திரட்டப்பட்ட நூலாயினும், அதன்கண் தொல்காப்பிய காலத்துக்கும் முன்னால் எழுந்த பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. ஆதலால், தமிழகத்தின் மிகப் பழைய கருத்துக்களை அறிந்துகொள்வதற்குப் புறநானூற்றின் சில பாடல் களைப்போற் கருவியாவது, தமிழில் அவற்றினும் பழமை யுடையதாக, வேறில்லை. குமரியாறு கடல் கொள்ளப்படு தற்கு முன்னும், தெற்கே குமரிநாட்டில் பஃறுளியாறு

1. சிவபிரான்.



கடல் கொள்ளப்படுதற்கு முன்னும் எழுந்த பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. தொல்காப்பியர் குமரியாறு கடல் கொள்ளப்படுதற்கு முன்பு விளங்கியவர். பாண்டி யன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பஃறுளியாறு கடல் கொள்ளப்படுதற்கு முன் திகழ்ந்தவன். புறநா னூற்றில் இவ்வழுதியைப் பற்றிய பாடல்கள் சில உள்

ளன. முக்கட் பெம்மான் என்னும் முழுமுதற் கடவு ளொருவர்க்கே இம் மன்னன் வணக்கங் காட்டும் இயல்பி னன் என்றும், அக் கடவுள் முனிவர்களாற் பரவப்படு பவர் என்றும், அப் பெருமாற்கு ஒரு நகரத்தைப்போல் அகன்று உயர்வகையாய் அமைந்த திருக்கோயில் அவ்வ ளவு பழைய காலத்திலேயே அத் தென்குமரி நாட்டில் அமைந்திருந்தது என்றும், "வடா அது பனிபடு" (புறம்: சு) என்னுந் தலைப்புடையதாய் இம் முதுகுடுமியைப் பற்றி வருகின்ற ஒரு புறப்பாட்டில்,

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்[1]வலஞ் செயற்கே"

என்று காரிகிழார் என்னுஞ் சிவநேயச் செல்வர் கூறுவர். பெரிய சிவபிரான் திருக்கோயிலைப் பற்றியும், அதனை வலம் வந்து வழிபடுதலைப்பற்றியும், முனிவர் பரவுதலைப் பற்றியும் மிகப் பழையதான இச் செய்யுட் பகுதி எடுத்துக் காட்டுதலால், ஏறக்குறைய பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்பே நமது நாட்டிற் சிவ வழிபாடும் சிவநெறியும் மிக நன்றாக விளக்கமுற்றிருந்த தென்பதும்; திருக்கோயில் அமைப்பைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும், அவ் வவற்றிற்குரிய மெய்யுணர்வுக் கருத்துக்களைப் பற்றி யும் அருமறை நூல்கள் விளங்கியிருந்தன என்பதும்; தவநெறி அருளாளர்களான முனிவர்கள் அவ் வருணெறி யினைத் தம் அருள் விளக்க மாட்சியால் எங்கும் விளங் கும்படி தெளிவு செய்துகொண்டு திகழ்ந்திருந்தனர் என்பதும் துணியப்படும். கடவுளுணர்ச்சியானது இங் ஙனம் உலகியற்கைப் பேருருவினனான முக்கட் செல்வன்

---

1. நகர் - திருக்கோயில்.

உணர்ச்சியாய் முழு முதன்மையும் மிகப் பழைமையுங் கொண்டு காணப்படுதல் போல, வேறு தெய்வவுணர்ச்சிகள் இவ்வளவு முதன்மை பழமையோடு இருந்தமைக்குச் சங்க நூல்களில் சான்று காணப்படவில்லை. இவ்வாற்றால், இவ்வளவு காலம் என்று துணிந்து கூற இயலாத நெடும்பெருங் காலத்துக்கு முன்னரே, தமிழ்ச் சான்றோர், உலகியற்கைகளையும் உயிர்களையும் நன்கு ஊடுருவி யறிந்து, அவ் வவற்றினூடு மிளிர்ந்தும் கடந்தும் பயன் விளைத்து நிற்குந் திருவருளியல்பையும், அதனைத் தனது பண்பாகக்கொண்டு தானொரு தொடக்குமின்றிப் பிறவா நிலையினனாய் இயல்பாய் இருக்கும் இறைவன் இருப்பையுந் தெளிந்து, அம் முழுமுதல்வனை உலகியற்கைப் பெரு வடிவமாகிய ஒரு வழிபாட்டுருவில் வழிபடு முறைமைகளும் மேற்கொண்டு, அப் பெம்மான் அருளியலைப் பற்றி அதனில் மிகப் பயின்று பிற பற்றுக்கள் அற்று மெய்யுணர்வு நிறைந்து அருளுணர்வின் தனி முனிவராய்ப் பிறர்க்கென வாழும் அருட்பெரு வாழ்விற் பிறங்கியிருந்த நாகரிக மேன்மை மிகத் தெளிவாகக் கொழுந்தோடித் தெரிகின்றது. தமக்கு முன் இத்தனை அரிய நல்லிலக்கிய வாழ்வுகள் இருக்கக் கண்டமையானன்றோ, ஆசிரியர் தொல்காப்பியர், தமது பொருளதிகாரத்தை, இவ் வருள்நிலை யமைப்புக்கள் நன்கு அமைய, வாகை காஞ்சிப் பாடாண் திணைகளை இனிதியக்கி, இயற்ற முடிந்தது!

சிவ.

# அறுவகைச் சமய உண்மைகள்

சமய உணர்வை வெறுங் கலையளவாகக் கருதாமல் வாழ்க்கை யுணர்வாய் உணர்ந்து இத்தனை மெய்ந்நிலையில் தமிழ்மக்கள் வாழ்ந்துவந்த சங்ககாலத்து அருள்வாழ்க்கை முறைகளிலிருந்தே, பின்பு, அவற்றின் கருத்துப் பகுதிகள் பற்பல சமயக் கலைகளாக வெளிப்பட்டன. அக் கருத்துக் கள் பலவும் ஆறு பிரிவுகளில் முதன்மையுற்று நிற்கின்றன. இந்த அறுவகைப் பிரிவுகளும் ஒருங்கு சேர்ந்த வாழ்க்கை

புறநானூறும் சமயமும்

உஅ௫ முறையே, உண்மையிற் 'சமயம்' என்று கூறுதற்குப்
பொருந்தும். அறுவகைச் சமயங்களென்பன
சமயத்தின்
உட்பிரிவுகளே யல்லது வேறில்லை. இவ்
முன்னும் விளக்கப்பட்டுள்ளது.

வுண்மையானது

1. உலகாயதம்

வாழ்க்கையே நாகரிகமே இன்னவென்

றறியாத குழந்தை யறிவுடையவர்களாய் அயல் நாட்டவர் சிலர்
இந் நாட்டுக்கு வந்து தங்கியபோது, அவர்களுக்கு உலகம் என்பதே இன்னதென்று விளங்காத நிலையில் இருந்தது. அந்தச் சமயத்தில் அவர்களுக்குக், கூடியவரையில் உலகம் இன்னதென்று ஒருவகையாக விளக்கி, வாழ்க்கையில் ஒரு கிளர்ச்சியும் சுவையும் ஊட்டுதல் இன்றியமையாத தாயிற்று. அத்தகைய தொடக்க நிலையில் உள்ளவர் களுக்கு நேரிற் கண்ணெதிரிற் காண்பதுமட்டுமே மெய் யென்று தோன்றும். ஆதலால், அந்தக் 'காட்சியளவை' யிலேயே அவர்களுக்குச் சில தெளிவுகளை உண்டுபண்ண வேண்டுவது முதன்மையாயிற்று. இந் நாட்டுச் சான்றோர் பின்வருமாறு எடுத்துக்காட்டி அவர்களுக்கு நலம் புரிந் தார்கள் ;

'உலகம் ஒரே பொருளாக இல்லை ; மண்ணென்றும் நீரென்றும், தீயென்றும், காற்றென்றும் நான்கு பொருள் களின் சேர்க்கையாக இருக்கின்றது : இந்த நான்கையும் நாம் நன்றாக நேரில் அறிகின்றோம். இந்த நான்கினாலே தான் நாம் இது மணமுடையதென்றும், இது சுவையுடைய தென்றும், இது ஒளியுடையதென்றும், இது மெத்தென் றிருப்பதென்றும் அறிந்து வாழ்க்கையின்பம் பெற முடி கின்றது. மகளிரோடு கூடி அவருடம்பிலும் மணமும் சுவையும் அழகும் மென்மையும் நுகர்ந்து இன்புற முடி கின்றது. ஆதலால், இந்த உலகத்தில், உழவு, வாணிகம், நிரைகாவல், கைத்தொழில் முதலிய முயற்சிகளில் ஈடு பட்டு, வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்களை நிரம்பத் தேடி, அரசனது செங்கோன் முறைமைக்கு மாறுபடாமல்

ஒழுங்காக இருந்துகொண்டு இன்பமாய்
இது நமக்கு நல்வாழ்க்கையா யிருக்கும்.'

வாழவேண்டும் ;

"சாற்றுபெய ரானவை தலம்புனல் கனல்பின்

காற்றும்என லாம்இவ்வை கலந்தகுணம் ஓதில்
நாற்றம்இர தம்உருவம் நற்பரிச மாகும்
போற்றும்இவை நித்தஇயல் பாம்இவை
புணர்ப்பே."

"நாட்டினில் அரச ஞணைக் கிசையவே நடந்து நாளும்
ஈட்டிய பொருள்கொண் டிங்கே இன்பத்துள் இசைந்திடரே"
என்பது.

இந்தக் கருத்துக்கு வேண்டிய ஆராய்ச்சிகளும் நன்றாக விளக்கப்பட்டன. தொடக்க மக்கட்கு அந்தச் சமய உணர்வாக இது பயன்பட்டது. வியாழன் என்னும் சான்றோன் அம் மக்கட்கு ஓரளவு வாழ்க்கை முன்னேற்றங் காட்டும் பொருட்டுக் கூறிய இக் கருத்துக்களையே அவ் வயல்நாட்டு மக்களிற் சிலர், முடிந்த முடிபாகத் துணிந்து கொண்டு, பேரறிவும் அருளுணர்வுமில்லாமல் இக் கொள்கைகளையே தமக்குரிய சமய நூலாக இயற்றித்,

தமது வாழ்க்கைக்கு அதனை யொரு விதிமுறையாக வைத்துக் கொண்டனர். இதற்கு உலகாயதன் என்பான் முதன்மையா யிருந்தான்.

> “ இந்திர புரோகிதன் இயம்புமொரு நூலின்
> தந்திரம் எனாது,அறிவி னொடுஅரு ளிலாமல்
> சந்தனை புயத்துமண மாலைகள் தயங்க
> உந்தியுல கத்தில்உல காயதன் உரைப்பான் ”

என்னுஞ் சிவஞானசித்தியார்த் திருமொழி இங்கு நினைவு கூரற்பாலது. உலகாயதன் பெயரால் அமைந்த இத் தொடக்கச் சமயமானது ‘உலகாயதம்’ எனப்பட்டது.

## 2. பௌத்தம்

உலகத்தைத் துய்ப்பதென்னும் நினைவு தவிர வேறொன்றிலும் நாட்டமில்லா திருந்த இம் மக்கட் கூட்டம் பின்னும் வாழ்க்கை விளக்கம் பெறவேண்டுவது

கட்டாயமாயிற்று. உலகத்தைத் துய்ப்பதென்னும் காரணத்தால் அவர்கள் தந்நலமே மிகுந்து நின்றனர்; பிறவுயிர்களின் இன்ப துன்பங்களைக் கருதிப் பாராதவராஞர். வாயில்லாத ஏழைச் சிற்றுயிர்களின் நலத்தில் இத்தகையோர்க்கு ஒரு சிறிதுங் கவலையேயில்லை; ஆடு முதலிய சிற்றுயிர்க்கொலை நாட்டில் மிகுந்து நின்றது. இந்நிலையில் தமிழ்ச் சான்றோர், முன்னையினுஞ் சற்று மேன்மையான வாழ்க்கைச் சிறப்பை அவர்கட்கு எடுத்துக் காட்டினர்.

'மண், நீர், தீ, காற்று என்று நான்கு பொருள்கள் இவ் வுலகத்திற் காணப்படுகின்றன; அவற்றை நாம் துய்த்து இன்புறுகின்றோம்; நாம் துய்த்து இன்புறுகின்ற போது நமக்கு அறிவு என்று ஒன்று இருப்பதாகத் தெரிகின்றது. அறிவில்லாதது எதுவும் இன்ப துன்பம் அடைவதில்லை. கல்லும் மண்ணும் சேர்ந்து இன்புமடையுமா? இரும்பும் மரமும் சேர்ந்து இன்பமடையுமா? ஆகவே, மண் நீர் தீ காற்று என்னும் அறிவில்லாத பொருள்களுக்கு வேருக அறிவு தனியே உண்டென்பது உறுதியாகின்றது, மண் நீர் முதலியவற்றிற்குத் தனித்தனி இயல்புகள் வேறே இருப்பதனுல், அறிவு வேறு, இவ் வறிவில்லாத பொருள்கள் வேறென்றே துணியவேண்டியிருக்கின்றது. இத்தகைய அறிவு ஒவ்வோருடம்பினும் இருந்து இன்ப துன்பம் அடைதலைப் பார்க்கின்றோம். சிற்றுயிர்களைக் கொன்றுவிட்டால், அவற்றின் அறிவு வீணுய் விடுகின்றது; அவற்றின் வாழ்க்கை கெடுகின்றது. இங்ஙனமே பிறர் நலத்துக்கு ஊறுசெய்கின்ற களவு, கள், காமம், பொய் என்னுங் குற்றங்களையும் நீக்கி நாம் நடந்துகொள்ள வேண்டும். இதனுல் எல்லார்க்கும் வாழ்க்கை நலமுள்ளதாயிருக்கும்' என்பது.

தமிழ்ச் சான்றோராகிய புத்தர் தமிழர் பெருவாழ்க்கையிற் காணப்படும் ஒரு கூற்று உண்மையை எடுத்து இவ்வாறு காட்சியளவையோடு 'கருதலளவை'யும் பற்றி ஓரளவு வாழ்க்கைச் சீர்திருத்தங் கூற, அது கேட்டோர்.





அந்த அளவே முடிந்த முடிபாகத் துணிந்து, புத்தர் பெயராலேயே 'புத்த சமயம்' என்றொன்று அமைத்துக் கொண்டு அதற்கு விதிநூலுங் காண்பவரானார்.

## 8. சாங்கியம்

இங்ஙனமே மேன்மேலும் வாழ்க்கை விளக்கங் கொள்ளும்படி, 'உரையளவை' கொண்டு, வானமும் அதற்கும் மேல் மூலப்பகுதி வரையிலுள்ள பொருளுண்மைகளும் உயிருண்மையும் கபிலர் என்னுந் தமிழ்ச் சான்றோர் விளக்கி உதவிபுரிந்தார். 'மண் நீர் காற்று என்னும் பொருள்கள் தங்கி இயங்குதற்கு ஓர் இடம் வேண்டும். அந்த இடமே வானம் எனப்படும். மேலும், உலகத்தில் நாம், மண் நீர் தீ காற்று என்னும் நான்கு பொருள்களின் வாயிலாகக் கிடைக்கும் மணம் சுவை ஒளி ஊறு என்னும் நான்கு இயல்புகளை மட்டும் நுகரவில்லை; ஓசை என்னும் மற்றோரியல்பையும் செவியின்பமாக நுகர்கின்றோம். ஆதலால், அந்த ஓசை உண்டாவதற்கு ஓர் இடம் இருக்க வேண்டுமன்றோ? அதுதான் வானம் என்பது. இனி, வானத்துக்கு மேலும் நுண்ணிய பொருள்கள் உள்ளன. நமக்கு மனம் என்னும் நினைவு இருப்பது தெரிகின்றது. அது இயங்குவதற்கு இந்தப் பருமை வானத்தைவிட நுண்ணிய வானம் இருக்கவேண்டும். ஆதலால், மண் நீர் தீ காற்று வானம் என்னும் இந்த ஐம்பூதங்களுக்கும் மேலாக இவற்றின் மூலப் பகுதி வேறு இருக்கின்றது. இதிலிருந்து புத்தி என்னும் கரணம் தோன்றிப் புலன்களிற் செல்லுகின்றது. உயிர் அறிவு வண்ணமாய் இவைகளுக்கு வேறாய் இருக்கின்றது. இப்படிப் பல நுட்பங்களை நாம் அறிந்துகொண்டால், நம் அறிவு இன்னும் நுட்பமாகி அதற்கேற்ற நடக்கைகள் உண்டாகி வாழ்க்கை ஒளி மிகும். சான்றோர் தம் நூல்களில் இந் நுட்பங்களை அறிந்து சொல்லியிருக்கிறார்கள். நாம் அவற்றைக் கொண்டும் தெளிந்து கொள்ளலாம்.

கபிலர் இவ்வாறு அருளிச் செய்ததைக் கேட்ட சிலர், இவ்வளவே மொத்தம் அறிய வேண்டிய பொருள்கள்

என்று கணக்கிட்டுக்கொண்டு தமக்கென ஒரு தனிச் சமயம் ஆக்கிக்கொண்டனர். எண்ணிக்கையைச் சங்கியை என்றுங் கூறுவதுண்டு. எண்ணிக்கை கொண்டது சாங்கியும் எனப்படும், ஆதலால், பொருள்கள் இத்தனை தாம் என்று கணக்கிட்டுக்கொண்ட இச் சமயமும் 'சாங்கியம்' எனப்பட்டது.

## 4. நையாயிகம்

இதுவரையிற் கூறிய வாழ்க்கை முன்னேற்றங்களைப் பின்பற்றினோர், மூலப்பகுதி என்னும் நுண்பொருள் வரையிற் பொருளுண்மைகளும் உயிருண்மையும் அறிந்து அவற்றிற் கேற்றபடி வாழ்க்கையின்பம் பெற்றுவந்தனர். தத்தம் கருத்தளவே வரம்புடையன என்று அவரவரும் முடிபு தேற்றிக்கொண்டமையால், கூறிய உண்மை கட்கு மேல் அவர்களுக்கு நாட்டஞ்செல்லாது, வாழ்க்கை வளர்ச்சி தடைப்பட்டது. உயிர் உண்டென்று உணர்ந்து அவ் வுயிர்களின் கட்டுப்பட்ட சிறு செயல்களில் மட்டுங் கலந்துகொண்டு, உலகப் பொருள்களைப் பொறி புலன் களால் நுகர்வதும், அவற்றின் சிற்சில இயல்புகளைக் கரணங்களால் ஆராய்வதும், தொடர்புகொண்ட உயிர்கள் சிலவற்றோடு தமது சிறிய உயிரறிவால் ஓரளவு நேயங் கொள்வதுமாக இந்த அளவில் மட்டும் அவர்கள் வாழ்க்கை நிகழ்ந்து வந்தது. இதனால் நிறைய வேண்டிய பெருந் தன்மை நிரம்பாமல், ஏனைப் பெரியோர் வாழ்க்கையோடும் முரண்பட்டு, நாட்டின் பெரு வளர்ச்சிக்கு இடராயிற்று. மேலும். தத்தங் கொள்கையளவே முடிவு நிலையெனத் துணிந்து, அத் துணிபைப் பிறர்க்கும் உரைத்து, மக்கள் மெய்வளர்ச்சிக்கு அவரவரும் இடர்விளைத்து வந்தனர். அவருட், கருத்து வளர்ச்சியுடைய சிற்சிலரும், காலந்தோறும் இந் நாடு புகுந்த ஏனை அயலவருள்ளும் சற்று அறிவேற்றமுடையராயிருந்த பிறர் மட்டும் மேன் மேல் உண்மைகள் அறிதற்கு உரியரா யிருந்தனர். ஆதலால், தமிழ்ச் சான்றோர் தம் அருட்பேர் வாழ்க்கையி லிருந்து மற்றும் முன்னேற்றமான உண்மைகளை அவர்

க்கு அருளுடன் அறிவுறுத்துவா ராயினர். அந் நிலையில்,

அக்கபாதனார் என்னும் அறவோர், அறிவுறுத்தியது,

வருமாறு :

'மண் முதல் மூலப்பகுதி வரையிலுள்ள பொருள் களை நாம் அறிவோம், அப் பொருள்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகையாக இயங்கி நமக்கு நலம் பெருக்கி வருகின்றது. இதனால், இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன பொருள்கள் நமக்குத் தகுதி யாகப் பயன்படும் என்றுந் தெரிகின்றது. ஆகவே, காலத்தை நிகழ்கால இறந்தகால எதிர்காலங்களாக அறிந்து அவ் வவற்றிற்கான ஏற்பாடுகளுடன் நமது வாழ்க்கை இயைந்து செல்வதுங் கட்டாயமாகின்றது. காலம் முன் பின் என்று அறியப்பட்டு, இவ்வாறு அப் பொருளுண்மை முதலியனவும் நமக்குப் புலப்படுகின்றன.'

'இனி, உயிர் என்று இதுவரையில் அறிந்துள்ளதைப் பற்றியும் நாம் கவனிக்கவேண்டும்; நம் அறியும் உயிர் உடம்பிற் சட்டுண்டு சிற்றறிவுடையதாய் இருக்கின்றது. நம் எதிரில் நிகழுஞ் செயல்கள் அத்தனையுமே இச் சிற்றறிவுடைய உயிரால் நிகழுமென்று தோன்றவில்லை. இவ்வுயிரைப்போலப் பெரியதோர் உயிர்ப் பொருள் (பரமான்மா) வேறே இருக்கவேண்டும். அது முற்றுணர்வுடையதாய், எல்லாம் வல்லதாய் இருக்கவேண்டும். அந்தப் பெரும் பொருளின் விருப்பப்படியே உலகத்திற் செயல்கள் நிகழ்கின்றன. உலகமும் தோன்றி ஒடுங்குகின்றது என்று துணியவேண்டி யிருக்கின்றது. இதனால், ஒரு பெரும்பொருளின் இருப்பும் நமக்குத் தெரிகின்றது. அந்தப் பெரும் பொருளின் பெருமையில் நாம் உள்ளம் வைத்து ஒழுகினால் நம்மிடம் இன்னும் அருமையான பெரிய ஆற்றல்கள் மலர்ந்து வாழ்க்கை மேன்மேலும் நலமுள்ளதாய் விளங்கும்' என்பது.

அக்கபாதனார் என்னும் பெரியார் நம் உயிரைப்போல் வதொரு பேருயிர்ப் பொருள் இருக்கவேண்டுமென்று,

'உவம அளவை' கொண்டு ஒரு பெரும்பொருளின் உண்மை கூறி அதன் இயல்பிற் படிந்து இன்புறுதலை இங்ஙனம் வகுத்துக் காட்டியபின், நியாய முறையில் அவர் வகுத்துக் காட்டிய அளவே அளவாகத், தங் கொள்கைகளை வரம்பு செய்துகொண்டவர்கள் 'நையாயிகர்' எனப்பட்டனர்.

## 5. வைசேடிகம்

நையாயிகர் எடுத்துக் காட்டிய உண்மையிலிருந்து கடவுளியல்பு, உலகுயிர்த் தொடர்பு முதலியவற்றை இன்னும் மிகுதியாக அறிந்துகொள்ளவேண்டிய வாழ்க்கை வளர்ச்சி கருதி, கணாதனென்னும் முனிவர் அருத்தாபத்தி என்னும் அளவைக்கொண்டு பின்னும் சில உண்மைகள் அறிவுறுத்தினர். அருத்தாபத்தி என்பது 'பொருளளவை;' இயைபு கருதி ஒன்றன் பொருள் துணியும் அளவை; இடைச்சேரி கங்கைக்கண் உள்ளது என்றால், குடியிருப்பு என்னும் இயைபு பற்றிக், 'கங்கை' என்றது கங்கைக்கரை என்று பொருள் துணியப்படுதல் போல்வது. இங்ஙனம் இயையுபற்றிப் பொருள் துணியும் அளவை முறை கொண்டு கணாதனர் தெரிவித்தவை வருமாறு: 'உயிர்கள் சிற்றறிவுடன் பிறந்து சிறுசெயல்கள் செய்யக் காண்பதனால் அச் சிறுமை யியையுபற்றி அவை வினைக்கு ஈடாகப் பிறந்து இன்ப துன்பம் நுகர்வன என்று நாம் துணியலாம். இன்ப துன்பம் இவ்வுலகத்து நுகர்ச்சியாயிருக்கின்றன. ஆதலால், பிறவியற்ற நிலையில் அவ்விரண்டு உணர்வும் அற்றதோர் உணர்விறந்த நிலையிலேயே உயிர்கள் இருக்கவேண்டுமென்றுந் தெரிகின்றது.'

இவ்வாறு கணாதமுனிவர், மேலும் சில கருத்துக்கள் விசேடமாகக் கூறியதைக் கேட்டோர், அவர் கூறிய அளவே

தங்கொள்கைத் திட்டமாகக் கொண்டு, 'வைசேடிகம்' என்னும் ஒரு தனிக் கொள்கையரானர்.

6. மீமாம்சம்

'சைமினி' என்னுந் தவமுனிவரர், மேலெடுத்துக் காட்டிய வாழ்க்கை விளக்கத்துக்கும், பின்னுந் தெளிவு



நாடி, 'இன்மை' என்னும்

அளவை கொண்டு சில கருத் துக்கள் விளக்கினர்.

'வினைக்கு ஈடாக உயிர்கள் பிறந்து இன்பதுன்பம் அடைகின்றன என்பதனல், செயல் வகையில் தகுதியாகக் கருத்திருத்த வேண்டும் என்று தெரிகின்றது. மறைநூல், செய்தக்க கடமைகளை நன்கு அறிவுறுத்துகின்றது. கடமைகளைச் செவ்வையாகச் செய்யவில்லையானல், வாழ்க்கை விளக்கங் கொள்ளாது. கடமைகள் (கருமங்கள்) தம் பயனைக் கட்டாயந் தரும். விதிப்படி கடமைகள் செய்துவருதல் எல்லா நலங்களையும் விளைக்கும்.

'கடமைகளிற், பயன் கருதிச் செய்யுங் கடமைகள் உலக நலங்களை உண்டாக்கும். பயன் கருதாது செய்யுங் கடமைகள் விடுதலைப் பேறு உதவும். கடமையிற் கருத்

துடையோர்க்குப் பிற எவையுந் தோன்றமாட்டா. அக கண்ணுடையார்க்குப் பிறவெல்லாம் இன்மையே. கடமை கருதுதல் முதன்மை; வாழ்க்கை வீரர்க்கு இங்ஙனங் கடமையில் தெளிவு இன்றியமையாதது.

இவ்வாறு பிறவெல்லாம் இன்மையே யென்னும்படி ஒரு நெறிக்கண் முனைப்புக் கொள்ளுதலாகிய இன்மை யளவைபற்றிச் சைமினி முனிவர் உணர்த்தியதை உணர்த் திய அளவே வரம்பாகக்கொண்டு 'மீமாம்சகன்' நின்றான்.

எனவே, அறுவகைச் சமயவுண்மைகள் இங்ஙனம் வாழ்க்கையின் உட்கூறுகளாயினமை கண்டுகொள்ளப் படும். விளக்கமும் தொடர்பும்பற்றி இங்கே ஒவ்வொன் றிலும் முதன்மையான சிற்சில உண்மைகள் எடுத்துக் காட்டப்பட்டன.

தமிழ் மக்கள் மிகப் பழங்காலத்திலிருந்தே சிறந்த அருட்பெரும் வாழ்வு வாழும் நிறைநல முடையர். மெய் யுணர்வு நுட்பங்களும் உலகுயிர் இறை இயல்புகளும் ஐயந் திரிபின்றித் தெளிய அறிந்த மெய்வாழ்க்கையர். நிறைந்த

வாழ்வுடைய ராதலின், சமயத்தை ஒரு பேச்சுக் கலையாக, வழக்குக் கலையாக, ஆராய்ச்சிக் கலையாக வைத்துக்கொள்ளாமல், வாழ்வே சமயம் என்னுஞ் செயல் நிலையில் நின்ற மோன ஞானியர். இத்தகைய பெரு வாழ்வினர் நிறைந்த நாட்டில், காலந்தோறும் அயல்நாட்டினர் பலர் போந்து நாகரிகம் கற்று நலம்பெறும் இயைபு இயல்பாகவே நேர்ந்தது. அத்தகைய அயலவர்க்கு, அவரை அயலவரென்றே கருதி ஒதுக்கிவிடாமல் அவர் நலம் விரும்பி, அவரவர் தகுதிக்குத் தக்கவாறு தமிழ்ச் சான்றோர், களஞ்சியம்போன்ற தமது பெருவாழ்விலிருந்து படிப்படியாய்ச் சிற்சில உண்மைகளை எடுத்து அறிவுறுத்துதல், கட்டாயமாயிற்று. அறிவுறுத்திய சான்றோர்களின் முழுக் கருத்தையும் அறிந்து கொள்ளாமல் அம் மக்கள் தாங் கேட்ட கேட்ட அளவே வரம்புடையனவாகக் கருதிக்கொண்டு, மேலெடுத்துக் காட்டியவாறு தனித்தனிக் கொள்கையினராயினர். இந்த அறுவகைச் சமயங்களிலிருந்து இன்னும் பற்பல சமயங்களும் கிளைத்துத் தத்தமக்கென ஒவ்வோர் வரம்பு தேற்றிக் கொண்டன. ஆயினும் எல்லாச் சமய விரிவுகட்கும் உரிய அடிப்படை இவ்வறுவகைச் சமய உண்மைகளில் அடங்கியுள்ளன. சங்க காலத்தை யடுத்து நாட்டில் இவ்வாற்றால், சமயங்கள் பலவாகிச் சமயக் கிளர்ச்சிகள் மிகுந்து சமயம் என்பது வெறும் வழக்குக்கும் ஆராய்ச்சிக்கும் உரிய ஒரு கலையாகச் சமய வழக்கர்களால் தாழ்நிலை யெய்தலாயிற்று. சங்ககாலத்தின் இறுதியில் தோன்றிய மணிமேகலை என்னுங் காப்பியத்தில் சமயக் கணக்கர்களின் கொள்கை வழக்குகள் முதன் முதலாக காணப்படுகின்றன. அடிப்படைக் கொள்கைகள் அமைந்த அறுவகைச் சமயங்களைப்பற்றி அந்நூல் கூறுகையில்,

“பாங்குறும் உலோகா யதமே, பவுத்தம்,

சாங்கியம், நையா யிகம், வை சேடிகம்,

மீமாம் சகமாம் ; சமயவா சிரியர்
தாம்பிரு கற்பதி, சினனே, கபிலன்,
அக்கபாதன், கணாதன், சைமினி ;

உகூசு புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

மெய்ப்பிரத் தியம்[1] அனு மானம், சாத்தம்,[2]

உவமானம், அருத்தா பத்தி, அபாவம்
இவையே இப்போது இயன்றுள அளவைகள்
"

என்று எடுத்துக் காட்டுகின்றது. வாழ்க்கை நெறிக் கருத்துக்களை அருளோடு அறிவுறுத்திய ஆசிரியர் பெயர்களும் அவர் அறிவுறுத்தியதிலிருந்து தனித் தனி யென்று கருதப்பட்டுவிட்ட சமயக் கலைகளின் பெயர்களும், அவ்வவற்றின் ஆராய்ச்சிக்குரிய அளவைகளின் பெயர்களும் இவ் வடிகளில் வந்திருக்கின்றன. உண்மையான் நோக்குங்கால், இவையும் இவைபோன்ற பிற கிளைகளும் சமய வாழ்க்கையின் அங்கங்களாகுமே யல்லது, இவைதாமே சமயமாகாவென்பது நன்கு விளங்குவதேயாம். இவை யனைத்தும் ஒருங்கு சேர்ந்ததொன்றே, பேச்சற்ற பெரு வாழ்க்கை நிலையே, உண்மையிற் 'சமயம்' எனப்படு மென்க.

சிவஞானமாபாடியத்தில் ஆசிரியர் சிவஞான முனிவ
ரால், இவ் வுண்மைக்கு எடுத்துக்காட்டாக ஒரு நகைச்
சுவையான கதை கூறப்பட்டது. 'பிறவிக் குருடர் சிலர்
கூடிக்கொண்டு யானை காணும் விருப்பத்தால், அது நின்ற
இடத்திற் சென்று, கையினால் ஒவ்வோர் உறுப்பினைத்
தடவிப் பார்த்து அந்தந்த உறுப்பின் அளவே முழு யானை
என்று எண்ணிக்கொண்டு, அங்ஙனம் பிழைபட எண்
ணிக்கொண்டதுமன்றி, யானை முறம்போல்வது என்றும்.
உலக்கை போல்வது என்றும், மலைபோல்வது என்றும்
தம்முள் மாறுகொண்டு ஒருவரை யொருவர் மறுத்துக்
கலகம் விளைப்பவருமானார். அப்போது அவ் வழியே
சென்ற கண்ணுடையா னொருவன் இக் குருடரின் நிலைக்கு
இரங்கி, 'செவி முதலிய ஒவ்வோ ருறுப்பே பற்றி நீங்கள்
கலகம் விளைவிக்கிறீர்கள்; யானையின் இயல்பு வேறு;
அஃதாவது, இவ் வுறுப்புக்கள் அனைத்தும், இன்னும்
உங்களாற் காணமுடியாமல் விடுபட்டுப் போன பகுதிக

1. பிரத்தியம் - பிரத்தியக்கம்; காட்சியளவை.
2. சாத்தம் - சாத்திரம், உரையளவை.



ளாகிய
மையே

தந்தம் வால் முதலிய அனைத்தும் சேர்ந்த முழு
யானை யென்பது' என்று எடுத்து விளக்கினான்.

விளக்கியும், குருடர் அது தெளியமாட்டாது தாம் தாம் அறிந்ததே மெய்யென்று மேலும் பிடியாய் வழக்கிட்டுக் கண்ணுடையான் கூறிய மெய்யுரையைக் கேளாமையோடு, அவனையுந் தம்மைப்போன்ற குருடருள் ஒருவனுகக் கொண்டு இகழ்ந்து கூச்சலிடுவாராயினர். நிலை தெரிந்து அக் கண்ணுடையான், அவரைப்போல் வீணே தானும் எதிர்வழக்கிட்டுக் கூவாது, தனது ஒளிபெற்ற மலர்ந்த கண்கொண்டு யானையின் முழு எழிலும் நன்குகக் கண்டு அதன் மாட்சிமையில் உணர்வு தோய்ந்துகொண்டு, வாய் பேசாமல் தன் வழியே சென்றுன்' என்பது.

சமயத்தை வாழ்க்கை வடிவிற் கண்டு உணர்வின்பங் கொண்டு பேச்சடங்கி வாழும் பெருவாழ்வினர்க்கும், அவ் வாழ்க்கையின் உட்பிரிவுகளாகிய கருத்துக்கள் சிற் சிலவற்றையே சிற்சில சமயக் கலைகளாக இயற்றிக் கொண்டு அவ் வவற்றையே முழுமையாகக் கருதித் தத்தமக்குள் வழக்கிட்டுப் பிணங்கி யொழியும் வீண் சமய வழக்கினர்க்கும் இடையேயுள்ள வேற்றுமையை இந்தக் கதை தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. இவ் வுண்மை,

“அவத்தை பலவையும் அடக்கி அகிலமும்

அவிழ்ச்சி பெறஇனி திருக்கு மவுனமும்
அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும்
அரற்று வனபொருள் விகற்பம் ஒழிவதும்”

என்னும் அருணகிரிநாதர் திருமொழியில் நன்றாக விளங்கித் தெரிகின்றது. அறுவகைச் சமயங்களிலும் எடுத்துக் காட்டப்பட்ட உண்மைகள் பொய்யல்ல; அத்தனையும் மெய்யே; தழுவத் தக்கனவே; ஆனால், 'அவ் வவற்றின் வரம்பிலேயே சமயம் முழுதும் அடங்கிவிடவில்லை; அவைகளும் அவற்றோடு பொருந்திய பிறவும் சேர்ந்து, சமயம், முழுமையாய் வேறே உள்ளது; அது பேச்சுக்குரிய கலையன்று: பெரு வாழ்க்கையாகிய அருள் வாழ்க்கையே



சொற்பொழிவுகள்

அது' என்பதே இங்கெடுத்துக் காட்டப்படும் உண்மையாகும்.

"அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறுங் குறியது உடைத்தாய், வேதா கமங்களின் குறியி றந்துஅங்கு அறிவினில் அருளால் மன்னி, அம்மையோ டப்ப னாகிச் செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்"

என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருமொழியில் சமயத்தின் இவ் வுண்மைத்திறம் மிகச் சிறப்பாகவும் நன்ருகவும் அருளிச்செய்யப்பட்டுள்ளது. இதன்கண், மெய்வாழ்க்கையின் உட்பிரிவுக் கருத்துக்களே அறுவகைச் சமயக் கருத்துக்களாயினமையின் 'அவ்வவர் பொருளாய்' என்றும், ஆயினும் பெருவாழ்வின் முழுநிலை அச் சமயப் பிரிவுகட்கு வேருந் தன்மை யுடையதாதலின் 'வேருங் குறியது உடைத்தாய்' என்றும், மறை நூல்களின் பேச்சுக்கும் எட்டாத செயல் நிலை யுடையதாதலின் 'வேத ஆகமங்களின் குறியிறந்து' என்றும், இங்ஙனம் சமயமென்பது வெறுங் கலைநிலையாகாது உயிர்களின் அறிவில் அருட் பண்பினுல் நிகழும் வாழ்க்கை நிலையாதலின் 'அறிவினில் அருளால் மன்னி' என்றும், அந்நிலை வீறுடையதும் அவ் வீறும் இயல்பாயிருந்து நிகழ்வதுமாதலின் 'அம்மையோடு அப்பனுகி' என்றும், வாழ்க்கையின் வேருக இவ்வாறு எஞ்ஞான்றும் அது பிரிவதில்லாமல் நிகழ்வதாதலின், 'செறிவொழியாது' என்றும், இதுவே மெய்ஞ்ஞான உண்மையாதலின் 'சிவன் அடி' என்றும், சமயவுண்மையானது இம் முறைமையிற் பொருள் செய்து ஒழுகத் தகுந்ததாதலின், 'சென்னி வைப்பாம்' என்றும் அருணந்திசிவம் விளங்கத் தெளிவுறுத்துவாராயினர். சமயத்தின் பெருநிலையும் மாட்சிமையும் இதனுல் நன்கு தெளிந்துகொள்ளப்படும்.

இங்ஙனம் சங்ககாலம் அருட்பெரு வாழ்க்கையில் நிகழ்ந்தது; தமிழ்நாடு போந்த அயலவரின் வாழ்க்கை வளர்ச்சி கருதி, அவர்கட்குத் தமிழ்ச் சான்ருேர், உண்மைகளின் கூறுகளைப் பையப் பைய எடுத்துக்காட்ட அவை

யெல்லாம் அவ்வவரால் வரம்புடைய தனித்தனிச் சமயக் கலைகளாக் எழலாயின ; அச் சமயக் கலைகளின் முரண் தீர்த்துச் சமய வாழ்க்கையின் முழுவுண்மையையுந் தேற் றும் பொருட்டே பின்னர்ச் 'சைவ சித்தாந்தம்' என்னும் தமிழர் வாழ்க்கை யியலின் மாட்சி, ஆசிரியர் மெய்கண்டா ரால் அருளுடன் அறிவுறுத்தப்பட்டது. சமயத்துக்குப் புறம்பான புறச்சமயத்தார் தம்முள் ஒற்றுமைப்படா ராயின், மெய்கண்டார் வாய் பேசாது தம் வாழ்க்கை நெறியே செல்லுதலன்றி வேறென் செய்வார்? சைவசித் தாந்தம் இங்ஙனம் சமயப் பொதுமையாந் தனி வீறுடை யது. அதன் எழிலே சங்ககாலத்தின் வாழ்க்கையியல்! சங்ககாலத்தின் அருட்பெரும் வாழ்க்கையே சைவசித் தாந்தம். புறநானூற்றில் இவ் வெல்லாவற்றிற்கும் உரிய குறிப்புக்கள் நிறைய உள்ளன.

புறநானூற்றுக் காலம் 'பொருட்

நின்றது.

செழிப்பில்' மிகுந்து

" கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது

கழைக்கரும்பின் ஒலிக்குந்து ;[1]
கொண்டல் கொண்டநீர் கோடை காயினும்
கண்ணன்ன மலர்பூக் குந்து ;
கருங்கால் வேங்கை மலரின் நாளும்
பொன்னன்ன வீசுமந்து."

(புறம். கருஎ)

மேலும், அக்காலத்து மக்கள்,

"மலைபயந்த மணியும் கடறு[2] பயந்த பொன்னும்

கடல்பயந்த கதிர்முத்தமும்

வேறுபட்ட உடையும் சேறுபட்ட தசும்பும்"
(புறம். ௩௭௭)

உடையராயிருந்தனர்.

"தண் துளி பலபொழிந்து எழிலி இசைக்கும்
விண்டு அனைய விண்தோய் பிறங்கல்
முகடுற உயர்ந்த நெல்லின் மகிழ்வாப்
பகடுதரு பெருவளம்" (புறம். ௩௧௧)

1. ஒலிக்குந்து - தழைக்கும். 2. கடறு - காடு.



வாய்ந்து விளங்கினர். "ஏற்றுக உலையே ஆக்குக சோறே" (புறம்: ௧௭௨) எனக் கவலை சிறிதுமின்றிப் பெருமித வாழ்வு வாழ்ந்தனர். இல்லத்துப் பெண்,

"பாணர் ஆர்த்தவும் பரிசிலர் ஓம்பவும்

ஊணொலி அரவமொடு கைதூ வாளே"[1]

(புறம்: ௩௩௪)

இல்லத்து ஆண்,

"பரிசில் பரிசிலர்க்கு ஈய,...
கைதா வானே."

(புறம்: ௩௩௪)

இதனால் நாட்டினர்,

"குணதிசை நின்று குடமுதற் செலினும்

குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்
யாண்டு நிற்க வெள்ளி" (புறம்: ௩௮௬) எனச் செம்மாந்து நின்றனர்.

"ஞாயிற் றெல்லை ஆள்வினைக் குதவி
இரவின் எல்லை வருவது நாடி" (புறம்: ௩௬௬)

இங்ஙனம் திகழ்ந்தனர்.

இத்தகைய செல்வக் களிப்பு மிகுந்த நாட்டிற் 'கலையுணர்ச்சிக்'கும் அறிவாராய்ச்சிக்கும் கூடக் குறையுண்டோ?

“செஞ்ஞா யிற்றுச் செலவும்அஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்

வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமும் என்றிவை
சென்றளந் தறிந்தோர் போல என்றும்
இனைத்தென் போரும்” (புறம்: ௩௦)

1. கைதூவாள் – கையொழியாள்.



இருந்தனர். “ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி”யினர் (புறம்: எ௨) பலர். காட்டில் “இயவரும் அறியாப் பல்வி யம்” (புறம். ௩௩௬) பல கறங்கின.

‘உயிர் நேய மாட்சிக்’கோ
சொல்லவேண்டுவதே

இல்லை. தமிழ்நாட்டுச் சங்ககால அன்பு வாழ்வு, எந்தக் காலத்திலும் எந்நாட்டவராலும் மறக்க முடியாததொன்று. பலர், ஒருவருக்கொருவர் உயிர்விடும் உயிரன்பினர். (புறம்: உகஅ, உஉந, உநரு); "வழுவின்று பழகிய கிழமையர்" (புறம்: உகரு); பொத்தில் நண்பினர் (புறம்: உகஉ) நெஞ்சு மருவிய மறப்பிலாக் கெழுதகையினர்:

"எந்தை வாழி ஆத னுங்க! என்
நெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே

நின்னியான் மறப்பின் மறக்குங் காலை

என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்

என்னியான் மறப்பின் மறக்குவென்"

(புறம்: களஉ)

ஒருவற்கு ஒரு துன்பம் வந்தால் ஓர் ஊரே செயலற்று நிற்கும்; எடுத்தது எடுத்தது, விட்டது விட்டபடி ஆண் பெண் அடங்கலும் உணவும் ஒழிந்து பசித்தபடியே வாடும்:

"கொய்யடகு வாடத் தருவிறகு உணங்க
மயிலஞ் சாயல் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை ஊர்"

(புறம்: நகஅ)

அன்றி, மாய்ந்துவிட்டாலோ பலரும்

தந்நலமிழப்பார்; மல

ருமசூடார :

"இளையோர் சூடார் வளையோர் கொய்யார்......

பாணன் சூடான் பாடினி அணியாள்.........

வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை

முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"

(புறம்: உசஉ)

என்று இங்ஙனம்

பூத்த முல்லையும் வெறுக்கப்பட்டது.

"இம்மை போலக் காட்டி உம்மை

இடையில் காட்சி நின்னொடு

உடனுறை வாக்குக உயர்ந்த பாலே"

(புறம்: உரு௬)

என ஒருவரையொருவர் மறுமையிலுந் தாவி நின்றனர், இவ்வளவு சிறந்த உயிர் நேய ஒருமைப்பாடு புறநானூற்றுக் காலத்தில் வளர்ந்தோங்கியிருந்து எங்கும் அன்பொளி பெருக்கியது.

இனி, அக்காலத்து 'அருளொளிப் பெருக்க'மானது, எக்காலத்தும் நினைவுகூர்ந்து பின்பற்றத் தகுந்த வகையில், தனது கொழுந்தோடிய இயல்பு இனிது தோன்ற, நல் வாழ்க்கை வண்ணமாய் விளங்கியிருந்தது. அறுபான் மும்மை அடியார் தம் அருட்டிறமும், அவரவர் தம் வாழ்க்கை வண்ணமாகவே செய்கையில் விளங்கிப் பயன்பட்டு நமக்கு நன்கு புலப்படுவதாயிற்று. திருவருளியல்பு இறைவனியல் பாதலின், இறைவன் எழுந்தருளியுள்ள நல்லோருள்ளமே அத்தகைய அருளூற்றுக்குரிய தூய இடமெனத் தெளிதல் வேண்டும்:

> "எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
> தம்முயிர்போல் எண்ணி உள்ளே
> ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார்
> யாவரவர் உளந்தான் சுத்த
>
> சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
> இடமெனநான் தெளிந்தேன்; அந்த
>
> வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்
> சிந்தைமிக விழைந்த தாலோ"

என்று சென்ற நூற்றாண்டில் நம்முன் விளங்கிய அருளொளி வள்ளலார் இவ்வுண்மையை நன்கு தெளிவு படுத்தியிருக்கின்றனர். புறநானூற்றுப் பெரியோர் பலர் அத்தகைய இறைநடம் நிகழும் நல்லுள்ளம் வாய்ந்த மேன்மக்களாவர்.

நரைதிரை சிறிதுமின்றி நீண்டகால
வாழ்க்கையராய்
இனிது விளங்கிய பிசிராந்தையார் என்னும்
பற்றற்ற
பேரருட் சான்றோரே,

"ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊர்"
(புறம். ககக)



என்று அருளிச் செய்வாராயின், வேறிதற்குச் சான்றும் வேண்டுமோ? உரைகாரர் இவ்வடிகளுக்கு "யான் இருக்கின்ற ஊரின்கண் நற்குணங்களால் அமைந்து, பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து, 'ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினையுடைய சான்றோர் பலர்' என்று தெளித்தெடுத்து விளக்கியிருப்பது இங்கே நினைவு கூர்தற்குரியது.

தனித்துத் தவம்புரிதலேவிடப், பலர்க்கும் உதவியா யிருக்கும் அருளிரக்க வாழ்க்கையியலே, சிறந்து பெரும் பயன் விளைப்பதென்பதில் அக்காலத்தவர்க்கு உயர் வகை யான தெளிவு திகழ்ந்திருந்தது. மனைவிமாரை இழந்த கணவரும் கணவன்மாரை இழந்த மகளிருமே, பலர்க்கும் உதவியாகிய ஒக்கல் வாழ்க்கை நடத்துவதற்குத் தத்தம் துணை இல்லாத காரணத்தால், தனித்துத் தவம்புரியும் நோன்புநிலை உடையவராயினர். தொல்காப்பியத்தில் இந் நிலைமையே,

> "காதலி இழந்த தபுதார நிலையும்
> காதலன் இழந்த தாபத நிலையும்" (தொல். புறத். உசு)

எனப்பட்டது. தவம் நோற்கும் பாடல்களாக முன் எடுத் துக் காட்டிய புறப்பாடல்களும் (உ௫க-உ) இத்தகைய இழந்தோர் தவநிலையேயாதல், அவை 'தாபத வாகை' என்னுந் துறையின்மேல் இயற்றப்பட்டிருத்தல் கொண்டு தெளிந்துகொள்ளப்படும். இங்ஙனம் ஒருவரை யொருவர் இழவாதபோது, அவரனைவரும், தமது தவ வுணர்வைப் பலர்க்கும், அவ் விழப்பாளர் முதலியோர்க்கும் உதவியா யிருக்கும் அருட்செயல் முகமாகவே, இயல்பாகவும் எளி தாகவும் தானே கொழுந்தோடி வளருமாறு நிகழ்த்தி விளங்கினர்.

> "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
> மற்றை யவர்கள் தவம்"

(குறள், தவம். ௩)

என்று திருவள்ளுவப் பெரியாரும் இவ்
மறையாமல் வெளிப்படுத்தினர். பலர்க்கும்

வுண்மையை
உதவியாகும்



இவ் வருள்வாழ்க்கை காரணமாகவே, தனித்துத் தவம் புரிதல் மங்கல வாழ்க்கையினரால் மேற்கொள்ளப்படாமற் போனமை,

" ஓடி உய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே"

என்று மெய்க்காரணம் புலப்படப் புறநானூறு (கரூ௩) சிறப்பாய் எடுத்து விளக்கிற்று. ஆதலால் வாழ்க்கையின் வழியில் நின்று தவமாட்சி யெய்துதலே முடிவாய் நிலை கொள்வதாயிற்று. சற்று முயற்சியுடையது போலவும் ஒரோவொருகால் பற்று விளைப்பது போலவும் உலகத்தில் வாழ்க்கை கருதப்படுமேனும், இயற்கைப் போக்கும் அதனால் எளிமையும் முடிவிற் பெரும்பயனும் உடைய உண்மை அருளியல் நெறியாய்ப் பயன்பட விளங்கு தலின், இங்ஙனம் முடிக்கப்பட்டது. அறுபான்மும்மை நாயன்மார் முதலிய அருட்சான்றோரும், இந்நிலை தெளிந்தே வாழ்க்கையியல் மேவி அருட்கண்ணராய் விளங்கிப் பயன்படுவாராயினர் என்க. இதனாற், புற நானூற்றுப் பெரியோரின் இயற்கை அருள்வாழ்க்கை மாட்சி இனிது மயக்கமின்றித் தெளிந்து கொள்ளப் படும்.

பிறர்க்கென முயலும்போது, வாழ்க்கை முயற்சிகள், எந்நிலையினும் பற்றின்றித், திருவருள் நெறிக்கண் ஆற்றல் கொள்கின்றன; யாண்டும், பிறரை முனிதலும் அருமைக்கு அஞ்சுதலும் செய்வினைக்கு மனங் கவலலும் இல்லாத, எளிமையினிமைகள் எய்துகின்றன. உலகமும் மாட்சிமை யடைந்து நிலைபெற்று வருகின்றது. புறநானூற்றுப் பெரியோர் பிறர்க்கென முயலும் இவ் வாழ்க்கைத் தெளிவை,

" உண்டா லம்மஇவ் வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவ தஞ்சி

கூ0கூ.

புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்

உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்வு இலர்

அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்

பிறர்க்கென முயலுநர் உண்மை யானே." (புறம்:

கஅஉ)

என்று மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றனர். அப் பெரியோர்களின் அருள்மனப் பெருமைக்கு இந்த ஒரே ஒரு பாடலும் சான்றுதல் போதுமே! 'தனித்து உண்டலும் இலர்; முனிவு இலர்; அஞ்சித் துஞ்சலும் இலர்; உயிரும் கொடுக்குவர்; பழியெனின் உலகும் கொள்ளலர்; அயர்வு இலர்; இங்ஙனந் தமக்கென முயலா நோன்தாள் உடையோர் இருத்தலால் இவ் வுலகம் உண்டு என்னும்படி தொடர்பாக நடைபெறுகின்றது, என்று இத் தெய்வப் பாடல் நமக்கு மெய்ந்நிலை தேற்றுகின்றது. இப்படி, பல பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. புறநானூற்றுப் பாடல்கள் அத்தனையும் இவ் வடிப்படையின்மேல் நின்று பொலியும் மணிமாளிகைகளென்று அறிவார்க்கன்றோ சங்க காலப் பெரியோர்களின் தெய்வப் பெற்றி இனைத்தெனத் தெரியும். இத்தகைய அரிய பெரிய மெய்யுரைகள் அடங்கிய வாழ்க்கை யெடுத்துக்காட்டு நூல், வாழ்ந்தோ ரியல்புகளோடு கூடிய அருமறை அந்தண் நூல், ஒரு நாட்டின் பல்லாயிரக் கணக்கிற் பட்ட வாழ்க்கைச் செவ்வியாகிய ஓவியத்தை இனிது தீட்டும் வரலாற்று மெய்ஞ்ஞான நூல், பழைய செழுநடை உருக்க நூல், அருள் வீர வாகைநூல், வேறே தமிழிலும் இல்லை; பிற மொழிகளிலும் இல்லையே!

சாதல் நீக்கும் அமிழ்தமாகிய அருநெல்லிக்கனியை, இனியதென்று கருதித் தான் தனித்து உண்ணுமல் அதியமான் ஔவைக்கு வழங்கினன் (புறம்: ௯௧). "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம்: ௧௯௨) என்று கணியன் பூங்குன்றனர் எவரோடும் முனிவிலராய் ஒழுகினர். இளையனென்று கருதி ஒரு பகலில் எழுவர் திடுமெனத் தன்மேற் படையெடுத்துவரப் பிறர்க்கெல்லாம்

அச்சம் விளைப்பதாகிய இவ் விடுக்கணுக்குத் தான் சிறிதும் அஞ்சாமலும், மனம் மடியாமலும் இரைக்கு எழுந்த ஒரு புலிபோல வீறிப் பாய்ந்து ஒருதானாகிப் பொருது வென்றான், பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் (புறம்: எசு). தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணன் தன்னிடம் அந் நிலைதவறிய நேரத்தில் வறுமையுற்று வந்த பெருந் தலைச் சாத்தனார் என்னும் அறிஞர்க்கு வேறொன்றும் உதவுவதற்கில்லாமல், தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின், தனது தலைக்குத் தம்பியினிடம் விலையுண் டென்று அறிவித்துத் தன் தலையையே சிதைத்தெடுத்துக் கொள்ளும்படி வாள் தந்து புகழெய்தினான் (புறம்: கசுரு). கோப்பெருஞ் சோழன், தன் மக்கள் இருவரும் அரசு விரும்பித் தன்னிடத்துப் போர் செய்ய வந்தபோது, தான் அவருடன் பொருது அவரைத் தோல்வியுறச் செய்து அரசு முழுதுந் தானே பெறலாமாயினும், தன் மக்களாதலால் அது பழி எனத் தெரிந்ததும்; அப் பழிக்கு அஞ்சித் தானே அதனைக் கொள்ளாது விடுத்தான் (புறம்: உகங). நின் மகன் எங்கே என்று கேட்ட ஒருத்திக்கு, 'என் மகன் எங்கிருக்கின்றானோ தெரியாது; புலி கிடந்துபோன குகைபோல ஈன்ற வயிறோ இது; அவனுக்கும் எனக்கும் உள்ள உறவு இவ்வளவே; அவனைப் போர்க்களத்திற் காணலாம்' என்று சிறிதும் மனக் கவற்சியின்றிக் கடமையில் மகிழ்ந்து விடை கூறினார், காவற்பெண்டு என்னும் வீரத்தாய் (புறம்: அசு).

'பிறர்க்கென முயலுநர் இருத்தலால் உண்டு இவ்வுலகம்' என்று மேலெடுத்துக் காட்டிய புறநானூற்றுப் பாட்டின் கருத்துக்களுக்கு இலக்கியமாகப் புறநானூற்றிலேயே இங்ஙனம் நிரம்பச் சான்றுகள் உள்ளன; போர்ச் செயல்களும் பெரும்பாலும் இங்ஙனம் பிறர்க்கென முயலும் முயற்சிகளால் இருந்தனவெனின், வேறு கூறுவானேன்? பசி என்று தன்னிடம் எவரேனும் வந்தால் உடனே உலகத்தோடு போர் புரிவதற்கு வேல் வடித்துத்



தருமாறு கொல்லனைக் கேட்பானும்
என்பவன் :

ஈர்ந்தூர்கிழான்

" யான்தன் இரக்குங் காலைத் தான்எம்
உண்ணு மருங்குல் காட்டித் தன்னூர்க்

கருங்கைக் கொல்லனை இரக்கும்

திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே "

(புறம்: கஅ0)

என்று ஒரு பெரியார் இவ் வுண்மையைப் புலப்படுத்தினர். அங்ஙனமானல், புறநானூற்றுக் காலத்தின் அருள்மணங் கமழும் மெய்வாழ்வுதான் எவ்வளவு சிறந்தது!

இல்லத்தின் முன்றிலில் தினை உலர்த்தப்பட்டிருந்
தது; வேட்டுவனுகிய தன் கணவன் அலுத்துக் துயின்றான்: அவன் கைவிலங்காகிய பெண்மான்

கண்
அந்த

நேரத்தில் ஓய்வாயிருப்பதறிந்து, ஆண்மான் தழுவி இன்பத்தில் திளைத்திருந்தது. மனைவி,

அதனைத்

"கணவன் எழுதலும் அஞ்சி, கலையே

பிணைவயின் தீர்தலும் அஞ்சி"

(புறம்: ௩உ0)

அத்தனை இரக்க உள்ளத்தோடு சிறிதும் நடமாடாமல் இருந்தாள். முன்றிலில் உலர்த்தப்பட்டிருந்த தினையைக் கானக்கோழியும் வேறு பறவைகளும் தின்று தீர்த்து விட்டதற்கும் அவள் கவலைப்படவில்லை. அவள் உள்ளம் எவ்வளவு அருட்கொழுந்தோடிய மெல்லுள்ளம்!

மற்றோர் இல்லத் தலைவியின் அருஞ்செயல் புறநானூற்றில் பின்வருமாறு கூறப்படுகின்றது; பசியோடு ஓர் இல்லத்துக்கு, அறிஞர், சென்றனர், மனையோள் விரும்பி அவரை வரவேற்றாள். வரகும் தினையும் உள்ளவை யெல்லாம் இரப்போர்க்குப் பசியாற்றி யாற்றித் தீர்ந்துவிட்டன. திருப்பித் தருவதாக அளவு குறித்துக் கடன் வாங்கிக்கொண்டோரும், உற்ற நேரத்தில் தரவில்லை. கடைசியில் அவ் வம்மைக்கு, விதைக்காக ஒதுக்கப்பட்டிருந்த தினைக்கதிர் நினைவுக்கு வந்தது. மிக்க மகிழ்ச்சியோடு அதனை உரல்வாய்ப்பெய்து குற்றியெடுத்து





வல்லவாறு ஆக்கி, அறிஞரை மற்றும் பலரோடு ஊண்பிப்பதாளள். (புறம்: ௩௩௩). இந் நிகழ்ச்சி, திருத்தொண்டர் புராணத்தில் நுவலப்படும் இளையான் குடிமாறநாயனார் தந் துணைவியாரது அருஞ்செயலை நமக்கு நினைப்பூட்டுகின்றது.

“மாது கூறுவள் ‘மற்றொன்றுங் காண்கிலேன்;
ஏதி லாரும் இனித்தரு வாரில்லை;
போதும் வைகிற்றுப் போமிடம் வேறிலை;
தீது செய்வினை யேற்கென் செயல்’ என்று,

செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்

வல்ல வாறமு தாக்கலும ஆகுமற
றல்ல தொன்றறி யேன்'என் றயர்வுற."

என்பது
உள்ளம்

திருத்தொண்டர் புராணம். இனைய மாதரார் எவ்வளவு அருள் வீறு படைத்த நாகரிக நல்லுள்ளம்!

இனிப், புறநானூற்று வாழ்க்கையின்கண் 'அறுவகைச் சமய உண்மை'களும் அமைந்து, மேலும் வாழ்வு விரிந்து அருளில் துளும்பி நின்றமைக்கும் அந் நூலில் நிரம்பச் சான்றுகள் காணலாம்.

உலகத்தை இனிது துய்த்தல் என்னும் 'உலகாயதக் கருத்து,

"தொடியுடைய தோள்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழும் சாந்துநீவினன்.........
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவில் தேர்வழங்கினன்
ஓங்கியல் களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்புதொலைச்சினன்.........
செய்ப வெல்லாம் செய்தன னாகலின்

இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் றலையே."

(புறம்: உங௧)

என்னும் பாட்டில் எவ்வளவோ ஆற்றலாக விளங்கிக் கொண்டிருக்கிறது.

மண் முதலிய உலகப்பொருள்கள் வேறு, வேறு என்னும் 'பௌத்த மத' வுண்மை,

அறிவு

"உணர்ச்சி யில்லோர் உடைமை........
நல்லறி வுடையோர் நல்குரவு" (புறம்: ௧௯எ)

என்னுந் தொடர்களில், உடைமையிருந்தும் அறிவில்லாமையும், உடைமையின்றியும் அறிவிருத்தலும் அமைந்திருக்கும் வகையில், தெளிவாக நிழலாடிக் கொண்டிருக்கின்றது.

"பொறிப்புணர் உடம்பில் தோன்றிஎன்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே." (புறம்: உ௬௬)

என்பதும் இங்கு நினைவுகூரற் பாலது,

மண் நீர் தீ காற்று என்னும் நான்கு பொருள்களே யன்றி வான் என்னும் ஐந்தாவது பொருளும் உண்டு; அவற்றின் மூலமாகிய வேறு மேல்நிலைப் பகுதியும் உண்டு; இவ் வெல்லாவற்றிற்கும் வேறாக, அறிவு விளக்கத்துக்கு ஏதுவான உயிரும் உண்டு என்னும் 'சாங்கிய மதக்' கொள்கை,

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும்என்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை"

(புறம்: ௨)

"வளியிடை வழங்கா வானம்"

(புறம்: ௩௫)

"உயர்நிலை யுலகம் அவன் புக"

(புறம்: ௨௪௧)



"உடம்பொடு நின்ற உயிர்"

(புறம்: ௩௬௩)

“ நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம்”

(புறம்: கஙஉ)

என்னுந் திருமொழிகளில் எதிர்ந்து திகழ்ந்து
கொண்டிருக்
கின்றது.

காலத்தின் உண்மையும், முற்றறிவுடைய
உண்மையுங் கிளக்கும் ‘ நையாயிகர் ’ முடிபு,

முதல்வன்

“ ஞாலங் காக்கும் காலம் ”!

(புறம்: ௫௬)

“ பெரும்புலவர் வைகறைச் சீர் ”

(புறம்: ௬௭)

“ நன்றாய்ந்த நீள்நிமிர் சடை

முதுமுதல்வன் ”

(புறம்: க௬௬)

என்னுஞ் செய்யுட் பகுதிகளில் மிளிர்ந்து
கொண்டிருக்
கின்றது.

உயிர்கள் சிற்றறிவுடையன என்று
தோற்றுதலால்,

முற்றறிவுடைய முதல்வன் ஆணைப்படி அவை தத்தம் வினைக்கு ஈடாகப் பற்பல பிறவிகளில் மாறிமாறிப் பிறந்து இம்மை மறுமை இன்பதுன்பங்கள் துய்த்து, முடிவில் உணர்விறந்ததொரு பெருநிலையில் தம்மை மறந்து நிற்கின்றன என்று 'வைசேடிகர்' துணிந்த பொருளியல்,

"பேதைமை யல்லது ஊதியம் இல்லென
மூன்னும் அறிந்தோர் கூறினர்"

(புறம்: உ அ)

"பெரிய ஓதினும் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவின்
பாடில் மன்னர்"

(புறம்: ௩எ௫)

"சினவல் ஓம்புமின் சிறுபுல் லாளர்" (புறம்:
உ௯உ

"மட்டவர் மெல்லியர் செல்லினும்"

(புறம்: ௪0௬) என உயிர்களின்
களினும்,

சிற்றறிவு சிறுபுன்மை தேற்றுந் தொடர்

" எல்லா உயிர்க்கும் ஏம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோன் "

(புறம்: ௧)

" பொலம்பூங் காவின் நன்னாட் டோரும்
செய்வினை மருங்கின் எய்த லல்லது "

(புறம்: ௬அ)

என உயிர்கள் இறைவன் ஆதரவில் நிற்றல்,
எய்துதல் விளக்கும் மெய்யுரைகளிலும்,

வினைப்பயன்

" இம்மைச் செய்தது மறுமைக் காமெனும் "

(புறம்: ௧௩௬)

" தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும் "

(புறம்: உஎ)

“உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கின் எய்த லுண்டெனின்
தொய்யா வுலகத்து நுகர்ச்சியும் கூடும்

தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பின் இன்மையுங் கூடும்”

(புறம்: உகச)

என இம்மை மறுமை, மாறிப் பிறத்தல்,
முதலியன புலப்படுத்தும் பகுதிகளிலும்,

இன்பதுன்பம்

“இனிதென மகிழ்ந்தன்று மிலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே” (புறம்: கஙஉ)

என உணர்விறந்த பெருநிலை தெளிவிக்கும்
லும் துலங்கிக் கொண்டிருக்கின்றது.

வாய்மொழியி

ஒரு நான்மறை நூலில் நுவலப்படும் கடமைச் செயல்களைக் கடைப்பிடித்து ஒழுகுகவென்னும் 'மீமாம்சகர்' துணிபு,

"ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒரு முதுநூல்
இகல் கண்டோர் மிகல் சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ



மூவேழ் துறையும் முட்டின்று போகிய
உரைசால் சிறப்பின் உர வோர் "
(புறம்: கசுகு)
என்னும் வரிகளில் இலங்கிக்கொண்டிருக்கின்றது.

இனி, இவ் வறுவகைச் சமயக் கருத்துக்கள் அத்தனை யுஞ் சேர்ந்து, மேலும் வாழ்வு விரிந்து ஒவ்வொரு கருத்தி லுந் தெளிவு திகழ்ந்து நிறைவுற்றுச், சமயம் என்னும் மெய் யுணர்வுப் பேறு பண்டைக்காலத்தில் மிக நுட்பமாகவும் திட்டமாகவும் வீறிட்டிருந்தமைக்குப் புறநானூற்றிற் பற் பல குறிப்புக்கள் எங்குங் காணப்படுகின்றன. 'சமய நுட் பங்கள்' என்று, அடுத்தபடி விளக்கப்படும் பகுதியில் இவ் வுண்மைகள் நன்கு துலங்கும். இப்பகுதியிலுஞ் சில எடுத் துக் காட்டிச் செல்லலாம்.

"அணங்குசால் அடுக்கம்" (புறம்: கடுக)

"அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடன் "
(புறம்: கடுஅ)

" கடவுள் ஆலத்து "

(புறம்: கககூ)

எனவும,
" ஆலமர் கடவுளன்ன-நின் "
(புறம்: ககூஅ)
"கடவுள் சான்ற கற்பு" "
"

"உயரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடஞ்சால் மஞ்ஞை அணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்

படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே ”

(புறம்: உகூ0)

எனவும் உலகப் பொருள்களின் விளக்கத்திலும், உயிர்களின் திறத்திலும் யாண்டும் இறைவனொளியை நம் முன்னோர் கண்டு அவ்வவற்றையும் மதித்துப் பயன்பெறும் வகையை இனிது தெளிந்திருந்தனர்.

பற்றற்று வாழ்ந்து, பாம்பு
இன்னல் கொள்ளாது அவர்கள் தம்
சென்றனர் :

தோலுரிப்பதுபோல
உடம்பை விடுத்துச்



“ உரிகளை அரவம் மானத், தானே
அரிதுசெல் உலகிற் சென்றனன் ”

(புறம்: உகூ0)

முழுமுதற் கடவுள் ஒன்றே என்று
தெளிந்திருந்தனர் :

“ பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற்று ஒருவன் ”

(புறம்: கக)

உயிர்கள் பல என்று துணிந்திருந்தனர் :

“உயிர் தவப் பல”

(புறம்: உ௩௫)

உயிர்களைப் பற்றியிருக்கும் மலம், அறியாமையும் (ஆணவம்), மயக்கமும் (மாயை), பற்றுடைச் செய்கையும் (இருவினை) என மூவகைப் பிரிப்பில் அறியப்பட்டிருந்தது:

“அறங்குறித் தன்று பொருளா குதலின்

மருள்தீர்ந்து மயக்கு ஒரீஇ”

(புறம்: ௩௬௨)

“நல்லதன் நலனும் தீயதன் தீமையும்”

(புறம்: உ௯)

அறியாமை தீர்ந்த ஆற்றல் வாழ்க்கையில் முன்னோர் மிக்க முயற்சியும் வெற்றியும் பெற்று விளங்கினர் :

“அறிவு அறிவாகாச் செறிவினை”

(புறம்: ௩0)

“செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்
வேண்டியது விளக்கும் ஆற்றலை”

(புறம்: ௩அ)

“அறவர் அறவன், மறவர் மறவன்,
மள்ளர் மள்ளன்”

(புறம்: ௩௧௧)

" ஆற்றருந் துப்பின் மாற்றோர், பாசறை
உளனென வெரூஉம் ஓரொளி "

(புறம்: ௩0௧)

தமது தகுதியினால் அருஞ் செயல் பல

நிகழ, இருந்தனர்.

" எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழி நிலனே "

(புறம்: ௧௮௭)

" இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னாள்



நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன் "

(புறம்: ௩௩௧)

" உள்ளியது முடிக்கும் உரனுடை யுள்ளத்து
....................வாழ்க்கை " (புறம்: ௨0௬)

" சான்றோர் பல்கிப் பெயல் பிழைப்பு அறியா (புறம்: ௧௧௭)

" பெய்யினும் பெய்யா தாயினும் அருவி

கொள்உழு வியன்புலத்து உழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ று இழிதரும்"
(புறம்: ௧0௫)

இங்கே 'கோடுதோ றிழிதரும்' என்பதற்கு உரையாசிரியர் "அவன் (பாரி வேள்) மலையாதலால், எக்காலமும் அருவி கோடுதோ றிழிதரும் எனப்பட்டது........எனவே, அவன் குணங்கள் தோன்றி நின்றன" என்று எழுதியிருப்பது பெரிதுங் கருத்திருத்துதற்குரியது.

கூற்றுவனும் அணுக அஞ்சுங் குணத்திரு அவருடையது.

"செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினும் உய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே"

(புறம்: உஉ௬)

நுதற் கண்ணுகிய ஞானக்கண்ணின்
மையும் நன்குணர்ந்து மிளிர்ந்தனர்.

ஆற்றலும் பெரு

" கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற "

(புறம்: ருரு)

நுண் ணுடம்பின் விழுப்பமும்
ழுங் கண்டு மாட்சி மிக்கிருந்தனர்.

இயக்கமும் அருட்டிற

புறநா னூறும் சமயமும்

ருகரு

" நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்

காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவர் "
(புறம்: சங)

அறநூலும், மறைநூலும், அருள்நூலும் (அனுபவ நூல்) கண்டு, வாழ்க்கையை அருட்பேரொளியாக்கினர்.

" செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென

அறம்[1] பாடிற்றே"
(புறம்: ௩௪)

"ஆறுணர்ந்த ஒரு முதுநால்"[2]

(புறம்: ௧௬௬)

"திறவோர் காட்சி[3]யின் தெளிந்தனம்"

(புறம்: ௧௯௨)

## எ.
## சமய வாழ்க்கையின் நுட்பங்கள்

அருட்கண்ணாராகிய சமய வாழ்க்கையினர் இயல்பை உற்று நோக்கினல், அவரது நிலை, கடமை யுணர்வு, விரிந்த உள்ளம், பொதுமை நினைவு, உயர்ந்த எண்ணம், எண்ணியது முடிதல், அவாவற்ற நடக்கை, நேர்ந்தது செய்தல், சமநிலை யுள்ளம், உணர்வு வாழ்க்கை, நோயில்லாத வீறு, அருஞ் செயல் நிகழ்வு, மெய்யுணர்வுக் கண், மறைபொருட் காட்சி, ஒரு கடவுளுணர்வு, அடியாரிணக்கம் முதலிய அருட் பண்புகள் வாய்ந்து திகழ்தல் தோன்றும். இடைக் காலத்திலும் பிற்காலத்திலும் எழுந்த அடியார் பெரு மக்களின் வாழ்க்கையினெல்லாம் இந் நுட்ப நிலைகள் கொழுந்தோடியிருக்கக் காணலாம். புறநானூற்றுப் பெரியோர்களுக்கு இச் சமய வாழ்க்கைக்கண், நிரம்ப ஒளி பெற்று நிறைவுடன் யாண்டும் விரிந்து விளங்கி யிருந்தது. அந் நிலைகளை எண்ணுந்தொறும் அச் சான்றோர்களின் விழுப்பம் எவர்க்கும் உள்ளங் கவர்ந்தெழுந்தோங்கும் அரு நிலை யுடையதாய்த் தோன்றும்.

---

1. அறம் - அறநூல். 2. முதுநூல் - மறைநூல்.
3. காட்சி - அருள்நூல்.



## புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

### 1. தலையாலங்கானத்து

அரச முனிவன்,

நெடுஞ்செழியன் - என்னும்

“உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே ; அவரை
அழுந்தப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்

கவிழ்ந்து நிலஞ்சேர அட்டதை
மகிழ்ந்தன் றும் மலிந்தன் றும் அதனினும் இலன்
"

(புறம்: எஎ)

மற்றுத், தனது கடமையைச் செய்யாது வாளா இருந்தவனு
மல்லன் ; தனது 'கடமை' யொன்றையே செவ்வையாகச்
செய்து வெற்றி பெற்ருன்.

2. 'விரிந்த உள்ளத்'தின் இயல்பினைப் பின்வரும் புறநானூற்றுச் (கஙஉ,கஉச, உ0ச, உ0எ, கசுரு) செந்தமிழ்க் கொழுந்துகள் இனிது புலப்படுத்துகின்றன.

" யாதும் ஊரே யாவரும் கேளிர் "
" நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்

பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்

பீடுகெழு மலையற் பாடி யோரே."

" மரங்கொல் தச்சன் கைவல் சிறுஅர்

மழுவுடைக் காட்டகத் தற்றே

எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"

"வருகென வேண்டும் வரிசை யோர்க்கே

பெரிதே யுலகம் பேணுநர் பலரே;
மீளி முன்பின் ஆளி போல
உள்ளம் உள்ளவிந் தடங்காது"
"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்

நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே."

புறநானூறும் சமயமும்

நடகூ

3. 'பொதுமை
ஒருரு சிறந்த நாகரிகக்
நினைவு,' அருளுணர்ச்சியின் மற்
கொழுந்து; அழகிய இவ் வுணர்வு,
"நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்

புல்லிலை எருக்க மாயினும் உடையவை

கடவுள் பேணேம் என்னு வாங்கு,
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே"

என்னும் புறப்பாட்டில் (௧௦௬) ஒரு சிறந்த நன்ருக எடுத்துக் காட்டப்படுகின்றது.

உவமையோடு

4. கண்டீரக்கோப் பெருநள்ளி என்பவன் தோட்டிமலைத் தலைவன்; வேட்டையாடச் சென்றிருந்தான்; திரும்புகாலில், வழியில், பசியோடு களைத்திருக்கும் சிலரைக் கண்டான்; உடனே அவர்களுக்குப் பசியாற்றித் தனது முத்துமாலையையும் கைக்கடகத்தையும் கொடுத்து உதவித், தான் இன்னுன் என்பதைப் புலப்படுத்தாமலே வந்து விட்டான். அவன் 'எண்ணத்தின் உயர்வை' எவ்வாறு பாராட்டுவது? பசி தீர்ந்தோரின் தலைவரான வன்பரணர் என்னும் ஆசிரியன் வாய்மொழிவழி நின்று அவ் வுள்ளத்தின் உயர்வை ஓரளவு, உணர்ச்சிக்களனுல் உணர முயல்வோம்:

"அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மரன் நளிய நறுந்தண் சாரல்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்தல் தொடங்கினே ஞக, வல்லே
பெறுதற் கரிய வீறுசால் நன்கலம்
பிறிதொன் றில்லை காட்டுநாட் டேம்என
மார்பிற் பூண்ட வயங்குகாழ் ஆரம்
மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்

எங்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே"

(புறம்: கடுo)

என்பது அப் பெரியார் வாய்மொழி!

ரு௩கசு புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

5. தக்கோர், தம் 'எண்ணங்கள் எண்ணியவாறே இயல்பின் நிறைவேறிச் செல்லு'தலைத் தம் வாழ்க்கையில் தடையின்றிக் காண்கின்றனர்.

"வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளம்"
(புறம்: உoசு)

என்று இந் நிலை விளக்கப்படுகின்றது. இக் கருத்துக்கு இலக்கியமாக வருஞ் சான்றுகள் புறத்திற் பலவாகும். கழாஅத்தலையார் என்னும் பெரியோரை இகழ்ந்ததனால் அவர் வருந்திய நினைவு, அவ்வாறே இயல்பிற் சென்று இருங்கோவேளின் முன்னோர்க்குக் கேடு பயந்தது (புறம்: உoஉ) போல்வனவும் இங்கு நினைவுகூர்தற்குரியன.

6. புறநானூற்றுப் பெரியோரின் 'அவா அற்ற நடக்கைக்'கு உரிய குறிப்புக்கள் அளவில்லாதன:

"பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருந்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி"

(புறம்: கூஎ)

வாழும் அழகிய வாழ்க்கை அக் காலத்திற் சிறந்திருந்தது.

7. அதியமான் ஒரு காலத்தில் கிடைத்தற்கரிய அமிழ்தத்தை யொத்த கருநெல்லிப் பழத்தைப் பெற்றான். அப்போது ஔவையார் எதிர்ப்பட்டனர்; 'நேர்ந்த அந்த வாய்ப்பை'யே சிறந்ததென்று கருதி, அதனை அவர்க்குப் பயன்படுத்தி மகிழ்ந்தான் (புறம்: கூக). புறநானூற்றுப் புலவர் பெருமக்கள், தாம் இன்னது இவ்வண்ணம் பாட வேண்டுமென்னும் ஒரு குறிப்பு மின்றி, நேர்ந்த நேர்ந்த நிகழ்ச்சிகளில் நேர்ந்த நேர்ந்த வண்ணம் பாட்டியற்றிய அருள் நிகழ்ச்சியாளர்களாய் விளங்குதல் பெரிதுங் கருதற் பாலன. அத்தகைய அருள் நேர்வுப் பாடல்களன்றோ இன்றும் நின்று நிலைக்கும் அழியாப் பெருந்திருவும், நல் லிலக்கியப் பெருநிலையும், எழிலமைவும் வாய்ந்து, நறு மணப் பெருமலர்களாய்ப் பெருகொளித் திருமணிகளாய் நம்முன் விளங்கி மிளிர்கின்றன!

8. சங்ககாலத்தின் 'சமநிலை யுள்ளத்'துக்கு

"..............................வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே, முனிவின்
இன்னா தென்றலு மிலமே"

(புறம்: ககூஉ)

என்பதைப் போன்ற எடுத்துக்காட்டுகள் புறத்திற் பல உள்ளன.

9. வாழ்க்கை, 'உணர்வு வண்ண'மாய் ஆற்றல் கொள்ளுங் காலத்திலேதான், மக்கள், அருஞ்செயல் நிகழ்ச்சிகளும் நுண்பொருட் காட்சிகளும் உடையராய், வாழ்க்கை நலம் மிகுந்து பிறர்க்கும் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றனர். புறநானூற்று வீரத்தாய் ஒருத்தி, தன்மகன் அஞ்சாது படைபோழ்ந்து பொருது தன் கடமையை நன்காற்றி இறந்தனன் என்று கேள்வியுற்று, ஈன்ற ஞான்றினும் பெரிது மகிழ்ந்தாள். அவ்வாறு மகிழ்வதற்கு அவள் எவ்வளவு உணர்ச்சிநிலை மேவியவளாய் இருந்திருக்கவேண்டும்! அந்த உணர்ச்சி அம்மாதின் உடம்பு முழுதும் ஊடுருவிப் பரந்து, அவள் உடம்பின் செந்நீரையும் முலைப்பாலாய் மாற்றியதென்றால், அவள் உணர்ச்சியின் உயர்வும் உண்மையும் வீறும் நமக்கு எவ்வளவு நன்றாகப் புலப்படுகின்றன! அத்தகைய உணர்ச்சியின் பேரெல்லை,

"வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
வாடுமுலை யூறிச் சுரந்தன
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே"

என்று புறநானூற்றில் (உகூரு) இனிதெடுத்துக் காட்டப்படுகின்றது.

"எருதுகா லுரு அது இளைஞர் கொன்ற
சில்வினை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாணர் உண்டுகடை தப்பலின்
ஒக்கல் ஒற்கம் சொலியத் தன்னூர்ச்

சிறுபுல் லாளர் முகத்தவை கூறி

௩௧அ புறநானூற்றுச்

சொற்பொழிவுகள்

வரகுகடன் இரக்கும் நெடுந்தகை
அரசுவரில் தாங்கும் வல்லா ளன்னே"

(புறம்: ௩௨எ) என்னுஞ்
உணர்ச்சி

செய்யுளில் வருகின்ற வல்லாள னொருவனது
யெழில் எண்ணுதொறும் இன்பம் பயப்பதா

மன்றோ!

10. 'நோயில்லாத வீறுபா' டென்பதும், திருவருள் நிலைக்கண் உயர்ந்து நிற்பார்க்குரிய நல்லடையாளங்களுள் ஒன்றாகும். நோய்ப்பால் விளிந்த யாக்கையைப் (கூரு) புற நானூற்றுக் காலத்தவர் தகுதியற்றதாகவே எண்ணினர். பிசிராந்தையா ரென்னும் அருள்நிலையாளர் நெடுங்காலம் நரை திரை நோய் இன்றியே விளங்கினர் (புறம்: கககூ). தக்கோர் வாழ்த்துக்கள் பலவும், 'நோயில்லாமல் வாழ்க' என்றலை ஒரு முதன்மையான குறிக்கோளாகக்கொண்டு வாழ்த்துதலுடையன.

11. தக்க உணர்வாற்ற லுடையோர் செயல்களெல்லாம் இயல்பிலேயே 'அருஞ் செயல்க'ளாய் வீறிடுகின்றன. அவர்கட்குப் பூதப்பொருள்கள் தந் தன்மை மாறி இயல்கின்றன.

"பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"

(புறம்: உசசு)

என்று பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு இவ்வுண்மையை எடுத்துக்காட்டுகின்றனள். பெருஞ்சினத்தில் மூளுங் கொடும் பெரும் போர்களும் உணர்வாற்ற லுடையோர் கூறுஞ் சில சொற்களால் உடனே நின்று விடுகின்றன:

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்

எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே; அதற்கே

ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந் தனவே"
(புறம்: ௩௦௫)



சோழன் கரிகாற் பெருவளவன் புரிந்த நிகரற்ற வீர அருஞ் செயல்கள் பலவும் அருட்பேராற்றலால் நடைபெற்றனவே யாம். இமயம் வரையில் அவனுக்கு நிகராவார் எவருமில்லை. சேர பாண்டிய முடிவேந்தரையும் பதினொரு வேளிரையும் ஒரு களத்தே வென்ற அருள்வீரத் திருவினன் அவன் (புறம்: ௬௬). பழிக்கு ஆளாகாது கோட்பாடு கடைப்பிடித் துப் புகழ் நிறுவிய அருஞ் செயல்களும் புறத்திற் பலவா கும். கோப்பெருஞ் சோழன் பற்றறத் துறந்து வடக் கிருந்த அருநிகழ்ச்சி போல்வனவும் இங்கு நினைவுகூரற்குரி யன (புறம்: ௨௧௬).

"இடஞ்சிறிது ஒதுங்கல் அஞ்சி
உடம்பொடுஞ் சென்மார் உயர்ந்தோர்
மாட்டே"

என்னும் புறச்செய்யுளும் (௩௬௨)
இவ்வியல்பைப் புலப்

படுத்தும்.

12. புறநானூற்றுச் சான்றோரின் 'மெய்யுணர்வுப் போக்கு' நினைதொறும் நம்மைத் தூயராக்கி மேம்படுத்தும் அருநிலை யமைந்தது. அவரெல்லாம்,

"பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்வினாற் பெருங்கொடையர்......
தாழுவந்து தழூஉமொழியர்
பயனுறப்பப் பலர்க்காற்றி
ஏம மாக இந்நிலம் ஆண்டோர்"

(புறம்: ௩௬0)

ஆவர். வாழ்க்கையில் அவர்க்கிருந்த மெய்யுணர்வுக் கண், "நாகத் தன்ன பாகார் மண்டிலம்

தமவே யாயினும் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினும் நோற்றோர்க் கொழியும்...
வாழச் செய்த நல்வினை யல்லது

ஆழுங் காலைப் புணைபிறி தில்லை" (புறம்: ௩௬௨)

எனவும்.

"யானை வேட்டுவன் யானையும் பெறுமே,

குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே;...

மாறிப் பிறவா ராயினும் இமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்இசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தல் தவத்தலையே"

(புறம்: ௨௧௪)

எனவும்,

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்

நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்

உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே"

(புறம்: ௧௮௯)

எனவும் வருகின்ற புறநானூற்றுத் திருமொழிகளில் தெளிந்து திகழ்கின்றது. இங்ஙனம் உலகத்தைப்பற்றிப் பிழிந்த தெளிவு அவர்கட்குச் சிறந்திருந்தது. முற்றிய திருவின் மூவராயினும் அவர்பொருட்டுத் தம் மெய்யுணர்வுப் போக்கை இழவாத சீரியர் அவர் (புறம்: உ0ரு). பிறர் வாழ்தலும் வேண்டிப் பொய்கூறாத மெய்ம்மையர் (புறம்: கஉக).

13. இம் மெய்ந்நிலை யொழுக்கத்தால், அவர்கள் 'மறைபொருட் காட்சி' யுணர்வும் வாய்ந்திருந்தனர். உள்ளந் தெளிந்து நுண்ணியல்பு மிகுந்திருந்தமையால் தொலைவில் நிகழும் நிகழ்ச்சிகளும் அவர்கள் திருவுள்ளக் கண்ணாடியில் படக்காட்சியிற்போல அவ்வப்போதும் நிழலாடி விளங்கின. இருந்த இடத்திலிருந்தே அவரவரும் மறைபொருட் டோற்றங்களைக் கண்டு செயற்கரியன செய்து வந்தனர். தொலைவில் உறையூரில் நடந்த கோப்பெருஞ் சோழனது இடுக்கண் நிகழ்ச்சி, பாண்டி நாட்டுப் பிசிராந்தையார் ருள்ளத்தில் நிழலாடியது. பிசிராந்தையார் உடனே உறையூர்க்கு வந்தார்.



" நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே

எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது துணிதல்

அதனினும் மருட்கை யுடைத்தே, பிறன் நாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி . . .

இனையதோர் காலை ஈங்கு வருதல் ;
வருவன் என்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே"

(புறம். உகள)

என்று இவ் வியத்தகு செயலை அங்கே அருகி லிருந்தோர் நேரிற் கண்டு வியந்தனர். இதுபோலுந் தெளிவு அக் காலத்தில் மிக்கிருந்தது. மகளிரும் அஞ்ஞான்று இத் தகைய 'தருமமோ டியலுஞ் சாயல்'ராய் அறக்காட்சி மிகுந்து விளங்கினர்.

(புறம். ந௫ந)

14. மேலெடுத்துக் காட்டிய அருட்பேறுகட் கெல்

லாம், ஒரு கடவுளுணர்வும், ஒரு குல நினைவுமே உற்ற காரணமாகும். எதனையும் ஒன்றாகக் கருதும்போது உள்ளம் உயர்ந்து ஆற்றல் கொள்கின்றது. “ஒரு தானாகிப் பொருது களத்தடல்” (௭௬) என்பது புறநானூறு. பின்பு, அது பலவாகப் பிரிந்து கிளைகொள்ளுதல் என்பது, பலர்க்கும் பற்பல வகையிற் பயன்முகமாகுஞ் செயல் திறமாகும். இவ்வொருமை பன்மையாகிய உலகியற்கையை உன்னுவோர்க்குக் கடவுள் திறத்திலும் மக்கள் இனத்திலும் யாண்டும் ஒருமையாற்றலும் பன்மைப் பயனும் நன்கு விளங்கும்.

பொருள்களாகிய உலகங்களும், உடம்புகளும் நிலை மாறும் இயல்பின. உயிர்கள் அந் நிலையில் தம்மினும் மேம்பட்டதோர் ஆற்றலைத் தெளிய உணர்கின்றன. எங்கும் ஒரு முறைப்பட்ட அமைப்பையும், செயலையும், ஒழுங்கையும், தலைமைப் பண்பையும் இப் படைப்பு ஒடுக்கங்களிற் காண்கின்றன. அப்போது கதிரவன் இவ் வுலகுக்கு ஒருவனைத் தோற்றுகின்றான்; ஆனால், முறைப்பட்ட

அமைப்பு முதலியன சிறந்த அறிவின் திறங்களல்லவா? ஞாயிறு, அறிவில்லாத பொருளாகிய ஒரு தீயுருண்டை தானே. ஞாயிற்றின் பொருளாற்றல் தக்க அறிவாற்றலின் முன் எம்மட்டு?

"ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்ஙனம் ஒத்தியோ வீங்குசெலன் மண்டிலம்?
பொழுதென வரைதி; புறங்கொடுத் திறத்தி;
மாறி வருதி; மறைமலைத் தொளித்தி;
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே"

(புறம். அ)

என்று ஞாயிற்றின் ஆற்றல் குறைவை எண்ணினர் கபிலர். இனி, உயிர்களும் பலவாய் அவற்றின் அறிவு நிலைகளும் பலதிறத்தவாய்த் தம்மினும் மேம்பட்டதோர் ஒருமையாற்றலில் இணைப்புடையவாய்த் தோற்றுகின்றன. இங்ஙனம் உலகப் பொருள்களையும் உயிர்களையும் இகந்து உயர்ந்து செல்லும் ஒருமையாற்றலுக்கு, நிலைக்களனாயுள்ள ஒரு பெரும் பொருளின் உணர்வு, இதனால் யாண்டும் ஒருமுகமாக உணரப்படுகின்றது. பொருள்களைக் கடவுவதும்,[1] உயிரறிவைக் கடந்துள்ளதுமான இவ்வொரு கடவுளுணர்வே, இவ்வாற்றால், எல்லா ஒருமைக்கும் ஏதுவாகின்றது என்க.

"புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா"

என்னுந் தொடர்களில் இவ் வொருமை யுணர்வோடு இயைந்து கடவுட் பெயரும் வந்திருக்கின்றது. ஒருமை என்பது ஆற்றலுணர்வாதலின், அவ் வாற்றல் விளையும் இடம் இங்ஙனங் கடவுளுணர்வாய், ஒரு கடவுளுணர்வாய், முடிந்து நிற்கின்றது. ஆகவே, கடவுளுணர்வு ஒன்றே உலகத்தில் ஒருமை உண்டாக்கும் மூல காரணம் என்பது. மக்களை ஆற்றலுடையராக்குவது, அக் கடவுளுணர்வே

1. கடவுதல் - இயக்கி நடத்துதல்.





என்க. எனவே, கடவுளுணர்வின்றி உலகத்தில் யாண்டும் ஒருமை நினைவும் ஆற்றலும் இல்லை என்பது முடித்துக் கொள்ளப்படும்.

கடவுளுணர்வின்றி ஒருமை நினைவு இல்லையாயின்,
ஒருமை நினைவின்றி ' யாவருங் நினைவும் இல்லையாமன்றோ ?

கேளிர்' என்னும் ஒரு குல
ஆற்றலாகிய அருளாற்ற
லென்பதும், வாழ்க்கை நுட்பங்க ளென்பதும்,
அஃதாவது
சமய வாழ்க்கைக ளென்பதும், இவ் வாற்றால், ஒரு கடவு
ளுணர்வாலும் அதனாலுண்டாகும் ஒரு குல நினைவாலுமே
மக்கள்பால் அரும்பி மலரும் உண்மை, ஐயந்திரிபறத்
தெளிந்துகொள்ளப்படும்.

“ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி இல்லைநும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்ம்மினே”

என்று மெய்யுணர்வு கைவந்த பேரருட் பெரியாரான திரு
மூலர், மக்கள் உணர்தற்குரிய மூலவுணர்வுகளாக இங்
ஙனம் ஒரு குல நினைவும் அதனையுண்டாக்கும் ஒரு கடவு
ளுணர்வும் தமது திருமந்திர மாமறை நூலில் வடித்து
எடுத்துக் காட்டுதலை, நன்றே நினைந்து அனைவரும்
ஒருமையும் ஆற்றலும் மேவி உய்தல் வேண்டும். உள்
ளத்தே அரும்பி விரியும் இம் மூல ஒருமை இறை
யன்பினை,

“என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடை அன்பே!
என்னுளே விளங்கி என்னுளே பழுத்து
என்னுளே கனிந்த என்னுடை அன்பே!”

என்று நேற்று நம் முன் விளங்கிய திருவருட் பேரொளி வள்ளலார் வாய்மலர்ந்தருளும் ஒருமுக உணர்வு மொழிகளும் இங்கு நினைவுகூரற்பாலன. உண்மை இவ் வாறெல்லாம் இருத்தலாலன்றே,

## ௫௨௪ புறநானூற்றுச் சொற்பொழிவுகள்

" ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கு அன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார் "

என்று சிவஞான சித்தியார் என்னும் மெய்கண்ட அருள் மாமறை, ஒரு கடவுளுணர்வின்றி எல்லா உயிர்களிடத்திலும் அன்புசெலுத்தும் ஒரு குல நினைவு சிறிதும் உண்டாகாமையை நன்கு தேற்றியது.

புறநானூற்றுப் பெரியோர்கள் 'யாவரும் கேளிர்' (புறம். ௧௯௨) என்னும் ஒரு குல நினைவு மிக்க, ஆற்றல் வாழ்ந்த வாழ்க்கைவீறுடையோர் என்றால், அவர்கட்கு, அவ் வாழ்க்கைப்பேறு, இங்ஙனம் ஒரு கடவுளுணர்வால் மலர்ந்து விரிந்திருத்தல் வேண்டுமே யன்றி, வேறு வழியே இல்லை. அமிழ்தமாகிய நெல்லிக்கனியைத் தமக்கு ஈந்த அதியனை நோக்கி அவன் காலத்து அருட்பெருந் தாயாகிய ஒளவையார் கனிந்து கூறும் அரிய வாழ்த்துச் செய்யுள் இங்கே கருதுதற்குரியது :

சாதலை நீக்கும் அமிழ்தமாகிய கனியை ஔவைக்கு வழங்கி, அதியன் அவ் வம்மையினும் விரைந்து சாதலை மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டான். இவ் வரிய செயல், பாற்கடல் எழுந்த அமிழ்தத்தைப் பிறர் உண்டு வாழ வழங்கித், தான் நஞ்சுண்டு நின்ற சிவத்தின் பேருட் செயலோடு ஒத்து நின்றது.

"விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"
(சிலப். வேட்டுவவரி.)

என்னுஞ் சிவத்தின் நிலைத்த இயல்பு, ஔவையார்க்கு உடனே நினைவில் எழுந்தது. அதியனும் அவ்வாறே நிலையாக இருக்கவேண்டுமென்று அவர் திருவுள்ளம் வாழ்த்தக் கருதியது.

பொருள்களாகிய உலகங்களும் உடம்புகளும் நிலை மாறி, உயிர்களும் அவற்றிடையே அலைப்புண்டு திகைத்துக் கிடக்க, அங்ஙனம் நிலைமாறுதலும் தாக்குறுதலும்

என்றும் ஒரு தன்மையாய் நின்று அவ்வுலகுயிர்களின் வியத்தற்குரிய அழகிய நிகழ்ச்சிகட் கெல்லாம் காரணமா யிருப்பது பேராற்றலுடைய ஒரு பெரும் பொருளே என்று துணிந்து அவ்வொருமையில் உள்ளம் இயல்பாகவே அடைக் கலமாதலின், விளங்கிய நிலைத்த இயல்பு கடவுளொரு வர்க்கே உண்டென்பது தெளிவாக விளங்குகின்றது. ஆத லால், அம் முழுமுதற்கடவுளின் நிலைத்த இருப்பைப்போல் அதியனும் நிலைத்து வாழவேண்டுமென்று ஔவையார் வாழ்த்தக் கருதினார். விளங்கிய நிலைத்த வாழ்க்கையை எடுத்துக் காட்டுதற்கு வேறு உவமம் யாண்டும் இல்லை யன்றோ !

ஒருமை ஒருமை யென்று பன்மையையெல்லாம் ஒரு முகப்படுத்திக்கொண்டு பேராற்றலுறும் நிலையில் வந்தால் இறுதியில், தனக்குவமை யில்லானாய் ஒருவனாய் நிலைத்து விளங்குவோன் இறைவனையன்றி வேறில்லை; பன்மை பன்மையென்று அவ்வொருமுக ஆற்றலைப் பலவாக்கிக் கொண்டு பெரும்பயனுறும் நிலையில் வந்தால், அறவாழி அந்தண்மையாய் எல்லாக் கிளைகளிலும் ஊடுருவிப் பிரிந்து பரந்து எழில்கொண்டு நிற்பது அப்பெம்மான் அருளை யன்றி வேறில்லை. தனக்குவமையில்லாத நிலைமைக்கு இறை வனும், அப் பெம்மானது எல்லையில்லாத பேரருளுக்கு அவன் கறைமிடறும் எடுத்துக்காட்டாம்.

ஓர் உவமை கூற நினைந்தால், அதனை உயர்ந்த தொன்

றாகக் கூறவேண்டுதல் மரபாதலின், (தொல். உவ. ௩) அதியமான் அஞ்சியை, அவன் அருட்குணம் விளங்கத் தாராளமாக வாழ்த்த நினைந்த ஔவையார், அங்ஙனம்

வாழ்த்துதற்கு மணிமிடறொடு கூடிய முழுமுதற் பெம்மானொருவனே ஏற்ற உவமம் என்று துணிந்தார். துணிந்து,

> "அஞ்சி! பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
> நீல மணிமிடற்று ஒருவன் போல
> மன்னுக பெரும நீயே"

(புறம். ௯௧)

என்று வாழ்த்தி முடித்தார். இப்படி வாழ்த்தி முடித்த பின்புதான், ஔவையார், ஏதோ தான் செய்யவேண்டிய



பெருங்கடமையைத் தாராளமாகச் செய்து முடித்துவிட்டதாக உள்ளம் அமைதி பெற்றார். ஒரு கடவுளுணர்வு, அக்காலத்தில் எவ்வளவு தீர்ந்த தெளிவு நிலையில், மிக்க பெருமதிப்போடு திகழ்ந்திருந்த தென்பதை இப் புறப்பாட்டு நமக்கு நன்றாகப் புலப்படுத்துகின்றது.

15. ஒரு பெரும்பொரு ளென்னும் முழுமுதற் கடவுள், உலகுயிரெங்கும் ஊடுருவி யிருந்து அங்கங்கும் பயன்படும் எழிலாய் விளங்குகின்றனனாதலின், ஒருமுக உணர்வுக்குத் துவக்கங் கொள்வோர் இவ்வுண்மை அறிந் திருத்தல் வேண்டும். அறியாமைப் பொருள்களில் அப் பெம்மான் திரு திகழ்தலைப் பார்க்கினும், அறிவுள்ள உயிர் களில் அவ்வுயிர்களின் அறிவினில் அருளால் மன்னிச் சிறப் பாக அவன் மின்னுகின்றனன். ஆதலால் அவ்வுயிர்களுள் ளும், தக்க முயற்சியாளர், ஈகையாளர், கலைவிளக்கமுடை

யோர், உயிர் நேயமிக்கோர்,
என்னும் பெருமக்களிடம்,
இறைவன் விளக்கம் நன்கு

அறவோர், அறிவர் சான்றோர்
அவர் அகத்தும் புறத்தும்
எழிலோடிப் பொலிகின்றது.

ஒரு தெய்வ உணர்வின்றி அவரெல்லாம் அத்தகைய செவ் வுள்ளத் திறம் பெறுராகலின், அவர்போன்றாரெல்லாரும் திருத்தொண்டர்களாகிய அடியார் பெருமக்களே யாவர்; சான்றோர் அவருள்ளும் உயர்ந்தவராவர். அத்தகையா ரோடு இணங்குதல், ஒருமைப்பேராற்றலும் பன்மைப் பய னெழிலும் மிகுவதற்கு ஏதுவாகி, அதனால், எல்லார்க்கும் வாழ்க்கை விளக்கங்கொள்ளுகின்றது.

“எலிமுயன் றனைய ராகி உள்ளதம்
வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ......
புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து

உரனுடை யாளர் கேண்மையொடு

இயைந்த வைகல் உளவா கியரோ ”

(புறம். க௯0) / என்று தக்க முயற்சியாளர் முன்னோர்.

இணக்கத்தை வேண்டினர்



“ ஆங்குநின்ற எற்கண்டு
சிறிது நில்லான் பெரிதுங் கூறான்
அருங்கலம் வரவே அருளினன்...தன்மனைப்
பொன்போன் மடந்தையைக் காட்டி இவனை
என்போற் போற்றென் றோனே ; அதற்கண்டு
அவன்மறவ லேனே, பிறர்உள்ள லேனே” (புறம். ௩௯௫)

என்று தக்க உயிர்நேயமிக்கோர் இணக்கத்திலும் முன்னோர் திளைத்திருந்தனர்.

“ பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே

அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே

மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்"

(புறம். உஉக)

என்னுஞ் செய்யுளால், கலைவிளக்க முடையோர், அறவோர், திறவோர், உயர்ந்தோர் இணக்கங்களெல்லாம் புறநானூற்றுப் பெருமக்கள் உடையரென்பது இனிது விளங்குகின்கிறது. புறநானூற்றுக் காலத்தின் சான்றோரிணக்கத்துக்கு, எண்ணுதோறும் இன்பம் பெருக்கும் மிக அழகிய பாட்டொன்று, தக்க எடுத்துக் காட்டாக அந் நூலினிடையே பெருஞ் சுடர் வீசித் திகழ்ந்துகொண்டிருக்கின்றது:

"பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்
சான்றோர் பால ராப" (புறம். உகஅ)

பாடினோரும் பாடப் பெற்றோருமான முச்சங்க காலச் சான்றோ ரென்னும் பன்னூற்றுக் கணக்கான ஒள்ளிய பெருமணிகள், தொடைபுணர்ந்து இணக்கங்காட்டி அருட்காட்சி யளிக்கும் அத்தகைய அழகிய அருவிலை அணிகலனே, ஆ! இன்று நம் உள்ளப் பேழையின்கண் ஒளிமிளிர்ந்து திகழும் புறநானூறு என்க!

---

# கக. புறநானூறும் மொழியும்

[புலவர், ஞா. தேவநேயனார், பி. ஓ எல்.]

## க. முகவுரை

தமிழையும் அதன் இலக்கியத்தையும் செவ்வையா யறியவேண்டின், தமிழின் வரலாற்றறிவு இன்றியமை யாது வேண்டப்படும். இம் முறை ஏனை மொழிகட்கும் ஏற்கும். பழைய ஆங்கில இலக்கண நூல்களிலெல்லாம் முன்னுரையாக ஆங்கிலச் சரித்திரம் கூறப்படுதலை நோக்குக. தமிழும் தமிழரும் தோன்றியது மாந்தன் முதன் முதல் தோன்றிய குமரிநாடே என்பதும், குமரி நாட்டார் வடக்கே செல்லச் செல்ல தமிழ் முதலாவது திரவிடமாயும் பின்பு ஆரியமாயுந் திரிந்த தென்பதும், ஆரியர் தமிழகத்திற்கு வருமுன்பே தமிழர் பிறதுறைகளிற் போன்று மொழியிலும் தலைசிறந்திருந்தன ரென்பதும், பண்டைத் தமிழ் நூல்களெல்லாம் தனித் தமிழ் நடை யினவே யென்பதும், பிறவும், மொழி நூலாற் கண்ட உண்மைகளாம். தமிழ் நூல்களை யாராயாமலே குமரி நாட்டை ஊகித்தறிந்த மேலைக் கலைவல்லார் அதனை லெமுரியா[1] என்றும், காண்டுவானா[2] என்றும் அழைத்தனர். அவர்கள் தமிழ்நூல்களை மட்டும் அறிந்திருப்பின், இது போது, குமரிநாட்டைப் பற்றி ஐயத்திற்கோ மறுப்பிற்கோ எள்ளளவும் இடமிருந்திருக்காது.

---

1. Lemuria.

2. Gondwana.



## ௨. தமிழின் காலப் பகுதி

தமிழின் காலம் கீழ்க்காணுமாறு முப்பெரும் யினதாகும்.

பகுதி

(1) மூதற்காலம் கி. மு. சுமார் 10000—3000.

(2) இடைக்காலம் அல்லது கழகக்காலம்—கி. மு. 3000—கி. பி. 200.

சுமார்

(3) தற்காலம்—கி. பி. 200 முதல்.

இவற்றுள் ஒவ்வொன்றும் பல சிறு பகுதிகளாகப் பாகுபட்டுள்ளது. கழகக்காலம் (1) தலைக் கழகக்காலம், (2) இடைக் கழகக்காலம், (3) கடைக் கழகக்காலம் என முப்பகுதிப்படும். இவற்றுக்கு இடையிடை இடையீடுமிருந்தது. இறையனாரகப்பொருளுரைப்படி, முக்கழகமும் நிலைத்திருந்த காலம் முறையே நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டும் மூவாயிரத் தெழுநூற்றி யாண்டும் ஆயிரத் தெண்ணூற்றைம்பதிற்றி யாண்டுமாக மொத்தம் ஒன்பதினாயிரத்துத் தொளாயிரத்துத் தொண்ணூறியாண்டாகும். குமரிநாட்டின் தொன்முது பழைமையை நோக்குவார்க்குக் கழகக்கால நெடுமையைப் பற்றிய ஐயுறவும் மயக்கமும் அறவே அறுமென்பது திண்ணம்.

புறநானூற்றில் ஒரு சில (௨, ௩௫௮, ௩௬௨, ௩௬௬) செய்யுட்களைத் தவிர, பிறவற்றை யெல்லாம் பாடினாரும் அவராற் பாடப்பட்டாரும் கடைக்கழகக் காலத்தினராதலின், புறநானூற்றின் காலம் கடைக்கழகக் காலமாகும் (கி. பி. 2-ம் நூற்றாண்டு).

## ௩. நூல்வகை

தலைக் கழகத்தாரும் இடைக் கழகத்தாரும் இயற்றின நூற்றுக்கணக்கான பல துறைத் தனித்தமிழ் நூல்க

ளெல்லாம் இறந்துபட்டன. இதுபோது கழக வென்று குறிக்கப்படுபவை கடைக்கழக நூல்களே.

நூல்க
அவற்

றுள்ளும், இலக்கண நூல்கள் காதை நூல்கள் கலை நூல்கள் முதலியன சேர்க்கப்படவில்லை. பதினெண்மேற் கணக்கென்றும் பதினெண் கீழ்க்கணக்கென்றும் இருபாற்பட்டுக் கடைக்கழக நூல்களென்று வழங்கும் முப்பத்தாறும், பெரும்பாலும், காதல் வாழ்க்கை, மறம், போர், அரச வாழ்த்து, நல்லொழுக்கம், வரலாற்றுத் துணுக்கு, ஆகிய ஆறுபொருள் பற்றியவே. மேற்கணக்கில், எட்டு நூல்களை தொகைநூல்களெனப் பிரித்துக் கூறப்படினும், உண்மையில் எல்லாம் தொகைநூலே. எட்டுத்தொகை போன்றே பத்துப்பாட்டும் பல புலவராற் பாடப்பட்டதாகும். பத்துப்பாட்டிலுள்ள பாட்டுக்களெல்லாம் மிக நீண்டிருத்தலாலேயே வேறாகத் தொகுக்கப்பட்டன. "அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே" என்று தொல்காப்பியங் கூறுவதால், நூற்றுக்கணக்கான அடிகள் கொண்டு மிக நீண்டிருந்த தனிச் செய்யுளை (பெரும்பாலும் அகவலை)ப் பாட்டென்று சிறப்பாக முன்னோர் வழங்கியதாகத் தெரிகின்றது.

பதினெண் கீழ்க்கணக்கி னுள்ளும், நாலடியார்

தொகை நூலாம்; ஏனையவே தனி நூல்கள். கடைக்

கழகத்தார் பாடிய பாட்டுக்களிலும் நூல்களிலும் பலவற்றைத் தொகுத்தபோது, பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகிய பதினெட்டுக்கொப்பாகக் கீழ்க்கணக்கையும் பதினெட்டாகத் தொகுத்திருக்கின்றனர். இத் தொகை இருபுற வொப்பு[1] பற்றியது.

அஃதெங்ஙன மிருப்பினும், புறநானூறு ஒரு தொகை நூல் அல்லது தனிப்பாடற்றிரட்டே. புறப்பொருளைப் பற்றிய நானூறு செய்யுட்களைக் கொண்டது புறநானூறு. இன்னா நாற்பது இனியவை நாற்பது முதலிய நாற்பது பாக்களைக் கொண்ட பனுவல்களையும், நற்றிணை நானூறு குறுந்தொகை நானூறு நாலடி நானூறு பழமொழி நானூறு முதலிய நானூறு பாக்களைக் கொண்ட பனுவல்களையும், நாலாயிரக்கோவை நாலாயிர திவ்யபிரபந்தம்

1. Symmetry.



(தெய்வப்பனுவல்) முதலிய நலாயிரம் பாக்களைக்கொண்ட பனுவல்களையும் நோக்குமிடத்து, நாலென்னும் எண் ஏதோவொரு காரணம்பற்றி நூற்செய்யுட் டொகைக்குச் சிறந்ததாகக் கொள்ளப்பட்டதென்பது தெரிகின்றது. அது நால்வகைப் பாவோ நால்வகைக் குலமோ பற்றி யிருக்கலாம்.

## ௬. நடை

பண்டைத் தமிழ் நூல்களெல்லாம் தனித்தமிழ் என்னும் பொதுக்கொள்கைக் கேற்ப, புறநானூறும் தனித் தமிழே. ஆங்காங்கு இரண்டொரு வடசொற்கள் அருகி வந்திருப்பதினால், புறநானூற்றின் தனித்தமிழ்த் தன்மை குன்றிவிடாது. இந் நூலில் வந்திருக்கும் வடசொற்களெல்லாம் இருபது அல்லது இருபத்தைந்தே. இவற்றுள்ளும் ஒருசில தென்சொல்லோ வடசொல்லோ என ஐயுறற்குரியன.

இரண்டொரு வடசொற்கள் இங்கு மங்குமாக அருகி வந்திருப்பதுகொண்டு, புறநானூறு முழுமையுங் கலப்புத் தமிழென்பாராயின், பிறமொழிச்சொல் கலவாத மொழியே உலகத்திலில்லை யென்றும், ஆரியத்திலும் சுட்டும் வினாவும் மூவிடப் பெயரும் போன்ற அடிப்படைச் சொற்களெல்லாம் வேர்நிலையில் தமிழா யிருத்தலின், தமிழ் தனித்து வழங்கினும் ஆரியம் தனித்து வழங்கல் கூடாமை யென்றும் கூறி விடுக்க.

புறநானூற்றுச் செய்யுட்களிற் சில சிதைந்துங் குறைந்து மிருப்பதால், இந்நூற் செய்யுட்களின் அடிச் சிறுமை பெருமையும் சொற்றொகையும் அறிவதற்கில்லை. ஆயினும், இதுபோதுள்ளபடி அடியுஞ் சொல்லும் எண்ணிப் பார்ப்பின், ஒரு செய்யுளின் சராசரி அடித்தொகை பதினெட்டென்பதும், ஓர் அடியின் சராசரிச் சொற்றொகை ஆறென்பதும் தெரியவரும். ஆகவே, ஒரு செய்யுளின் சராசரிச் சொற்றொகை ஏறத்தாழ நூறென்பது பெறப்படும்.

## புறநானூற்றுல் விளக்கப்படும் சொல்லியல் (Etymological)

## நெறிமுறைகளும் உண்மைகளும்

(1) சுட்டடிச் சொற்கள் முதற்காலத்தில் உயிர்
முதல.

எ - டு: ஏம்—ஏமம்—சேமம்=காவல், பாதுகாவல் (1, 3). சேம
வச்சு(102). சேமம்-க்ஷேம (வ). ஒ. நோ: ஏண் - சேண்.

(2) சுட்டுவினுச் சொற்கள் முதற்காலத்தில் நெடின்
முதல்.

எ - டு:
ஆங்கு=அசை (2), அப்படி (24): அதுபோல (35, 106).
ஈங்கனம்=இவ்வாறு (208), ஈது (208).
ஊங்கு=முன் (76, 88, 141).
ஏனோர்=யாவர் (342), யாங்கனம்=எவ்வாறு (849).
யாங்கு=எப்படி (191, 245).

(3) சுட்டெழுத்துக்கள் முதற்காலத்தில் பெயர்ச்

சொல்லாயு மிருந்தன.

எ - டு: அத்தக=அதற்குத்தக (10).

(4) ஒலிக் குறிப்பல்லாச்
காலத்தில் ஓரசைய.

சொற்களெல்லாம் முதற்

எ - டு: ஆர்=உண் (24), ஆரக்கால் (283),
ஆத்தி (338).
ஆல்=ஆடு (116).
உண் (160), உள்=ஊக்கம் (396),
ஊம்=ஊமை (28),
ஊர் (83).

(5) முதற்காலத்தில் ஒரு வடிவே
குப் பொதுவாயிருந்தது.

பல சொல்வகைக்

எ - டு;

செய்=செய்கை (199), பரி=செலவு (14, 146),
அறிவாரா=அறியவாரா (92), நகுதக்கனர்=சிரிக்கத்

தக்கார் (72), இனைகூஉ=வருந்திக் கூப்பிடும்
கூப்பீடு
(44), இனையும்கூவு என்க.
கை (32).
வணங்கிறை=வளைந்த முன்



(6) "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே"
(தொல்).
எ - டு: சுள்—சுடு—சுடர், கள்—கண், எய்யில்—எயில், கண்—
கண்ணி, ஒல்—ஒன்—ஒன்னார், மறு—மறை. குள்—
குட—குடை, வள் — வரி—வரிசை, அண்—அடு—
அடர்—அடவி, இரு—எரு—எருமை, அ—அன்—அனை,
மாறு—மாறே, இரு — இனு—எனு — ஏனை — யானை,
புல் — புள்—புணர், வே—வேகு—வேகம். வேகு—
வெகுள்—வெகுளி, இறு—இறை—இறைஞ்சு, நல்—

நல்கு, ஒள்—ஒளி—ஒளிர்—ஒளிறு,
மரு—மார்—மார்பு,
கள்—களி—களிறு, இரு—இரா—இரவு,
கொள்—
கொடு—கொடி, கொள்—கொண்பு—கொம்பு,
குடி—
குடும்பு — குடும்பி — குடுமி,
புல் — பொள் — போழ்—
போழ்து — பொழுது — பொழுதம், புல் —
பொல் —
பொரு — பொருந் — பொருந்து, பொரு — பொருள்,
வை—வசை, கள்—கரு—கரும்—கரும்பு, கில்—கிள்—
கேள்—கேண்—கேணி, கேள்—கேழல்,
பண்—பாண்—
பாணன், கிள்—கேள், இ—இன்—இனி, புரி
—புரிசை,
வள்—வாள்—வாளை, தீ—தீமை,
புல்—புன்மை, வள்—
வட்கு—வட்கார்.

**அசை நிலைகள்:** அத்தை=அதை, இத்தை=இதை,
மாதோ=
பெண்ணே, மன்னே=அரசே, மதி=
அறிவாகும், அள
வாகும், போதும். ஓர்=உணர்,
ஒரும்—உணரும், ஆயும்.
குரைத்து=பெருமையுடையது. அம்ம=
அம்மையே.

தில் — உள்ளம் (?) கொல் = ஓ (?)
ஓ—வோ—கோ—
கோல்—கொல்.

(7) "மொழிப் பொருட் காரணம்
தோன்று" (தொல்.)

விழிப்பத்

இ - ள்: சொற்களின் வேர்ப்பொருள் பார்த்த அல்லது

கேட்ட

மட்டில் தோன்று. எ - து.

இந் நூற்பாவிற்குப் பல்கலைக்கழக அகராதிப்
பதிப்
பாளர், Tolkappiyar Says that the origin of
words

•

புறநானூறும் மொழியும் ௫௫௫

beyond Ascertainment" என்று
விளக்கங் கூறி
யிருப்பது மிகமிக இரங்கத்தக்கது.

(8) குமரிநாட்டுச் சொற்கள் பல
இறந்துபட்டன.
அதனால், வேர் மறைந்த சொற்கள்
நில்லா.

வேர்ப்பொருள் தாங்கி

(9) ஒரு பொருட்குப் பலகாரணம் தோன்றும்.

பற்றி பல சொல்

எ - டு: கடல்=வளர்ந்தது, பெரியது;

மூந்நீர்=மூன்று நீரை

யுடையது; யானை=கரியது.

கைம்மான்=கையை

யுடைய விலங்கு, வேழம்=கரும்பையும்

மூங்கிலையும்

தின்பது.

[கழை=மூங்கில் (158), கழைக்கரும்பு

(137), கழைதின்

யானையார்—ஒரு புலவர் (204).]

(10) ஒரே காரணம் பற்றிப் பல பொருட்கு அல்லது கருத்துக்குப் பல்வேறு சொல் தோன்றும்.

எ - டு: இறு—இறங்குதல்=வளைதல் (93),

இறைஞ்சுக=வணங்

குக (6). அம்—அம்பு=வாணம்

(வளைவது), ஆம்பி=

காளான். குள்—குடை=வளைந்த

கவிகை, கொடுமை=

வளைவு (39). திரி—திரியாச் சுற்றம் (2).

திருகி=குறுகி.

(27), திருகி—திகிரி (32), புரி—புரி=முறுக்கு (135), புரிசை=மதில் (17), வள்—வளை. வணர்—வளைவு (455), வணங்கு=வளைந்த (32), முள்—முடம் (307).

(11) ஒரு கருத்தினின்று வேறு கருத்துத் தோன்றும்.

எ-டு: கமழ=பரக்க (50), வீசிய=சிதறிய (23), குறும்பு=சிற்றரண், குறும்பரசர், குறும்பரசர் செய்யும் தீமை. செம்மை=சிவப்பு, நேர்மை.

(12) பருப்பொருட் கருத்தும், நுண்பொருட் கருத்துந் தோன்றும்.

கருத்தினின்று நுண்பொருட்
கருத்தினின்று பருப்பொருட்

எ - டு : அதன் தலை=அதற்கு மேலே (19), கவலை=கவர்த்த வழி (3), மனக்கவலை.

முள்—முய்—முயல்—மயல்—மால்—மாலை. துல்—துலாம்=ஒப்பு, தராசு (39).

(13) ஒரு பொருட் சொற்களினின்று ஒத்த கருத்துத் தோன்றலாம்.

எ - டு : பொரு=பொருந்து, போர் செய்; சமம்—ஒப்பு, போர், (14), உறு=பொருந்து, உறுவர்=எதிர்த்தவர் (11), உறழ்தல்=மாறுபடுதல் (22).

உடல்=உடனிருப்பது. உடலுதல்=பகைத்தல் (25), உடலுநர்=மாறுபடுவோர்.

அகல்=விரி, நீங்கு; படர்=விரி, செல். அசை=இயங்கு. வருந்து; சலி=அசை, வருந்து, களை.

(14) பொருள் வேறுபடச் சொல் வேறுபடும்.

எ - டு : மண்—மணல், தலையன்—தலைவன்,

வழிபடு—வழிப்படு.

படிய—படிக்க. தேய்ந்தான்—தேய்த்தான்.

ஈ — வீ—வீழ் — வீழை — விழா — விழவு. வீழ்—விழு — விழும் — விழுப்பம்.

விழுமிய = சிறந்த. வீழ்

விழு. வீழ்=வீழ்து—விழுது. விழு—விழல். விழுந்த மலர். "கானவூகின் கழன்றுகு முதுவீ" (307). 'வீகமழ்' "வீழும்பூ நாறு கின்ற" (36, உரை) விழு—விகு—விகுதி>விக்ருதி (வ), ஒ, நோ. தொழு—தொகு. வீதல் =விழுதல், முடிதல், இறத்தல். விகு + தம் விகுதம்—விகிதம்=விழுக்காடு. விகுதம்=வீதம். வீழ்—வீள்—விள்—விரும்—விரும்பு. விரும்—விருந்து=விரும்பியிடும் உணவு, விரும்பி யூட்டப்படும் புத்தாள், புதுமை. விள — வெள்—வெம்மை — வெய்யோன். வேள்—வேண்—வேண்டு—வேண்டும்—வேண்டாம்—வேண்டா. வேள்—வேட்டம், வேட்டை வேட்டுவன்—வேடுவன்—வேடன்—வேடு. வேள்—வேட்கை. வேள்—வேள்வி, வேளாண்மை, வேளாளன், வேளான், வேள், வேளம். வெள்—பெள்—பெண்—பேண்—பேடு, பேடன், பேடி, —பெள் — பெட்டை — பெடை — பேடை. பெண்—பெண்டு—பெண்டாட்டி. வின்—பிள்—பிண்—பிணு—பிணவு—பிணவல். பிணு—பிணே.



(15) பல்வேறு சொல் திரிந்து ஒருவடிவு கொள்ள.

லாம்.

வான் = ஒளி (196). வால் = வாட்படை (4).
வில்—விள்—

வாள் = ஒளி. வாள் = வெண்மை (6) தூய்மை (1).
பால் = வெள்

ளமுதம். பல் = வெண்முறுவல். வள்—வாள் = வளைந்த
கத்தி.

(16) பொருட்குத் தக ஒலி திரியலாம்.

கறித்தல் = மெல்லக் கடித்தல். கடித்தல் =
வலுவாய்க் கடித்

தல் "மடப்பிணை......வேளை வெண்பூக் கறிக்கும்" (23).

(17) தமிழ் எழுத்துக்களுள் ற ன
பிந்தியவை.

ஒளிர்—ஒளிறு. முரி—முறி.
வாழும்—வாழுமர்—வாழுநர்—

வாழ்நர் (9). பொருநை (II). பொருந (17). அடுநை (36).

ற ன அரிவரி மெய்வரிசையில் வல்லினத்தோடு
சேர்க்கப்

படாமல் இறுதியில் வைக்கப்பட்டிருத்தலை நோக்குக.

(18) தொழிற் பெயர் பகுதியாதலு முண்டு.

எ - டு: நச்சு + ஐ = நசை, நசை வேட்கை = நச்சிய
விருப்பம் (3).

(19) கடைக் கழகக் காலத்திலேயே நுண்பொருட் சொற்களைப் பருப்பொருளில் வழங்கத் தொடங்கிவிட்டனர்.

எ-டு: "சிறு துனி" (366). "பெரும வுரைத்திசின்" (167)

(20) சில சொற்களும் சொல் வடிவங்களும் ளில் அல்லது சில பனுவல்களில் இடம் பெறு.

செய்யு

எ-டு: வண்டி, தூங்கு — சொல்
செய்தால், ஆனல்—சொல் வடிவம்.

(21) ஒரு பொருட் பல சொற்கள்

நுண்பொருள்
வேறுபாட்டின.

எ-டு: கண்ணி—கண் கண்ணைப் பூவைத் தொடுத்துத் தலையிற்
சூடும் தொடை (I).

தார்—மார்பிலணியும் கட்டி மாலை (I).
கோதை—பூ மாலைப் பொதுப் பெயர் (48).
தொடலை—தழை மாலை (271).

ஆரம்—முத்து மாலை (19).
மாலை—மாலைப் பொதுப் பெயர் (95).

(22) ஒரு பொருட்குத் தகுந்த சொல்லை வழங்கல்

வேண்டும்.

உ - டு : "ஞாயிறு........குடகடற் குளிக்கும்" (2).
"அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்" (2).

(23) தமிழ் பெருஞ் சொல் வளத்தது.

கள்.

கல், அறை, குன்று, குன்றம், பொறை, மலை—மலைப்பெயர்
சாரல், கவான், சிமை, குவடு - கோடு, அடுக்கம் - மலைப்பகுதிப் பெயர்கள்.

(24) சொற்பொருள் வழக்கும் பற்றியது.

உ - டு : நாற்றம்—நறுமணம் (70).
சில் வளை விறலி (103), சின்னீர் (154)

(25) வழக்கற்ற சொல்லே அருஞ்

சொல்லாகும்.

எ - டு : யாழ் (த.), — வீணை. திங்கள் (க.)=மாதம்,
நகு, நவ்வு
(தெ.)=சிரி.

(26) இனப் பொருள்கள் பொதுப்
பெயருங்கொ
ளும்.

எ - டு : தாழை=தெங்கு (17).

(27) அயற்சொல் வழங்குதல் கூடாது; வழங்க
நேரின் தமிழுக் கேற்பத் திரித்தல் வேண்டும்.

எ - டு : விஜய (வ.)—விசய (த.).

(28) சொற்களின்
கொள்ளவேண்டும்.

முந்து வடிவம் பார்த்துப் பொருள்

எ - டு : பஞிலம்<பைஞ்ஞிலம் <பைந்நிலம் =
படைத்தொகுதி
(62).
ஒ. நோ : பைந்நிணம்=பைஞ்ஞினம் (177).
விழ்வு <விழா <விழை=விரும்பு.

புறநானூற்றுல் விளக்கப்படும் மொழிநூல்
(Philological)
நெறிமுறைகளும் உண்மைகளும்.

(1) தமிழ் தோன்றியது குமரிநாடே.

"முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே." (9)

(2) தமிழ் வடமொழிக்கு முந்தியது.

மன்பதை—மக்கட் கூட்டம் (210) மன்—man (Lit) 'the *thinking* animal' A. S. *mann*—root *man* to think, Cognate with Ger. and Goth. *man*, Ice. *madhr*.
CH. E. D.—மநு (வ.).
(for mannar)-

காண்—A. S. *cunnan*, to know, E. *cunning*, knowing,
*con*, to study, carefully, A. S. *cnawan*, Ice. *kna*—E. *know*,
L. *gnosco*. Sans. *jna*. காட்சி—ஞானம்.

விழி—L *video* (*vssum*, to see, E *vide*, Sans.—வித்

வேதம்: வைத்யம்,

## (3) தமிழுக்கு வடமொழித்துணை வேண்டுவதின்று.

| வடமொழி | தமிழ் | வடமொழி | தமிழ் |
|---|---|---|---|
| எ-டு: சாபம் | வில் | ஊசி (உதீசி) | வடக்கு |
| நேமி | திகிரி | பாசி (பிராசி) | கிழக்கு |
| வேதம் | மறை | சாதம் | சோறு |

"எவ்வகையினும் திராவிட மொழிகளுக்குள் தலைசிறப்பப் பண்படுத்தப்பெற்ற தமிழ், வேண்டுமாயின், வடமொழித் தொடர்பை அறவே விலக்குவதுடன், தனித்து வழங்குதல் மட்டுமன்று, அதன் உதவியின்றித் தழைத்தோங்குதலும் இயலும்"

(திராவிட ஒப்பியல் இலக்கணம்: முன்னுரை, பக். 50.)

## (4) வடமொழியில் ஒரு பகுதி தமிழே.

உலகம், கலை, காலம், சாயை, மாயை, மீனம், வளையம், படிமை முதலிய எண்ணிறந்த தமிழ்ச்சொற்கள் வடமொழியிற் சென்று வழங்குகின்றன.

(5)
மொழிப்

வடமொழியும் தென்மொழியுமாகிய இரு பொதுச் சொற்கட்குத் தமிழிலேயே வேர் காண முடியும்.

எ - டு: உவ(=வளை)—உலகு—உலகம் — லோக (வ.), கல்—கலை—கலா (வ.) சாய்—சாயை—சாயா (வ.), மாய்—மாயை—மாயா (வ.) மின்—மீன்—மீன (வ.), படி—படிமை—ப்ரதிமா (வ.) வள்—வளை—வளையம்—வலயம் (வலய) (வ.).

வகி—வகிர்—பகிர்—பகர். வ—ப, போலி. ஒ. நோ : வள்—வண்டி—பண்டி. வகி — வகு — வகுந்து=வழி. வகிர்—வகிடு வகு—பகு. வகு—வகை: வகு—வகம். வகு—வகுப்பு. வகு—வகுதி. பகு—பகல்—பகலோன். பகல்—பகர். பகல்—பால். பகு—பகுதி—பாதி. பகு—பகை—பகைவன். பகு—பகவு. பகு—பகம். பகு—பங்கு—பங்கம்—bhanga (வ). பகு—பக்கம்—பக்ஷ(வ.). பகு—பகுப்பு. பகு—பா—பாத்தி. பா—பாத்து—பாது—பாதிடு—பாதீடு, பகுதி—ப்ரக்ருதி (வ.). பங்கு—பங்காளி. பங்கு—பங்கிடு—பங்கீடு. பகு—பாகம்—bhaga (வ.). பங்கு—பங்கி. பங்கு—பங்கறை. பகு—பக்கு—பக்கறை. பக்கு+இசை=பக்கிசை. பகு—பாங்கு—பாங்கு—பாங்கன். பாகு—பாகன்—பாகா (மராட்டி) பாகு—பாகி, பாங்கு—பாங்கர். பாகு—பாகை. பக்கம்—பாக்க[illegible]

(6) வடநாடுகளில் இன்றும் தமிழ்ச் சொற்கள் வழங்கிவருகின்றன.

| | தமிழ் | மராட்டி | தமிழ் | இந்தி | தமிழ் | இந்தி |
|---|---|---|---|---|---|---|
| எ-டு: | தாய் | ஆயி | ஆம் | ஹாம் | மேல் | மே |
| | மாமன் | மாம | மாமன் | மாமா | மாறே | மாரே |

அலை ஹலர்வ் இத்தனை இத்னா
குண்டு குண்ட உம்பர் உப்பர்
வில்லங்கம் விலக கிழான் கிஸான்

முட்டி முட்டி
வெண்டை பிண்டீ
உழுந்து உடத்
பேட்டை பேட் பூ பூல் நரம்பு

நரம்

சிவண் சிவண் முத்து மோத்தி சவை

சபா

(7) ஒத்த காரணத்தால் பல மொழியில் தோன்றலாம்.

சொற்கள் •

புறநானூறும் மொழியும்

நடசஅ

எ - டு: வரி - குதிரை (வேகமாய் ஓடுவது), E. courser, a runner

L. *curro*, to run.

*பழம்—பழன்—பயன்*. E. fruit=effect, result.

*குமரிப்படை, கன்னிப்போர்*. E. maiden =new, first.

virgin, undefiled, fresh, unpolluted.

*தொள்—தோணி—(தோண்டப்பட்டது)*. E. dug out a

boat made by hollowing out the trunk of a tree.

*செய்—செய்யுள்*. E. poem, Lit. 'any thing made

L. poema. Gr. poiema—*Poieo*, to do or make.

*ஒலித்தல்=தழைத்தல்* (50). E. tonic, "a medicine which

gives tone or vigour to the system."

(8) தமிழிலுள்ள பிறமொழிகளில் பொதுப்

சிறப்புப் பொருட் சொற்கள் பொருளில் வழங்கும்.

எ - டு: "ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய."
"அவற்றுள்,
ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே."
"தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே."

"கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே."
(தொல். கஉஎ—கஙo)

ஈ—இச்சு (தெ) தா - L.
*do, to give*; *donum, a gift*, தான(வ)

(9) தமிழ் இயற்கை மொழி.

ஆரியமொழிகளும் தமிழல்லாத திராவிடமொழிகளும் தமிழுக்கு மிகமிகப் பிற்பட்டவையாயிருந்தும், பெரிதும் வடிவு திரிந்தும் வேர்ப்பொருளிழந்தும் பன்னிலையடைந்தும் முன்னிலைக்குப் பின்னிலை வேறுபட்டுமுள்ளன. தமிழோ தலைக்கழகக் காலத்திலிருந்து இதுவரை பெரும்பாலுந் திரியாமல், கி. மு. 2000 போல் இயற்றப்பட்ட தொல்காப்பியத்திலும் கி. பி. 2-ம் நூற்றாண்டினதான புறநானூற்றிலும் இற்றைத் தூய இலக்கிய நடையிலும் சொல்லமைதியும் சொற்றொடரமைப்பும் பெரும்

பாலும் ஒத்ததாய், சிறிது கற்றார்க்கும் ஓரளவு விளங்குவதாய் வேர்ப்பொருள் தாங்கிக்கொண்டுள்ளது.

(10) கடைக்கழகத் தமிழ் தனித்தமிழே. புறநானூற்றிற் சில செய்யுட்களில் இரண்டொரு வடசொற்களே காணப்படுகின்றன. பல செய்யுட்களில் வடசொல்லே யில்லை. (எ - டு; "யாதுமூரே," ககஉ) ஆகையால், நூலின் மொத்தச் சொற்களில் நூற்றுக்கொன்றுகூட வடசொல்லில்லை யென்பது தெளிவு.

(11) கடைக் கழகக் காலத்திலேயே களைகள் முளைத்துத் தமிழ்ச்சொற் பயிர்களைக் தொடங்கிவிட்டன.

வடசொற்
கெடுக்கத்

அஞ்சனம் (மை), ஆயுள் (வாழ்நாள்), ஆவுதி (அவி), இந்திரர் (வேந்தர்), இமயம் (பனிமலை), உதீசி—ஊசி (வடக்கு), எந்திரம் (பொறி, மணை, சூழ்ச்சியம்), கலவம் (பீலி, தோகை), கவுரி (மாயோள், மலைமகள்), சாபம் (வில்), தருமம் (அறம்), தூமம் (நறும்புகை, வால் வெள்ளி, விண்வீழ்கொள்ளி), நிச்சம் (நாளும், என்றும்), நிரயம் (அளறு), நேமி (ஆழி, திகிரி), பங்குனி (உத்தரம்), பஞ்சவர் (ஐவர், பாண்டவர்), பிராசி—பாசி

ரூபம் (கந்து, வேள்வித்தூண்), விசயம் (கொற்றம்,
வேதம் (மறை).
(இருக்கு),
வெற்றி),

இவையே புறநானூற்றில் வந்துள்ள தெளிவான வடசொற்கள். இவை தமிழுக்கு இன்றியமையாதனவோ சிறப்புச் செய்வனவோ அல்ல. இவை, ஆரியர் வடமொழி தேவமொழியென்றும் சமயமொழி என்றும் ஏமாற்றிய பின், சமயம் வாய்க்கும் போதெல்லாம், தமிழர்க்குத் தெரியாதவாறு, தமிழ்ச் சொற்களை வழக்கு வீழ்த்தும் பொருட்டு ஒவ்வொன்றாய்த் தமிழிற் புகுத்தியவை. இவற்றால் தமிழுக்குப் பலவகையிலும் தீமையேயன்றி நன்மையில்லை. அத்தீமைகளாவன :—

(1) தென்சொல் மறைவு.

தமிழ்ச் சொற்க்ட்குப் பதிலாக வடசொற்களை வழங்கவே, முன்னவை முதலாவது வழக்கிறந்தன ;

பின்னர், பண்டைக்

காலத்தில் விரிவான அகராதிகள் தொகுக்கப்படாமையாலும், தொல்காப்பியம் ஒழிந்த தொன்னூல்களெல்லாம் இறந்துபட்டமையாலும், தமிழகத்தின் பெரும் பகுதியான குமரிநாட்டைக் கடல்கொண்டமையாலும், நாளடைவில் தொழிந்தன.

மீட்பற மறைந்

## (2) தென்சொல் வழக்கழிவு.

வடசொல் வழக்காலும், அதனல் தமிழர் யற்றமையாலும்,

தமிழுணர்ச்சி

அடர் (கம்பியாகச் செய்), அடுக்கம் (பக்கமலை), அணங்கு (தெய்வப்பெண், மோகினி), அணல் (தாடி), அல்குபதம் (இட்டு வைத்துண்ணும் உணவு), அழுவம் (மேற்பரப்பு), அளிது (பாவம்), அறத்துரையம்பி, ஆண்டகை (பஹதூர்), இயம் (வாத்தியம்), இயவர் (வாத்தியக்காரர்), இளையன் (ஜவான்), உரறு (கர்ச்சி), ஓவம் (சித்திரம்), உவகைக்கழலுழ்ச்சி (ஆனந்தக் கண்ணீர்),
எருவை (தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து), ஐயவி (வெண்சிறு கடுகு), ஐம்படை (பஞ்சாயுதம்), கண்ணுறை (மேலீடு), கண்ணோட்டம (தாட்சணியம்), கதழ்வு (விரைவு), கணியன் (ஜோதிடன்), கழுவாய் (பிராயச்சித்தம்) கிழார் (பெரும் பண்ணையார்), குணில் (குறுந்தடி, வத்தி), குருசில் (பிரபு), கோய் (கள்முகக்கும் கலம்), சுவல்

(தோள்), சூள் (ஆணை), செம்மல்
(நேர்மையானவன்), செவ்வி (தக்க சமயம்), தோன்றல் (அரச மகன்), நவில் (பன்முறை சொல்லிப்பழகு), நுவல் (நுட்பமாய்ச் சொல்), நெடுமொழி (தற்புகழ்ச்சி மறவுரை), பஞ்சிலம் (Regiment), படைவீடு (Cantonment), பறந்தலை (போர்க்களம்), பூட்கை (tenent, morale), பொருநன் (சிப்பாய்), மன்பதை (Humanity), மதவலி (Sando), பனுவல் (பிரபந்தம்), மறுகு (வீதி), மழவர் (வீரர்), மள்ளர் (வீரர்), மாதிரம் (திசை), யாணர் (புதுவருவாய்), வஞ்சினம் (சபதம்), வயவர் (வீரர்), வல்வில் (வில்வலன்), வம்பலன் (நிலையில்லாதவன், இடமாறி), வேள் (சமீன்தார்), வேளாண்மை (உபசாரம்), முதலிய எண்ணிறந்த
கொழிந்தன.

தமிழ்ச்சொற்கள் வழக்



## (3) தென்சொற் பொருளிழப்பு.

தமிழ்ச் சொற்குப் பதிலாக வடசொற்களை வழங்கியதால், சில தமிழ்ச் சொற்கள் பொருளிழந்து முள்ளன.

எ - டு : உயிர்மெய்.

பொருள்களெல்லாம், உயிர், மெய், உயிர்மெய்யென மூன்று
யடங்கும்.

இவற்றையொத்த எழுத்துக்களும், உயிர், மெய், எனப் (உவமையாகுபெயர்) பெற்றன. 'பிராணி' என்னும் வடசொல் வழங்கவே, 'உயிர்மெய்' என்னுஞ்சொல் தன் பொருளை யிழந்தது.
பிராணனையுடையது பிராணி உயிரை யுடைய மெய் உயிர்மெய்.

(4) ஐயுறவு.

வடசொற்கலப்பால், ஏனுதி, கவசம், சகடு, தானே, தேயம்,
பாரம், புதல்வர், வதுவை வாத்தியம் (வாழ்த்தியம்) முதலிய பல சொற்கள் வடசொல்லோ தென்சொல்லோ என மொழியாராய்ச்சியாளரும் மயங்கற்கிடனுயுள்ளன. வடசொற் கலந்திராவிடின், தமிழிலுள்ள சொல்லெல்லாம் தமிழ்ச் சொல்லேயென்று கொள்ளப்படுமன்றோ!

(5) வடசொற் போன்மை.

வடசொற்கலப்பினால், பல தூய தென்சொற்கள், ஆரிய மொழிகளில் சென்று வழங்குவது காரணமாக, அல்லது ஆரியச் சொல்லோ டொலியொத்தமை காரணமாக, ஆரிய அல்லது வட சொற்களாக ஆராய்ச்சியில்லார்க்குத் தோன்றுகின்றன. இம் மயக்கத்தைத் தீர்க்குமுகமாக, முதலாவது, மேலையாரியத்தில் வழங்கும் புறநானூற்றுத் தமிழ்ச் சொற்களை யெடுத்துக் காட்டுகின்றேன்.

## ரு. மேலையாரியத் தமிழ்ச் சொற்கள்

அமர் - L. *amo,* to love, E. amateur, amiable, amicable ; அளம் - E. *alum* a mineral salt, L. *alumen.* இட்டு - E and Fr. *et, ette,* a dim. suffix; உராறு - E. *roar,* A. S. *rurian,* Ger. *rohren* ; உருள் - E. roll, role, L. *rota,* a whell ; உள்ளு - E.

*will*, A. Ş. *willa*, Goth. *vilja*, Ger. *wille*, L. *volo*, to will Gr. *boule*, will (உள்ளம்); எல் - Gr. *helios*, the sun; எல்லா - E. *all*, A. S. *eal*, Ger. *all*, Gael. *uile*, W. *oll*; கடை - E. *gate*, A. S. *geat*, a way, a gate; காப்பு - Gr. *kryptos*, concealed; கரை - E. *cry* L. *queri*, to ament; கல்லென (கலி) - E. call, A. S. ceallian, Ice. kalla; கவைஇ>கவ - E. *have*, L. *capio*, to contain; கறங்கு - E. *ring* A. S. *hringan*, Ice, *hringia*; காண் - E. con, A. S. cunnan, to know; கால் - L. *column*; கிழி - E. *cleave*, A. S. *cleofan*, Gr. *kliben*; கிளர் - L. *hilaris*, cheerful; கிளை (கேள்) - E. *kin*, A. S. *cyn*, Ice, *kyn*; குப்பை - E. *heap*, A. S. *heap*. Ice, *hopr*, Ger, *haufe*; குரல் (தொண்டை- E. *craw*, *crop*, the throat of a bird, Dut. *crep*, Dan. *kroe*, Ger. *kragen*; Scot, *craig*, the neck; குரல் (கதிர்) - E. *crop*, A. S. *crop*: குரவை - E. *chorus*, L. *chorus*, Gr. *choros*, orig. a dance in a ring: குரூஉ (கனம், திரட்சி) - E. grave, L. *gravis*, heavy, allied to E. *great*, A. S. and Dut. *groot*, Ger. *gross*; குலவு - E. *curve*, L. *curvus*, crooked; குழவி - E. - *cle*, - *cule*, L. *culus*, It. *celli*, *cello*. dim. sfx. கூ - E. *coo*; முழு - E. clew, clue; குழுமு - L. glomns, E. glomerate; குறுக்கு - E. *cross*, Fr. *crois*, L. *crux*. கொடுக்கு - E. *crook*, W. *crwg*, a hook, Ice. *krokr*, Dut. *kroke*, a fold or wrinkle; கொல் - E. *kill*, *quell*, A. S. *qwellan*, to kill; சமம் - E. same, A. S. and Goth. *samana*, L. *similis*, Cor. *homos*, Sans, *samas*; சிதை - L. *coede*, to kill; சுறவு - E. *shark*; சுருங்கு - E. *shrink*, சேர் - L. *sero*, to jain; சூள் - E. *swear*, A. S. *swerian*, Dut. *zweren*, Ger. *schworen*; தா - L. *do*; தீர்மானம் - L. *terminus* a boun dary; திண் - E. *dense*. L. *densus*, thick; துமி. Gr. *temno*, to cut; துர - E. *drive*; A. S. *drifan*, Ger. *treiben*; தூம்பு - E.

*tube*, Fr. and *tubus*.

நரம்பு - E. *nerve* Fr. and L. *nervus*, Gr. *neuron* ; நாகு - E. *nag*, a small horse. நாவாய் - L. *navis*, Gr. *naus*, Sans. *naa* a ship, A. S. *naca*, Ger. *naehen*, a boat, பரிசு - E. *prize* Fr prise பரிதி <பரி - Gr. *peri*, round, பல் - Gr. *polgs* ; பன் - Gr. *pan*, all ; பலகை - E. *plank*, L. *planca* : புள் : E. *fowl*,



A. S. *fugel*. Gr. *vogel*, Ice. *fugl* ; புர - A. S. *beorgen* Ger. *Bergen*, to protect ; புரி - E. *spire*, L. *spira*, Gr. *speira*, any thing wound. புரிசை L. *murus* ; புரை - E. *pore*, L. *porus*, Gr *poros* ; புரையோர் - E. *peer*, an equal, a nobleman, L. *par* equal. பார் - E. *peer*, to appear ; பேய் - E. *fay*, Fr. *fee* ; பொத்து - E. patch, M. E. *Botch* ; பொறு - E. *Bear*, A. S. *Beran*, Goth. *bairen*, L. *fero*, Gr. *phero*, Sans. *bhri* : போர் - E. *war*, A. S. *werre*, O. F. *werre*, Fr. *grerre*, O. Ger. *werra* quarrel : போழ்>பொள் - E. *bore*, A. S. *borian*, Ger. *bohren*, L. *foro*, to bore ; மட்டு<மது, E. *mead*, A. S. *medo*, Ger. *meth*, W. *medd*, Gr. *methu*, Sans. *madhu* மண் - E. *mud*, Low Ger. *mudde*, Dut. *modder* ; மருள் E. *morvel*, L. *miror*, to wonder ; மலே - L. *milito*, to fight, E. military, மார்பு>மருமம் - L. *namma*, the breast ; மன் - E. *many*. A. S. *manig* ; மிகு - E. *much*, A. S. *mic*, Ice *mjok*, Goth. *mikils*. மிசை - E. *mess*. O. Fr.

*mes*; முதிர் - E. *mature*, L. *maturus*,' ripe; முழு - E. *full*, A. S. *full*, Goth. *fulls*, Ice. *fullr*, Ger. *voll*, L. *plenus*, Gr: *pleos*.

மெல் - E. *mellow*, *soft*, L. *mollis*, Dut. *mollig*, A. S. *mearu*, Gr. *molakos*; வரிசை - L. *versus*, a line in writing. E. *verse* a line of poetry. வலம் E. *valour*. Low. *valor*; வலி - L. *valeo*, to be strong. வழி - L. *via*, a way; விடு L. *mitto*, to send; வீங்கு-E. *wax*; A. S. *weaxen*, Ice. *vaxa*, Ger. *wachsen*, Goth . *wahsjan*, Sans. *vakhs*, Zend. *ukhs*; வீழ் - E. *fall*, A. S. *fellan*, Ger. *fallen*; வெரு - E. *fear*; A. S. *foer* வேறு E. *vary*, L. *various*, various.

இனி, பிறகு (back), புகை (smoke), பையுள் (pain) பொறி (Cr. pyr,' fire) வட்டி (vat), வால்-பால் (pale) முதலிய ஐயுறவான சொற்போலிகளும், வாடு (fade) வேண்டு (want) முதலிய போலி யொப்புமைச் சொற்களும் எத்துணையோ உளவென்றறிக.

ஆங்கிலம் பண்டைக்காலத்தே தமிழொடு கலந்திருக்குமாயின், மேற்காட்டிய சொற்களெல்லாம் ஆங்கிலத்தினின்று தமிழுக்கு வந்தவையாகக் கருதப்படுமன்றோ?

அதோடு boy, nation முதலிய சொற்கள்கூட, பையன் நாடு முதலிய சொற்களாகத் திரிந்ததாகக் கொள்ளப்படு மன்றோ! இங்ஙனமே வடசொற்போற்றோன்றும் தென் சொற்களுமென்க.

## ௬. வடசொற் போலிகள்

**அந்தணன் :** அம் + தன் + அன் = அந்தணன். குளிர்ந்த அருளையுடையவன் என்பது

அழகிய
பொருள்.

ஆகவே, துறவி அல்லது முனிவன் பெயராம்.

> "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான்"

என்றார் திருவள்ளுவர். அந்தணர் அரசர் ளர் என்பது பழந்தமிழ்ப் பகுப்பு.

வணிகர் வேளா

இனி, வேதங்களின் அந்தத்தை அணவுவோன்

என்று
பொருள் கூறினும், அந்தணன் என்பது தமிழ்ச் சொல்லே. அணவு - பொருந்து. அண் > அண > அணவு. 'அந்தம்' கீழ்க்காண்க.

**அந்தி :** அல்> அந்து> அந்தம்> அந்தரம். = முடிவு. அல் > அல்கு = முடி, அழி. அல்> அறு. அந்து> அந்தி-பகற் காலத்தின் முடிவு. நெடிற் சுரங்களை அந்தரக் கோல் என்பது இசைத்தமிழ் வழக்கு.

**அமரன் :** அ + மரன் = அமரன். மடி> மரி> மரன். அல்> அ, எதிர்மறை முன்னொட்டு முடி> மடி. இனி, அமரி னால் தேவருலகை யடைந்தவன், எனினும் பொருந் தும்.

**அமயம் :** சமை + அம் = சமையம் - ஒன்றற்குச் சமைந்த வேளை, வேளை. சமையம்> சமயம் - ஆன்மா வீட்டை யடைதற்குச் சமையும் நெறி. சமை> அமை. அமை + அம் = அமையம்> அமயம். சமைதல் - பக்குவமாதல்.



சமைத்தல் = சோற்றைப் பக்குவமாக்கல்.
அமைவு, அமைப்பு, அமைதி.

அமை—

**அமிழ்து :** அவி> அவிழ்> அவிழ்து> அவிழ்தம் = சோறு. சோற்றுப்பால், பால், மருந்து, அன்னப்பால், இரு மருந்து என்னும் வழக்குகளை நோக்குக. அவிழ்து> அமிழ்து> அமுது அவிழ்தம்> அமிழ்தம்> அமுதம், அமுது = சோறு, அமுதம் = சோறு, பால், நீர்.

அவலம் : அ + வலம் = அவலம் அ, எதிர்மறை முன்னொட்டு. வல்> வலம் = வலிமை. அவலம் = துன்புறுதற் கேதுவான வலிமையற்ற நிலை, துன்பம்.

அரசு : அர் > அரி > அரம் > அரசு. அரம் > அரன் = அழிப்பவன், தேவன், சிவன். அரமகளிர் = தேவமகளிர். அரசு + அன் = அரசன் = தேவனைப் போன்றவன், தலைவன். அரசன்> அரைசன்> அரையன்> அரையம். அரசு > அரைசு. அரையன் > ராயன்.
E. roy, அரசு - E. arch ; அரசன் - Gr. archon.

அரசு = அரசு போன்ற மரம்;

பூவரசு = பூவையுடைய

அரசு, ஆற்றரசு = ஆற்றங்கரையரசு.

அவி : அவி = அவிக்கப்பட்ட வுணவு, உணவு.

அவை : அவி> அவிர் = விளங்கு.

டங்கியோர் அல்லது அறிவால்

ஒ. நோ : E. galaxy = the

அவி> அவை = கற்ற

விளங்குவோர் குழு.

Milky-Way, any

splendid assemblage. அவை = அம் = அவையம்.

ஆயுதம் : ஆய் = களை, ஒடி,
தம் > ஆயுதம் = வெட்டுங்

வெட்டு, ஆய் = தம் = ஆய்
கருவி, கருவி, படை,

இலக்கம் (குறி) : எல் > இலகு > இலக்கு இலக்கம் = விளக்கம், விளங்கும் இடம், இடம், குறி, விளக்கத்திற் கெடுத்துக் காட்டு. "எல்லேயிலக்கம்" என்பது தொல்காப்பியம். இலக்கு + இயம் =
இலக்கியம் =
எடுத்துக்காட்டு, குறி. Cf. E. illustrate - L.
illust-



ratum, to light up.
இலக்கியம் என்னுஞ்
நூற்றொகுதியைக் குறிக்கும்
சொல் வேறு. அது இலக்கு

(= எழுது) என்பதன்டியாய்ப் பிறந்தது.
உரகம் : உர = பொருந்து, தழுவு, உரம் = மார்பு.

ஒ. நோ ;

மரு> மருமம்> மார்> மார்பு, மருவு = கல,
உரம்> உரகம் = மார்பினால் ஊர்வது, பாம்பு.

தழுவு.

உரு : உரு = வி, தோன்று; பெ. தோற்றம், வடிவம், வடிவத்தை யுடைய ஒரு பொருள், உடம்பு, ஒரு வடிவத்திற்குள் எழுதப்படும் மந்திரம். மந்திரம் போன்ற பாட்டு. உரு> உருவு> உருவம், உருவு> உருபு = வேற்றுமை வடிவம், உருப்படி = ஒரு தனிப்பொருள். 'உருப்படு,' 'உருக்குலை' முதலிய நூற்றுக் கணக்கான கூட்டுச் சொற்கள் தொன்றுதொட்டு உலக வழக்கில் வழங்குதலையும், உருபு என்பது ஓர் இலக்கணக் குறியீடா இருத்தலையும் நோக்குக.

உலகம் : சுள்> சுல்> சுலம்> சுலவு> உலவு = வளை, சுற்று. சுலம்> உலம்> உலகு> உலகம் = வட்டமா யிருப்பது அல்லது சுழல்வது அல்லது கதிரவனைச் சுற்றி வருவது. உலம் வருவோர் (புறம். 28) = சுழல்வோர். உலா = நகரை வலமாகச் சுற்றி வருதல், ஒ. நோ: கொளா> கோள் = Planet. கொள் = வளை, சுற்று. கொட்பு = சுற்றுகை. கொள்> கொடு> கோடு> கோணு.

**ஏமம் :** ஏ> எம்> ஏமம் = பாதுகாப்பு, இன்பம். ஏ = உயர்ச்சி, 'ஏபெற்றாகும்,' என்பது தொல்காப்பியம். விலங்குகளாலும் பகைவராலும் வெள்ளத்தாலும் துன்பம் நேரும்போது, உயர்ந்த இடம் பாதுகாப்பிற் கேதுவானது. பாதுகாப்பால் இன்பமுண்டாகும். ஏமம்> சேமம், ஒ. நோ : ஏண்> சேண். சேமவச்சு (௧௦௨).

**ஏனாதி :** ஏனை (யானை) + அரி - ஏனாரி—ஏனாதி = யானையைக் கொன்றவன். ஒ. நோ : கோடு + அரி = கோடரி. பருக்கை—பதுக்கை.



**கடும்பு :** குடம்> குடி> குடும்பு> கடும்பு. குடும்பு> குடும்பம். குடி = உடலுள்ளது, உடம்பு போன்ற வீடு, வீட்டு வாழ்க்கை, வீட்டிலுள்ள மனைவி, மனைவி மக்களாகிய குடும்பம், குடும்ப மரபு, குலம், ஒரு குலம் வாழிடம், ஊர், கடும்பு = குடும்பம், சுற்றம்.

**கணன் :** கல்> கள்> களம்> கணம், கணன் = கூட்டம்.

**கந்தம் :** கல்> கந்து> கந்தம்> கந்தன் = ஆன்மாக்கட்குக் கற்றூண்போற் பற்றுக்கோடானவன், முருகன். கந்தழி = பற்றுக்கோடற்ற கடவுள்.

கந்தபுராணத்திற் கூறப்பட்டுள்ளபடி, கந்தன் இமயமலைச் சரவணப் பொய்கையிற் பிறந்தவனல்லன்.

இமயமலை தோன்றியதற்கு முன்பே குமரிநாட்டில் குறிஞ்சித் தெய்வமாக வணங்கப்பட்டவன். முதற் காலத்தில் முருகனுஞ் சிவனும், ஒருவனே. திணை மயக்க மேற்பட்ட பின், முருகன் முழுமுதற் கடவுளாகவும் வணங்கப்பட்டான்.

**கம்மியன்:** கடு — கரு. கடு - கடி - கரி. கடுத்தல் = மிகுதல். கருத்தல் = தோன்றுதல். கரித்தல் = மிகுதல். மிகுதற் கருத்தினின்றும் தோன்றற் கருத்தினின்றும் செய்தற் கருத்துத் தோன்றியதாகத் தெரிகின்றது. ஒ. நோ: E. make, from *L. magnus*, great அலம் + கரி = அலங்கரி = அழகு செய். கரு கரி என்னுஞ் சொற்கள் செய்தற் பொருளில் வழங்கிய நூல்கள் இறந்துபட்டன. பண்டைக்காலத்தில் விரிவான

அகராதிகள் எழுதப்படாமையால், குமரி நாட்டுச் சொற்களில் பலவற்றைக் காட்டுவதற்கு ஒரு வழியுமில்லை. கரி + அணம் = கரணம் = செய்கை, செய்யும் சடங்கு, மணச்சடங்கு,
வரி + அணம் = வரணம்.

செய்யுங் கருவி. ஒ. நோ;
கரு + வி = கருவி. கரு + மம்

= கருமம். ஒ. நோ: பரு + மம் = பருமம். கரணம்—காரணம். கரி + இயம் = கரியம்—காரியம். ஒ. நோ: கண்டம்—காண்டம். கரு—க்ரு (வ). ஒ. நோ: துர—



த்ரு (வ). கருமம் = செய்கை, தொழில், வினைப்பயன் செயப்படுபொருள். கருமம் என்பது முதலாவது உழவுத் தொழிலையும் பின்பு கைத்தொழிலையுங் குறித்தது. கருமம் — கம்மம் — கம். கம்மவார் = தெலுங்குழவர். கமக்காரன் = உழவன். கம்மி = தொழிலாளி. கம்மாளன் = ஐவகைக் கொல்லருள் ஒருவன். கம்மியம் கைத்தொழில், கம்மாளத்தொழில். கம்மிய நூல் = சிற்ப நூல். கம்மியன் = தொழிலாளி, கம்மாளன், நெய்பவன். கருமகன்—கருமான்—கருமன் = கொல்லன். கருமகன் என்னும் பெயரில் கரு என்பது தொழிலையாவது இரும்பையாவது குறிக்கும்.

மாரியல்லது காரியமில்லை யாதலால், கருத்த மேகம் கருவி எனப்பட்டது என்று கொள்வதும் ஒன்று.

கரகம்: குடம் > குடகம் > குரகம் > கரகம் = வளைந்த அல்லது குவிந்த நீர்க்கலம், ஒ. நோ: முயங்கு—மயங்கு, முயல்—மயல், குடம்—கடம், குடும்பு—கடும்பு, முடி—மடி.

கரு

: கரு—கருப்பு—கருப்பம்—garbha. மேகம் சூல் கொண்டபோது கருத்திருத்தலால், சூல் கருவெனப் பட்டது.

**கவசம் :** கவி> கவசம்.

**கவரி :** இஃதொரு விலங்குப் பெய ராதலானும், வேறு பெயர் தமிழி லிதற்கின்மையானும், இது தமிழ்ச் சொல்லென்றே தெரிகின்றது. கவரி> சவரி> சவரம் > சமரம்> சாமரம்.

**களம் :** மேற் கூறப்பட்டது.

**காதல் :** கா + தல் = காதல். கா என்னும் சொல் விருப்பு என்னும் பொருளில் குமரி நாட்டில் வழங்கியதாகத் தெரிகின்றது. கவர்—கா "கவர்வு விருப்பாகும்" (தொல். சொல்.)



**காமர் :**

கா + மம் = காமம்> காம். காமம்> காமர்—காம் + மரு = காமரு> காமர் என்றுமாம்.

**காயம் :** கள் > களம் > கயம் = கருப்பு. கயம் > காயம் + கரியவான். கரிய இருளை இருட்டுக்கயம் அல்லது இருட்டுக் கசம் என்பது உலகவழக்கு. தொல்காப்பியத்தில், காயம் என்னும் வடிவே ஆகாயத்தைக் குறிக்க வந்துள்ளது. கருப்பென்னும் பொருளிலேயே கயம் என்னும் சொல் இருள், குளம், யானை என்பவற்றைக் குறிக்கும்.

**காலம் :** கால் = சிந்து, நீள், (வி); நேரம் (பெ.)

" வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்வு நெடுமையுஞ் செய்யும் பொருள "
(தொல். சொல். அ0க)

என்பதனோடு ஒப்பு நோக்குக.

நீண்டு செல்லும் பொருள்களெல்லாம் தமிழிற் கா லெனப்படும். கால் + அம் = காலம் > காலன். கால் + ஐ = காலை. செய்தக்கால்—கால், வினையெச்ச விகுதி.

**காளாம்பி :** காளம் + ஆம்பி = காளாம்பி.

கள்—களம்—
காளம = கருபபு. கள—களவு = கருபபு, மறைவு.

களம்—களங்கு—களங்கம் = கருப்பு, கறை, குற்றம். கள்—கள்ளம் = கருப்பு, கரவு, திருட்டு. கள்ளம்—கள்ளன். காளம்—காளி = கருப்பி, மாயோள். கள்—கரு—கார்.

**குடி :** மேற் கூறப்பட்டது.

குடம்: சுள்> குள்> குள> குழ> குட> குடம்=வளைந்த அல்லது குவிந்த கலம். குடம்> குடவன்> குசவன்> குயவன். குடம்> குசம்> குயம்=வளைவு. குடம்> கடம் (வ.).

குணக்கு: குடம்> குணம்> குணக்கு=வளைவு. கதிரவன் முதலிய வளையுங் கிழக்கு. இனி, கொள்> கொண்டல்> குணக்கு> குணம்> எனினுமாம்.



குமரி: கும்> கொம்> கொம்மை=திரட்சி. கும்> குமம் > குமர்> குமரி (இ, பெண்பால் விகுதி)=திரண்டவள், இளம்பெண்; கன்னி, கன்னியாகக் கருதப்படும் காளி. Cf. E virgin, from Gr. orgao to swell. குமர் + அன் = குமரன்—திரண்டவன், இளைஞன், முருகன். குமரி வணக்கம் ஆரியர் வருமுன்பே தமிழ் நாட்டில் இருந்தது.

குரூஉ: "குருவுங் கெழுவு நிறனா கும்மே"

என்பது தொல்காப்பியம். குருதி, குருதிக் காந்தள் (செங்காந்தள்), குருதிவாரம் (செவ்வாய்க்கிழமை) முதலிய சொல்லையும் வழக்கையும் நோக்குமிடத்து, குரு என்பது செந்நிறம் என அறியப்படும். சிவபெருமான் நிறம் செம்மை யென்றும் அவன் ஆசிரிய வடிவில் ஆன்மாக்களை ஆட்கொள்வானென்றும் நூல்கள் கூறுவதாலும், ஆசிரிய

னுக்கு குரு குரவன் என்னும் பெயர்களுண்மையானும், குரு என்னும் நிறங்குறித்த சொல்லே குரவன் என்று திரிந்து ஆசிரியன், பெரியோன் என்று பொருள்பட்ட தெனத் தோன்றுகின்றது. குரு என்னும் சொல்லும் ஆசிரியனைக் குறித்தலால், அது பண்புப் பெயராகும் போது பெருமை என்று பொருள்படும். பெருமை என்பது பருப்பொருளும் நுண்பொருளுமாகிய வடிவு நிலையிரண்டற்கும் பொதுவாதலின், கனம் என்னுஞ் சொல் மதிப்பையும் நிறையையுங் குறித்தாற்போலக் குரு என்னுஞ் சொல்லும் பெருமையையும் நிறையையுங் குறிக்கு மென்க.

குரு > Sans. guru. L. gravis. > E. grave, weighty
குரூஉ அளபெடை.

**கூடகாரம்;** கூடு—கூடம். ஆர்—ஆரம்—வட்டம். : கூட வாரம்—கூடகாரம். கூடாரம். ஒ. நோ: கொட்டாரம்.

**கோன்:** கோ = பசு. கோ + அன் = கோவன் = கோன் > கோனான். கோவன் = இடையன், ஆக்களை இடையன் காப்பதுபோல் மக்களைக் காக்கும் அரசன், உயிர்க





ளாகிய ஆக்களைக் காக்குங் கடவுள் (சிவன்). இவை ஆரியக் கருத்துக்களல்ல. இவற்றைத் தமிழரிடத்தி னின்றே ஆரியர் அறிந்தனர். பண்டைத் தமிழர் செல்வத்தை மாடென்றமையானும், இயற்பெயர்

சினைப்பெயர் சினைமுதற்பெயர் முறைப்பெயர் என்னும் நால்வகையில் மக்கள் பெயரையே மாடுகட் கிட்டு வழங்கியதாலும், அவர்கள் மாடுகளை மக்களைப்போற்

பேணியமை விளங்கும்.

கோன்> கோ = அரசன்.

**கோடி:** கோடு> கோடி = கடைசி, கடைசி யெண்.

**சடை:** சடசடவென்றிருப்பது சடை. சடசடவென்பது ஒரு விறப்புக் குறிப்பு. சடையன் சடைமுனி என்பன தொன்று தொட்டு வழங்கும் தமிழ்ப் பெயர்கள்.

**சமர்:** சமம்> சமர்> சமரம்.

சமர்> அமர். சமம் = ஒப்பு. கலப்பு, போர். ஒ.

நோ: பொரு> போர்.

**சாடி:** சால்> சாடி.

**சுரம்:** சுள்> சுர்> சுரம் = சூடு,

காய்ச்சல், பாலைநிலம்.

**சூர்:** சுர் > சுரம் = சூரம்> சூரன் > சூர், சுர் > சூர் நெருப்பாலுண்டாகும் அச்சம்.

ஞமன்: சமன் > (யமன்) > நமன் > ஞமன்
யுள்ள கூற்றுவன். யமன்> எமன்.

= நடுநிலை

ஞாயிறு: நய> நாயன் > நாயிறு> ஞாயிறு = கோள்களுக்குத் தலைவன். நாயன் = விரும்பப்படத்தக்க தலைவன்.

ஒ. நோ: நம்பு> நம்பன். "நம்புமேவு நுவலும் விழைவே," என்பது தொல்காப்பியம்.

நசையா

தவம்: தபு + அம் = தபம்> தவம் = கெடுத்தல், நீக்குதல், பற்றறுத்தல். நீத்தார், துறவு என்னுஞ் சொற்க

ளின் பொருளை நோக்குக. தவிர்,
என்பன தவம் என்பதோடு
சொற்கள்.
தவத்து (நீக்கு)
தொடர்புடைய

நடுநூ

தாயம் : *தா > தாய் > தாயம் = பெறும் உரிமை, உரிமை.

தாயினிடத்தினின்று

திசை : திக்கு > திகை > திசை = திகைப்பிற்கிடமான எல்லை திக்குத் திக்கென்றிருக்கிறது. திக்குமுக்காடல் முதலிய வழக்குகளை நோக்குக. திசைத்தல் = திகைத்தல். திசைச்சொல் என்பது ஓர் இலக்கணக் குறியீடு.

திரு : 'திருவென்னுஞ் சொல் தென்சொல்லே' யென்னும் எனது 'செல்வி'க் கட்டுரையைப்

பார்க்க.

திருமகள், திருமணை, திருமால் திருவில் திருவரங்கம் முதலிய பழைமையான சொற்களை நோக்குக. திரு— ஸ்ரீ = சீ.

தீ : தேய் > தே > தீ = உரசுதலாலுண்டாகும்

நெருப்பு. துலாம் :

துல் > துன் = பொருந்து, பொருத்தித் தை. துல் > துலை = பொருத்தம், ஒப்பு, இரு புறமும்

ஒத்த

தராசு. துல் > துலா > துலாம் >

துலான் = தராசு, ஓர்

எடை, துலா + கோல் = துலாக்கோல். துலா = துலாக்
கோல் போன்ற ஏற்றம். கைத்துலா,
என்பன தொன்று தொட்ட வழக்கு.

ஆளேறுந்துலா
துன்—துறு =
பொருந்து, நெருங்கு.

தூண் : துண்—தூண் = துணிக்கப்பட்ட
அம் = தூணம்—ஸ்தூண (வ.).

கல். தூண் +

தூது : ஊ> தூ> தூது.

தெய்வம் :

தேய்> தேய்வு> தெய்வு> தெய்வம். தேய்வு>
தேவு> தேவன். தேவு> தே. தெய்வம் = தீ
கடவுள்.

வடிவான

நகர் : நகர்தல் = மெல்ல இடம் பெயர்தல், விரிவடைதல்.
நகர் = குடி பெருகப் பெருக மெல்ல மெல்ல விரியும்
மனை அல்லது ஊர்.

நாகம் : நகர்> நாகம்> நாகர்.
*snicau* to creep.

ஒ. நோ : snake, *L. S.*



**நாவாய் :** நால்வாய் > நாவாய் = யானைபோல் அசையும்
கப்பல்.
"நாவாய்—களிகள் போற்றாங்குங் கடற்சேர்ப்ப"
என்பது பழமொழி.

"வெளிவிளக்குங் களிறு போலத்
தீம்புகார்த் திரை முன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை"
என்பது பட்டினப்பாலை.

**நுகம் :** உகத்தல் = பொருந்துதல், நுகம் = காளைகளை வண்டியிற்
ஏற்றல், உகம் > (யுகம்) பொருத்தும் அல்லது
பூட்டுங்கோல். உவ > உக.
உக + மை = உவமை.
உ + தி = உத்தி — பொருத்தம்.
உ—ஒ—ஓ. ஓ +

இயம் = ஒலியம்.

**நேயம்:** நெய்> நேயம்.

**படிவம்:** பள்> படு> படி> படிவு> படிவம், படிவு> வடிவு, படிவம்> வடிவம், படிதல் = விழுதல், பதிதல் —படிவு = ஒன்றின்மேலொன்று பதிதல் =, படிவம் = பதிந்த உருவம், உருவம்.

**பதம்:** பதி + அம் = பதம்> பாதம் = நிலத்திற் பதியும்

உறுப்பு, காலடி.

**பதி:** படி> பதி = பதிவாயிருக்கும் நகர். பதி> வதி> வசி (வ.). பதிதல் = தங்குதல்.

**பாணி:** பண்> பாணி = ஒரு வினையைப் பண்ணும் கை. கையாற் போடும் தாளம், தாளத்தையுடைய பாட்டு, பாட்டின் ஓசை. ஒ. நோ: செய்> (சை)> கை.

**பிண்டம்:** பிடி> பிண்டி> பிண்டம் = பிடித்த அல்லது திரட்டின உணவு, திரட்சி, உறுப்புக்கள் சேர்ந்த உடம்பு, முழுப்பகுதி. பிண்டி—E. bind, A. S. bindan Ger, binden, Sans, bandh.

**பூதம்:** பொந்து > பொத்து > பூதம் = பெரியது, பெரும் பேய். பொந்தன் = தடியன். பொந்தன்—மொந்தன் = தடி வாழைக்காய்.

**மண்டிலம்:** மண் + தலம் = மண்டலம் > மண்டிலம் = ஞாலம்போல் வட்டமாயிருப்பது, வட்டம். தலை—தலம் = இடம். மண்டலம் = ௪0 அல்லது ௪௮ நாள் கொண்ட ஒரு காலவட்டம், ஒரு நாட்டு வட்ட = இனி, மண்டு > மண்டல் > மண்டலம் > மண்டிலம் என்றுமாம். மண்டு = வளை. மண்டிலம் என்பது யாப்பிலக்கணத்தில் ஒரு குறியீடு.

**மணி:** மண் > மண்ணி > மணி = கழுவப்பட்டதுபோல் ஒளியுள்ள முத்து. மண்ணுதல் = கழுவுதல், அலங்கரித்தல்.

" மண்ணுறு மணியின் மாசற மண்ணி,"

என்பதை (புறம். ௧௪௭) நோக்குக.

**மதி:** மத > மதர் > மதி = மயக்கஞ் செய்வதாய்க் கருதப்பட்ட நிலா. ஒ. நோ: E. lunacy, from L. *luna*, = moon மதி + அம் = மதியம் = முழுநிலா.

**மது:** மதர் > மது = மயக்கந்தருவது.

மருந்து : மரு> மருந்து = நோயை நீக்கும் வாசனைத் தழை. மருந்துச் சரக்கு.

மாடம் : மே> மேடு> (மேடி) > மாடி> மாடம் = உயர்ந்த கட்டிடம், மேனிலை.

மாத்திரை : மதி> மா. மா + திரை = மாத்திரை = அளவு. மா + திரம் = மாத்திரம் = மட்டு, அளவு. மா + அனம் = மானம் — மதிப்பு, அளவு, படி. மா என்பது ஓர் அளவு.

மாயம் : மாய் + அம் = மாயம். மாய் + ஐ = மாயை = விரைந்து மாய்ந்து மயக்குவது, மயக்கம்.



மாலை : முள் — முள — முய — முயல் — மயல்> மால்> மாலை = பூக்கள் மயங்கிய தொடை, பகலும் இரவுங் கலக்கும் வேளை. ஒ. நோ : முயங்கு — மயங்கு.

மீன் : மின்> மீன்> மீனம்.

**முகம்:** ஊ > மூ > முகம் = முன்னாலிருப்பது, தலையின் முன் பக்கம், முன்பக்கம். துறைமுகம், போர்முகம், நுதி முகம் என்பன ஒவ்வோர் முன்னிடத்தைக் குறிக்கும். முகப்பு —முன்புறம் முகம் > முகன் > முகனை > மோனை முகம் > முகமன். முகம் > முகர் > முகரை. புகர்முகம், செம்முகம், களிற்றுமுகம் முதலிய புறநானூற்றுத் தொடர்களில் முகமே குறிக்கப்பட்டது. கருமுகமந்தி ஆறுமுகம், திருமுகப் பொலிவு, முகங் கோணுதல் முகஞ் சுளித்தல் முதலிய பல தொடர்களிலும் அஃதே.

"நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" என்றார் திருவள்ளுவர். நூன்முகம், முகவுரை முதலியவை நூலின் முற்பகுதியாகும். முகம் என்னுஞ் சொல் தமிழில் ஒருபோதும் வடமொழியிற்போல் வாயைக் குறிக்காது. முகம் = முன்னிடம், இடம். முகத்தல் = தன்னிடத்துக் கொள்ளுதல், உள்ளிட்டளத்தல்.

**முத்தம் :** முட்டு > முத்து > முத்தம் > முக்த (வ.) ஆமணக்கு குருக்கு முதலியவற்றின் விதைகள் முட்டி வெடிப்பதால் முதலாவது முத்தெனப்பட்டன. அவ் விதைகள் போற்சிப்பிக்குள்ளிருக்கும் மணியும் முத்தெனப்பட்டது. பண்டைக் காலத்தில் முத்திற்குச் சிறந்தது செந்தமிழ்ப் பாண்டிநாடே.

**முரசு :** முரண் > முரடு > முரசு => முரஜ (வ.) = உருட்டுக் கட்டையிற் கடைந்து செய்த மத்தளம். முரடு > முருடு.

**வட்டம் :** வள் + தம் = வட்டம். இனி, வட்டு + அம் = வட்டம் என்றுமாம். வள் என்னும் வழிவேர் தமிழிற்



பல்வேறு வடிவங்கொண்டு நூற்றுக் கணக்கான சொற்களைப் பிறப்பிக்கும். வருத்த என்னும் வடசொல் தமிழில் வட்டம் என்று திரியவில்லை. வட்டம் என்னும் சொல்லே வருத்த என்று திரிந்தது. வளை, வள்ளம், வட்டு, வட்டி, வண்டு, வணர், வணங்கு, வளர், வளார் வள்ளி, வரி, வரை, பரி முதலிய பல சொற்கட்கும் வள் என்பதே வேர். இச் சொற்கட்கெல்லாம் இனமானவை வடமொழியிலில்லை. வட்ட —வ்ருத்த (வ.), *L. verto*, to turn.

**வண்ணம் :** வரி + அணம் = வரணம் > வண்ணம். வரி = வரைவு, நிறம், எழுத்து, பாட்டு, வரணனை.

வரணம் = வரைவு, எழுத்து, பாட்டு, நிறம், குலம்.

வண்ணம் = நிறம், வகை, பாட்டு, சந்தம்.

**வணிகன் :** வாணி > வாணிகம் > வாணிகன் > வணிகன் =

விலை கூறிப் பொருள் விற்பவன். வாணி = சொல், வாணிகன் > வாணியன். இனி, வள் > வணிகம் > வாணிகம் என்றுமாம். வளவு பொருள் வளர்ச்சியைக் குறிக்கும். தனித்தமிழ்ப் பகுப்பான நால்வகை மக்கட் பிரிவில், விற்பனையாளர் வணிகர் அல்லது வாணிகர் என்னுஞ் சொல்லாலேயே தொன்றுதொட்டுக் குறிக்கப்படுகின்றனர்.

**வதி:** மேற்கூறப்பட்டது.

**வள்ளி:** வள் > வள்ளி > வல்லி > வளைந்த கொடி. ஒ. கொடு > கொடி.

நோ:

**வேகம்:** வேகு + அம் = வேகம் = கொதிப்பு, கடுமை, கடுஞ் செலவு. சுறுசுறுப்பு, சூட்டிக்கை என்பனவும் நெருப்புக் குறித்த சொல்லினின்றும் பிறந்தவையே. தீப்பற்றிய பொருள்கள் விரைவாய் வெந்துவிடுவதால் விரைவு வேகம் எனப்பட்டது.

அன்னப் (பறவை) சகடம், தாமரை, தாரம் (பண்டம்) முதலிய சில சொற்கட்கு இதுபோது வேர்ப்பொருள்

தெரியாவிடினும், இவை தென்சொற்களே என்பது தேற்றம். இச்சொற்கள் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகளானமையாலும், இவற்றின் வேர்ப்பொருளைக் காட்டக்கூடிய பிற சொற்கள் இறந்தொழிந்தமையாலும், பண்டைக் காலத்துச் சொல்லியலகராதி யொன்றும் நமக்கின்மையாலும், இவற்றின் வேர்ப்பொருளை அறிய இடமில்லை.

(6) சொல்வடிவு மாற்றம்.

எ - டு: உயர்த்தி-உசத்தி-ஒசத்தி—ஒஸ்தி,

வேட்டி-வேஷ்டி.

(7) தூய்மையிழப்பு.

எ - டு:

வேண்டாத பிறமொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்க வழங்க, அதன் தூய்மை கெடுவது ஒருதலை.

(8) மொழிவழக்கழிவு.

௪-டு: தமிழ்ச்சொற்களெல்லாம் ஒவ்வொன்றாய் வழக்கு வீழ்ந்து கொண்டே செல்லின், இறுதியில் தமிழென் ஒரு மொழியே யிராதுபோம் என்பது உறுதி. பின்பு, இது வரை அதைப் புகழ்ந்து வந்ததிற்கு மாறாக,

ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதைந்தாயுன்
சீரழிவுத் திறம் நினைந்து செயலற்று வருந்துதுமே.

என்று இரங்கவே நேரும்.

களிப்பு, மகிழ்ச்சி, உவகை என மூன்று தமிழ்ச்சொற் களிருப்பவும், அவற்றுள் ஒன்றேனும் வழங்காமல் ஆனந் தம், சந்தோஷம் என்ற வடசொற்களே வழங்கி வருவதை ஒரு காட்டாகக் கூண்டு தெளிக.

## எ. அருவடிவச் சொற்கள்

**அணிந்தன்று:** அணிந்து + அன்று = அணிந்தன்று = அணிந்தது. அன் + அது = அன்னது = அத்தகையது, அது. அன் + து (அது) = அன்று = அது.

---



**அறிதீ:** அறியும்-அறியுந் + ஈ = அறியுநீ - அறியுதீ - அறிதீ - அறிதி-1. முன்னிலையொருமை நிகழ்கால வினைமுற்று

2. „ „ எதிர்கால „
3. ஏவல் „ வினைமுற்று.

இனி, அறியும் + நீ = அறியுநீ—அறியுதி என்றுமாம். ந—த, போலி. ஒ. நோ: நுனி—நுதி—துதி. 'தி' முன்னிலை யொருமை விகுதியாகக் கருதப்பட்டபின் 'ஒத்தி' போன்ற வினைகள் தோன்றின. ஒரு காலத்தில் 'செய்யும்' என்னும் முற்று தன்மை முன்னிலையிலும் வழங்கிற்று.

அடுநை: அடும்—அடுந் + ஐ = அடுநை. ஈ—ஏ—ஐ, னிலை யொருமை விகுதி.

முன்

அறஞ்செய் தீமோ: அறஞ்செய்து + ஈயும் + ஓ = அறஞ் செய்தீயுமோ—அறஞ்செய்தீமோ. ஈயும் = அருளும், இடும் (துணைவினை); ஓ, ஆர்வக் குறிப்பிடைச் சொல்.

அறிந்தீயார்: அறிந்து + ஈயார் = அறிந்தீயார் = அறிந்திடார் (அறியார்): ஈ—இடு (துணைவினை).

அறியுமோன்:
மான் —

அறியும் + அவன் = அறியுமவன் — அறியு
அறியுமோன். "ஆஒ வாகுஞ் செய்யு
ளுள்ளே."

அறுமார்: அறுவார் — அறுமார் = அறுதற்கு.
வார் — உண்ணுமார் — உண்மார் = உண்ண.

உண்ணு
கொள்
வார் — கொள்மார் — கொண்மார் = கொள்ள. பண்டைக்காலத்தில் ஒவ்வோர் எதிர்காலவினை முற்றும் 'செய்வான்' என்னும் வினையெச்சமாக வழங்கிவந்தது. பிற்காலத்தில், ஆண்பாற் படர்க்கையொழிந்த மற்றெல்லாம் வழக்குவீழ, அவ்வாண்பாற் படர்க்கையே எல்லாவற்றுக்கும் பொதுவாக வழங்கி வருகின்றது. இதுவே 'வான்' 'பான்' ஈற்று வினையெச்சம்.



அன்று (அன்றி): அல்லாது — அல்லது — அன்று (அல் + து), இல்லாது—இல்லது—இன்று. சொல்லாது போனான், நன்று சொன்னாய் என்னும் வழக்குகளை நோக்குக.

ஆகியர்: ஆகு + ஈயர் = ஆகீயர்—ஆகியர் = ஆகுக. ஈயல் —ஈயர்—இயர். ஈயல் = ஈக, இடுக (துணைவினை). ஒ. நோ: செயல் = செய்க. "இருடீர வெண்ணிச் செயல்."

ஆகின்யர்: ஆகு + இல் = இயர் = ஆகிலியர். ஆகின்று:

ஆகு + இன் + து (அது) = ஆகின்று = ஆகின்து.

**ஆகுப:** (ஆவன, எ). ஆப: (ஆவர், உகஅ). ஆவ, ஆகுவ என்பன பண்டைக் காலத்தில் இருதிணைப் பொதுவா

யிருந்தன. பின்பு வ>ப எனத் திரிந்த பின், ப உயர் திணைக்கும் வ அஃறிணைக்கும் வரையறுக்கப்பட்டன.

**இரீஇ:** இரி = இருந்து, இரீ = இரித்தி: இரீஇ (இருத்தி) அளபெடை. உடீஇ கொளீஇ என்பனவும் இங்ஙனமே. ஈற்றுயிர் நீளுதலும் பிறவினையாகும் வகை போலும்! ஒ. நோ: உறு—உறா = உறுத்து, உறாஉ, அளபெடை. இனி, இரி—இரீஇ என அளபெடையே பிறவினையாகும் வகை என்றுமாம்.

**இரீயர்:** (இறுக): ஈயல்—ஈயர். இறு + ஈயர் = இரீயர் செலீயர் நீலீயர் என்பனவும் இங்ஙனமே.

**ஈங்கனம்:** ஈங்கு + இனம் = ஈங்கனம்—இங்கனம் — இங்ஙனம்—இங்ஙன். இங்ஙனம்—இன்னணம். ஆங்கனம் யாங்கனம் என்பனவும் இங்ஙனமே.

**ஈன்மர்:** ஈனுவார்—ஈனுவர்—ஈனுமர்—ஈன்மர்.

**உண்கு:** செய்வு—செய்கு = செய்வேன் (ஒருமை), செய்கு + ம் = செய்கும் = செய்வேம் (பன்மை). உண்கு = உண்பேன். உண்கும் = உண்பேம்.

என்கோ = என்பேனோ ? (வினா).

என்கு + ஒ =



உணா : உண் + ஆ = உணா. 'ஆ' வும் ஒரு தொழிற்பெயர் விகுதியாகும். இரா, நிலா, பிணா முதலியவை முதற் காலத் தொழிலாகு பெயர்கள். 'ஆல்' விகுதியே 'ஆ' வாகக் குறைந்த தெனினுமாம்.

உண்மென : உண்ணும் + என = உ ண் ணு மெ ன — உண் மென.

உணர்த்திய : உணர்த்து + ஈய = உணர்த்திய — உணர்த் திய = உணர்த்த.

உந்து : (பெயரெச்ச விகுதி) :

“உம் உந்தாகும் இடமாருண்டே” (தொல், எஎஎ)

உய்ந்திசினோர் : (உய்ந்தோர்) உய்ந்து + ஈயினோர் = உய்ந் தீயினோர் — உய்ந்திசினோர் — உய்ந்தசினோர். ஈ, துணை வினை. ஒ. நோ : ஆயினோர், போயினோர்.

உயரி : உயரி = உயர்த்தி. உயரிய :

உயரிய = உயர்த்திய.

உரைத்திசின் (உரைப்பாய்) :

உரைத்து + ஈயேன்—உரைத்
தீயேன் — உரைத்தீயின் —
உரைத்திசின் — உரைத்
திசின். ஈயேன்—'ஏன்' ஆர்வப் பொருள் படுவதோர்
விகுதி. ஒ. நோ:
வாவேன = வரமாட்டாயா, சொல்
லுங்களேன் = சொல்லமாட்டீர்களா.

உருற்க: உறு + அல் + க = உறற்க—உருற்க. க விகுதி
படிக்க, விடுக்க என்னும் வியங்கோள்களினின்று
தோன்றியது.

ஏத்துகம்: ஏத்துவம்—ஏத்துகம். வ—க, போலி.

ஏனோர்: ஏ—ஏன்.—ஏனோர் = யார்? ஏ—யா.

கண்டிகும்: கண்டு + ? ஒ. வே. கண்டு + யாம் = கண்டியாம்
—கண்டியம்—கண்டிகம்—கண்டிகும்.

கண்டிசின்: (கண்டேன்): கண்டு + ஈயேன் = கண்டீயேன்
—கண்டீயின்—கண்டீசின்—கண்டிசின். ஈயேன் =



ஈந்தேன், இட்டேன் (துணைவினை) ஒ. நோ: போ
யேன் = போனேன்.

ഩ

கழிப்பி (கழித்து): கழிப்பு என்னும் தொழிற்பெயரே மீண்டும் பகுதியாயிற்றுப்போலும். ஒ. நோ: நகு—நகை—நகைத்து. இனி கழி + பு = கழிப்பு, பிறவினை என்றுமாம்.

களைமே (களைவாய்): களையும் + ஏ = களையுமே—களைமே. 'களையும்' பால்வழுவமைதி. செய்யுமே—செய்ம்மே. 'ஏ' ஆர்வப் பொருள் விகுதி. 'ஏன்' விகுதி 'ஏ' எனக் குறைந்ததெனினுமாம், 'மொழிமோ' என்பதில் 'ஓ' இப்பொருள்பட வந்தது.

காண்குவந்திசின்: காண்கு, காண்பேன் (முற்றெச்சம்),

காணூஉ (கண்டு): காணூ—ணூஉ அளபெடை. 'செய்யூ' வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

குரீஇ: குரி (குருவி) என்பது பண்டை வடிவம்போலும். குரீஇ, அளபெடை.

கேளலம்: கேள் + அல் — அம் = கேளலம்.

சாயின்று: சாய் + இன் + து (அது) = சாயின்று. சாயினது—சாயின்று. ஆயினது போயினது என்பவற்றொடு ஒப்பு நோக்குக. இன்னது—இனது—இன்று.

தொலைச்சி: (தொலைத்து) தொலைச்சு—தொலைச் தொலை + சு = தொலைச்சு, பிறவினை.

## நி.

நிலியரோ:

நில் + இயர் + ஓ = நிலியரோ = நிற்க. ஈயல்—ஈயர்—இயர். ஒ, அசைநிலை ;

ஆர்வப்பொருட்டுமாம்.

பழுனி : பழுத்து—பழுன்னு—பழுன்னி—பழுனி.

மரீஇ : மரி = மருவி. மரீஇ, அளபெடை.

வைகுதும் : வை + உது + ம் = வைகுவோம். 'உது,' தன்மையொருமை எதிர்காலவினைமுற்று விகுதி ; 'ம்' (உம்) தன்மைப் பன்மை விகுதி.

